உ

கணபதி துணை.

எட்டுத்தொகையுள் நான்காவதாகிய

# பதிற்றுப்பத்துமூலமும்,

## பழையவுரையும்.



இவை,

சென்னைப் பிரஸிடென்ஸிகாலேஜ் தமிழ்ப்பண்டிதராகிய

உத்தமதானபுரம்

**வே. சாமிநாதையரால்**

பலபிரதிருபங்களைக்கொண்டு பரிசோதித்து,

சென்னபட்டணம்:

**வைஜயந்தி அச்சுக்கூடத்திற்**

பதிப்பிக்கப்பட்டன.

குரோதி௵ ஆனிமீ

1904.

விலை ரூ. ௧ ௨.

# இப்புத்தகத்தில் அடங்கியவை.

௬. பதிற்றுப்பத்து மூலமும் பழையவுரையும். } ௧.

௭. பதிற்றுப்பத்துச் செய்யுளகராதி. ௧௫௨. ௮.

பதிற்றுப்பத்தின் பிரயோகவிளக்கம். ௧௫௯. ௯.

அரும்பத வகராதி முதலியன. ௧௬௧.

---

## இப்பதிப்பில் எடுத்துக் காட்டிய நூல்கள் முதலியவற்றின் முதற்குறிப்புக்கள்.

அகநா - அகநானூறு.

அச் - அச்சுப்புத்தகம்.

அடி - அடியார்க்கு நல்லாருரை.

இ. வி - இலக்கணவிளக்கவுரை.

இரண் - இரண்டாம்பத்து.

இலக் - இலக்கணையாரிலம்பகம்.

இறை - இறையனாரகப்பொருள்.

ஐங் - ஐங்குறுநூறு.

ஐந். எ0 - ஐந்திணை எழுபது.

கனக - கனகமாலையாரிலம்பகம்.

காந்த - காந்தருவதத்தையாரிலம்பகம்.

குணமா - குணமாலையாரிலம்பகம்.

குறிஞ் - குறிஞ்சிப்பாட்டு.

குறு - குறுந்தொகை.

சிலப் - சிலப்பதிகாரம்.

திணைமொ. நூo - திணைமொழி ஐம்
திருக் - திருக்குறள். [பது.
திருமு - திருமுருகாற்றுப்படை.
திருவள் - திருவள்ளுவமாலை.
தொல் - தொல்காப்பியம.
ந - நச்சினர்க்கினியருரை.

நற் - நற்றிணை.

நாம - நாமகளிலம்பகம்.

நெடுநல் - நெடுநல்வாடை.

• • •

பக - பககம.

பத் - பத்துப்பாட்டு.

பதி - பதிகம்.

பதிற் - பதிற்றுப்பத்து.
பரி - பரிமேலழகருரை.
புறத் - புறத்திரட்டு.

சிறுபா - சிறுபாணாற்றுப்படை.
சீவ - சீவகசிந்தாமணி.
சுர - சுரமஞ்சரியாரிலம்பகம்.
சூ - சூத்திரம்.
சொல் - சொல்லதிகாரம்.
தகடூர் - தகடூர்யாத்திரை.
திணைமா - திணைமாலை நூற்றைம்பது.
புறத்தி - புறத்திணையியல்.
புறநா - புறநானூறு.
பெரும்பா - பெரும்பாணாற்றுப்படை.
பொரு - பொருளதிகாரம்.
மண் - மண்மகளிலம்பகம்.
மது - மதுரைக்காஞ்சி.
மு - முற்றும்.

---

உ

கணபதி துணை

# முகவுரை.

---

"சந்தனப் பொதியத் தடவரைச் செந்தமிழ்ப்

பரமா சாரியன் பதங்கள்
சிரமேற் கொள்ளுதுங் திகழ்தாற் பொருட்டே."

பதிற்றுப்பத்தென்பது, தமிழ்ப்பாஷையிலுள்ள பழைய இலக் கிய நூல்களுள்ளே நல்லிசைப்புலவர்களருளிச்செய்த சங்கச்செய் யுட்களாகிய * எட்டுத்தொகைகளில் நான்காவது; புராதன இலக்கண இலக்கியவுரைகளில் மேற்கோளாக எடுத்துக்காட்டப்பெற்ற பெருமை வாய்ந்தது; முடியுடை வேந்தர்களாகிய சேரர்பதின்மர்கள்மீது சங்கப்புலவர் பதின்மர்கள் இயற்றியது; ஐந்திலக்கணங்களுள்ளே பொரு ளின் பகுதியாகிய புறத்திணைத்துறைகளுக்கு இலக்கியமாக அமைந் துள்ளது.

பப்பத்து அகவற்பாக்களுள்ள பத்துப்பகுதிகளால் தொகுக்கப் பட்டமையின், இந்நூல் பதிற்றுப்பத்தென்று பெயர்பெற்றது.

இந்நூலிலே தமிழ்நாட்டின் பண்டைக்கால நிலைமையும், சில சேரர்கள், சில குறுநில மன்னர்கள் முதலியோருடைய வரலாறுகளும் அவர்களுடைய அரசாட்சி, வீரம், கொடை, புலவர்களை அவர்கள் ஆதரித்துவந்த அருமை முதலியனவும் சேரநாட்டின் பழைய வழக் கங்கள் சிலவும் இக்காலத்து வழங்காத சில அரும்பதங்களும் வேறுள்ள சில அரிய விஷயங்களும் காணலாகும்.

கிடைத்த இந்நூற்கையெழுத்துப்பிரதிகளுள் ஒன்றிலேனும் கடவுள்வாழ்த்தும் முதற்பத்தும் பத்தாம்பத்தும் அவற்றின் உரையும் காணப்படவில்லை ; உள்ள எட்டுப்பத்திலுங்கூடச் சிலசிலவிடத்து மூலங்கள் குறைந்தும் உரைகள் சிதைந்தும் பிறழ்ந்தும் காணப்பட்டன. அந்தவிஷயத்தில் நான் செய்யக்கூடியது யாதொன்றுமில்லாமை யால், அவை இருந்தவாறே பதிப்பிக்கப்பெற்றன.

* எட்டுத்தொகைகளாவன : நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, பதிற்றுப்பத்து, பரிபாடல், கலித்தொகை, அகநானூறு, புறநானூறென்பன. இவற்றின் வரலாற்றைப் புறநானூற்றின் அச்சுப்புத்தக முகவுரையிற் காண்க.



மேற்கூறிய எட்டுப்பத்திலும் இல்லாத இந்நூற்பாடல்கள் சில, தொல்காப்பியப் பொருளதிகாரவுரையால் தெரியவந்தன. அவை வருமாறு :—

௧

"" இருங்கண் யானையொ டருங்கலந் துறுத்துப்
பணிந்து குறைமொழிவ தல்லது பகைவர்
வணங்கா ராதல் யாவதோ மற்றே.''

இதுவுமது. இது பதிற்றுப்பத்து.'—(தொல். பொரு. அச். பக். கஙக.)

' இத்திணைக்குப் படையியங்கரவமுதலியனவும் அதிகாரத்தாற் கொள்க. அது,

" இலங்குதொடி மருப்பிற் கடாஅம் வார்ந்து
நிலம்புடையூ வெழுதரும் வலம்படு குஞ்சர
மெரியவிழ்ந் தன்ன விரியுளை சூட்டிக்
கால்கிளர்ந் தன்ன கடுஞ்செல விவுளி
கோன்முனைக் கொடியினம் விரவா வல்லோ
டுன்விணை கடுக்குந் தோன்றல பெரிதெழுந்
தருவியி னொலிக்கும் வரிபுனை நெடுந்தேர்
கண்வேட் டனவே முரசங் கண்ணுற்றுத்
ததழுவு மாதிரங் கல்லென வொலிப்பக்
கறங்கிசை வயிரொடு வலம்புரி யார்ப்ப
நெடுமதி னிரைஞாயிற்
கடிமிளைக் குண்டு கிடங்கி
னம்புடை யாரர ணகரப் புடைத்தே
நெஞ்சுபுக லழிந்து நிலைதளர் பொரீஇ
யொல்லா மன்னர் நடுங்க
நல்ல மன்றவிவ ணீங்கிய செலவே."—

(தொல் - பொரு. அச், பக். கநகூ.)

" இலங்குதொடிமருப்பின்" என்னும்பதிற்றுப்பத்து உள்ளியது

முடிக்கும் வேந்தனதுசிறப்பாகிய உழிஞையாயினும்
பதின்றுலாம் பொன் பரிசில்பெற்றமையிற்
பாடாணயிற்று.'—(தொல். பொரு.
அச். பக். ககூo.)



' "விசயந்தப்பிய" என்னும் பதிற்றுப்பத்து ஈஎக
கூறிற்று.' (தொல். பொரு. அச். பக். ககூ௬.)

' "பேணுதகு சிறப்பிற் பெண்ணியல் பாயினு
மென்னொடு புரையுந ளல்ல
டன்னொடு புரையுநர்த் தானறி குநளே."

எனப் பதிற்றுப்பத்தில் வந்தது.'—(தொல்-பொரு. அச்.
பக். சஉ௬.)

இவை, முதற்பத்து, பத்தாம்பத்தினுள் இன்ன பகுதியைச்
சார்ந்தவையென்று விளங்கவில்லை.

ஷை புத்தகம் [தொல். பொரு.] ககூஉ - ம் பக்கத்துள்ள,
" எரி யெள்ளுவன" என்னுஞ்செய்யுள் பதிற்றுப்பத்தின்
கடவுள்வாழ்த்தாக இருக்கக்கூடுமோவென்று எண்ணப்படுகிறது;
உண்மை விளங்கவில்லை.

கிடைத்த எட்டுப்பத்தினுள்,—

இரண்டாம்பத்து,

இமயவரம்பன்நெடுஞ்சேரலாதனைக் குமட்டூர்க் கண்ணனார்பாடி

யது.

மூன்றும்பத்து, இமயவரம்பன் தம்பி பல்யானைச்செல்கெழுகுட்டுவனைப் பாலைக்கௌதமனார் பாடியது.

நாலாம்பத்து, களங்காய்க்கண்ணிநார்முடிச்சேரலைக் காப்பியாற்றுக்காப்பியனார்பாடியது.

ஐந்தாம்பத்து, கடல்பிறக்கோட்டிய செங்குட்டுவனைப் பரணர் பாடியது.

ஆறும்பத்து, ஆடுகோட்பாட்டுச்சேரலாதனைக் காக்கைபாடினியார் நச்செள்ளையார் பாடியது.

ஏழாம்பத்து, செல்வக்கடுங்கோவாழியாதனைக் கபிலர் பாடியது.

எட்டாம்பத்து, தகடூரெறிந்தபெருஞ்சேரலிரும்பொறையை அரிசில்கிழார் பாடியது.

ஒன்பதாம்பத்து, குடக்கோஇளஞ்சேரலிரும்பொறையைப் பெருங்குன்றூர்கிழார் பாடியது.

இவ்வரலாற்றின் விரிவை ஒவ்வொருபத்திற்கும் இறுதியிலுள்ள பதிகங்களால் அறிந்துகொள்க.

இந்நூலின் உரை இன்றியமையாத இடங்களிற் பதப்பொருளை இனிதுவிளக்கி ஆங்காங்குச் சொன்னயம்பொருணயங்களையும் சொன்

முடிபுபொருண்முடிபுகளையும் உரியஇடங்களில் இலக்கணக்குறிப்புக் களையும் நன்குபுலப்படுத்திப் பழைய செய்திகள்சிலவற்றைத்தெரி வித்து ஒவ்வொருசெய்யுளின்பின்னும்அமைந்துள்ள துறை, வண்ணம், தூக்கு இவற்றைவிளக்கவேண்டியஇடங்களில்விளக்கிச்செய்யுட்களுடைய * பெயர்களின்காரணங்களை அங்கங்கே தெரிவித்து மிகச் செவ்விதாக அமைந்துள்ளது. இவ்வுரை இல்லையாயின், இந்நூற்பொருளை இக்காலத்தில் அறிந்துகொள்ளுதல் மிக அரிது. [வண்ணம் - செய்யுட்களின்சந்தம். தூக்கு - பாக்களைத் துணித்து நிறுத்தல்.]

இவ்வுரையாசிரியர் இன்னாரென்றும் இன்னகாலத்தவரென்றும் தெரியவில்லை ; ஆனாலும் இந்நூல் எசுஎம் பாட்டினுரையில், [பக். கருo.] 'சின்மையைச் சின்னூலென்றதுபோல ஈண்டுச் சிறுமை யாகக்கொள்க' என்று எழுதியிருத்தலால், இவருடையகாலம், நேமி நாத நூலாசிரியராகிய குணவீரபண்டிதருடைய காலத்திற்குப் பிற் காலமென்று தெரிகின்றது. [சின்னூல் - நேமிநாதம்.] இவருடைய உரைநடையை உற்றுநோக்கின்,

பேராசிரியர்முதலியோர்களுள் ஒருவரோ அல்லது பண்டைக்காலத்து அவர்களைப்போலவிளங்கிய வேறு யாரோவென்று இவர் எண்ணப்படுகிறார்.

ஒவ்வொருசெய்யுளின்பின்னும் அமைந்துள்ள துறை, வண்ணம், தூக்கு, பெயரென்பவைகள் உரையில்லாத மூலப்பிரதிகளிலெல்லா மிருத்தலின், அவை உரையாசிரியரால் எழுதப்பட்டனவல்லவென்றும் நூலாசிரியர்களாலோ தொகுத்தோராலோ எழுதப்பட்டனவென்றும் பதிகங்கள் உரைப்பிரதிகளில் மட்டும் காணப்படுகின்றமையால் அவற்றை இயற்றினோர் நூலாசிரியரல்லரென்றும் தெரிகின்றன.

ஆசிரியர் நச்சினார்க்கினியராலும் அடியார்க்கு நல்லாராலும் தத் தம் உரைகளில் எடுத்தாளப்பெற்றிருத்தலின், இப்பதிகங்கள் அவர் கள் காலத்திற்கு முந்தியவை யென்று தோற்றுகின்றது.

---

* பத்துப்பாட்டினுள் ௧௦-வது பாட்டு, தன்பாலுள்ள பொருட்சிறப் பெய்திய [அடி, ௩௪௮.] மலைபடுகடாமென்னும் தொடர்மொழியையே தன் பெயராகக்கொண்டு வழங்கிவருகின்றாற்போலப் பதிற்றுப்பத்துப்பாடல்க ளெல்லாம் தம்மிடத்துள்ள தொடர்மொழிகளுள் அடைமொழிச்சிறப்பாதல் பொருட்பொலிவாதல் பெற்றனவற்றையே தம்பெயர்களாகக்கொண்டு தொன்றுதொட்டு வழங்கிவருகின்றன.

பதிற்றுப்பத்தில் வந்துள்ள துறைகள் முதலியன வருமாறு :—

[சிலவற்றின் பின்னுள்ள எண்கள் உரையாசிரியரால் அவற்றிற் குரிய இலக்கண மெழுதப்பெற்ற செய்யுட்களைப் புலப்படுத்துவன.]

துறைகள் :—இயன்மொழிவாழ்த்து, உழிஞைஅரவம்-என, ஒள் வாளமலை, களவழி - ரு சு, காட்சிவாழ்த்து - சக, காவன்முல்லை - அசு, குரவைநிலை - ருஉ, செந்துறைப்பாடாண்பாட்டு - ருஅ, சுசு, தும்பையரவம் - ந.௪. நாடுவாழ்த்து, பரிசிற்றுறைப்பாடாண்பாட்டு - கசு, பாணாற்றுப்படை, பெருஞ்சோற்றுநிலை, முல்லை - அக, வஞ்சித் துறைப்பாடாண்பாட்டு - உஉ, உரு, உநி, உசு, உசு, ருரு, ருO, ருக, அO, வாகை - ரு சு, வாகைத்துறைப்பாடாண்பாட்டு - ருநி, விறலியாற்றுப்படை.

வண்ணங்கள் :—ஒழுகுவண்ணம், ஒழுகுவண்ணமும் சொற்சீர் வண்ணமும் - கச, கசு; சொற்சீர் வண்ணம், கச, கசு.

தூக்குக்கள் :—செந்தூக்கு, செந்தூக்கும் வஞ்சித்தூக்கும் - கரு, உO, உஉ, உநி, ருரு, ருக, சுசு, அO, சுO, வஞ்சித்தூக்கு - கரு, உO, உஉ, உநி, உசு, ருரு, ரு௪.

௫௧, ௯௯, ௮0, ௯0.

உரையில் மேற்கோளாக வந்துள்ள நூல்கள் : ௧. திருக்குறள், ௨. பதிற்றுப்பத்து, ௩. புறநானூறு, ௪. மதுரைக்காஞ்சி.

இந்நூலில் வந்துள்ள கடவுட்பெயர்கள் முதலியவற்றையும் அவைகள் உள்ள இடங்களையும் இப்புத்தகத்தின் பின்னுள்ள அகராதியிற்காண்க.

இந்நூலை ஒப்புநோக்குதல் முதலிய பேருதவிபுரிந்தவர்களுள், கும்பகோணம் டௌன் ஹைஸ்கூல் முதல் தமிழ்ப்பண்டிதராகிய ம-௱- ௱ -ஸ்ரீ அ. நாராயணஸாமியையரவர்கள் செய்துவந்த பேருதவி மிகப் பாராட்டற்பாலது.

இந்நூலின் பெருமையையறியாமற் பரிசோதித்தற்குத் துணிந்த என்னுடைய பெருங்குற்றத்தை விவேகிகள் பொறுத்தருள்வார்களென்று நம்புகிறேன்.

---

6 முகவுரை.

## கிடைத்த கையெழுத்துப் பிரதிகள்.

திருவாவடுதுறை ஆதீனத்துப் ... ...

பிரதி க சென்னையிலுள்ள இராஜாங்கத்துக் கையெழுத்துப்

புஸ்தக சாலை ... ... ,,

க (Government Oriental Manuscripts Library, Madras.)

ஆழ்வார் திருநகரி,

ஸ்ரீ. தே. லக்ஷ்மண கவிராயரவர்கள் வீட்டு ,,

க ம-ா-ா ஸ்ரீ ஜே. எம். வேலுப்பிள்ளையவர்கள், F. M. U. ,,

க

திருமயிலை வித்துவான்.

,, சண்முகம் பிள்ளையவர்கள் ... ,,

க

,, தி. த. கனகசுந்தரம் பிள்ளையவர்கள், B. A. ,,

க

---

இன்னும் அப்பொழுது அப்பொழுது ஒப்பிடுதற்குக் கிடைத்த பிரதிகள் சில.

இங்ஙனம் வே. சாமிநாதையன்.

உ

# நூலாசிரியர்கள் வரலாறு.

௨.—குமட்டூர்க்கண்ணனார்:—இவர் இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன்மீது இந்நூல் 2-ம்பத்தைப்பாடி, உம்பற்காட்டு ௫00-ஊர் பிரமதாயமும் ௩௮-வருடம் தென்னாட்டுள்வருவதனிற் பாகமும் பரிசிலாகப்பெற்றவர்; அந்தணவருணத்தினர்; இது, பிரமதாயம் பெற்றனரென்பதனால் தெரிகின்றது. கண்ணனாரென்று ஒருபுலவருளர்; அவரின்வேறுபடுத்தற்கு இவர் இங்ஙனம் வழங்கப்பெற்றார்.

௩.—பாலைக்கௌதமனார்:—பல்யானைச்செல்கெழுகுட்டுவன்மீது இந்நூல் ௩-ம்பத்தைப் பாடியவராகிய இவர், அவனை இரந்து அவனுதவியால், ஒன்பது பெருவேள்விவேட்டுப் பத்தாம்பெருவேள்வி வேட்கையில் மனைவியுடன் சுவர்க்கம்பெற்றவர்; அந்தணவருணத்

தினர் இவை, இப்பத்தின்பதிகத்தாலும், ‘[illegible]டுத்தபெரும்புலவன்’ (ந.சசு) என்னும் பழமொழி [illegible]ராவாலும் அதனுரையாலும், “நான்மறையாளன் செய்யுட் கொண்டு, மேனிலை யுலகம் விடுத்தோனாயினும்” (உ அ-ம் [illegible] -கங அ) என்னும் சிலப்பதிகாரத்தாலும், ‘இதில் இமயவரம்பன்றம்பி பல்யானைச்செல்கெழு குட்டுவனைப் பாலைக்கௌதமனார் துறக்கம்வேண்டினுரென்பது குறிப்புவகையாற் கொள்ளவைத்தலின், இது வஞ்சிப்பொருளில்வந்த பாடாணாயிற்று’ (தொல். பொரு. புற. சூ. உ௦) என்னும் நச்சினார்க்கினியத்தாலும் விளங்குகின்றன. கோதமனாரென்று ஒருபுலவருளர்; அவரின்வேறுபடுத்தற்கு இவர் இங்ஙனம் வழங்கப்பெற்றார். இவர் இங்ஙனம் சுவர்க்கம்பெற்ற சரிதை மலைநாட்டிற் கர்ணபரம்பரையில் இக்காலத்தும் வழங்குகின்றது.

௪.—காப்பியாற்றுக்காப்பியனார் :—இவர் களங்காய்க்கண்ணிநார்முடிச்சேரலென்னும் அரசன்மீது இந்நூல் ௪-ம்பத்தைப்பாடி ௪000000-பொன்னும் அவன் ஆண்டதிற் பாகமும் பரிசிலாகப் பெற்றவர்.

௫.—பரணர் :—இவர், கடல்பிறக்கோட்டியசெங்குட்டுவன்மீது இந்நூல் ௫-ம்பத்தைப்பாடி, அவனால், உம்பற்காட்டுவருவாயையும் அவன்மகன் குட்டுவன்சேரலென்பவனையும் பரிசிலாகப்பெற்றவர். [உம்பற்காடென்பது மலைநாட்டைச்சார்ந்ததோர்நாடு] திருவள்ளுவமாலையிலுள்ள, “

மா லுங்குறளாய்" என்னும்வெண்பா இவர்



செய்ததாகத் தெரிதலின், உக்கிரப்பெருவழுதியாரும் அம்மாலையை இயற்றிய மற்றப்புலவர்களும் இருந்தகாலத்தவரென்று இவர் எண் ணப்படுகிறார்; கபிலருடைய அருமைத்துணைவர்; இது பழைய இலக்கணநூல்களினுரைகளில், 'கபிலபரணர்' என்று வழங்கும் தொகைநிலைத்தொடரால் விளங்குகின்றது. அதிகமானெடுமானஞ்சி கோவலூர்த்தலைவனைவென்று அவ்வூரைக் கைக்கொண்டமை இவரால் புனைந்துகூறப்பெற்றுள்ளது. இது புறநானூற்றில், "அமரர்ப் பேணி யும்" என்னும்பாட்டில், "பரணன் பாடினன் மற்கொன் மற்றுநீ, முரண்மிகு கோவலூர் நூறிநின், னரணடு திகிரி யேந்திய தோளே" என ஔவையார் பாராட்டியிருத்தலால், நன்குபுலப்படுகின்றது. இரு வகைத்திருவிளையாடற்புராணத்திலும் இவர் புகழப்பட்டிருக்கிறார். எட்டுத்தொகையில் இவர்செய்தனவாக அஉ - செய்யுட்கள் இப்பொழுது காணப்படுகின்றன: (நற் - கஉ; குறு - கரு; பதிற் - கO; அகநா - கூஉ; புறநா - கங)

அச்செய்யுட்களில்வந்துள்ள தெய்வங் களின்பெயர்களும் பிறபெயர்களும் வருமாறு :—

**தெய்வம்** : —சிவபெருமான், முருகக்கடவுள், கொல்லித்தெய்வம்.

**பாவை** :—கொல்லிப்பாவை.

**ஸ்தலங்கள்** :—ஆலமுற்றம், அலைவாய் = திருச்செந்தூர், கூடல்.

**தேயத்தார்** :—ஆரியர், கொங்கர், பூழியர்.

**வேளிர்கள்** :—பதினன்குவேளிர், பதினொரு வேளிர்.

**தலைவர்** :—அகுதை, அஞ்சி, அதகன், அதிகன், அழிசி, அன்னி, ஆட்டனத்தி, ஆய், உதியன், எவ்வி, ஓரி = வல்விலோரி, கட்டி, கரி காலவளவன், கழுவுள், குட்டுவன், குறும்பியன், சேந்தன், தழும்பன், தித்தன், திதியன், நள்ளி, நன்னன், நேர்கிழவன், பசும்பூட்பாண்டியன், பழையன், பாணன், பேகன், பொறையன், மத்தி, மிஞிலி = ஞிமிலி, விச்சியர்பெருமகன்.

புறநானூற்றினால்,
உருவப்பஃறேரிளஞ்சேட்சென்னிமுதலிய தலைவராவர் இவராற்பாடப்பெற்றோரென்று தெரிகின்றது.

**தலைவியர்** :—ஆதிமந்தி, ஐயை, மருதி.

**நாடுகள்** :—ஆரியநாடு, கொங்குநாடு, புகார்நாடு, பூழிநாடு.

**ஊர்கள்** :—அழுந்தூர், ஆர்க்காடு, ஆலமுற்றம்,

இருப்பையூர், உறத்தூர், உறந்தை, ஊணூர், கழார், காரூர்,

குறும்பூர், குன்றூர், 

கூடல், தகடூர், தழும்பனூர், தொண்டி, நீடூர், புகார், பொருந்தில், மணற்குன்று, மாந்தை, முசிறி, வஞ்சி, வாகை, வெண்ணிவாயில்.

அவை=ஸபை :—உறந்தைநாளவை.

விழவு :—கழார்ப்பெருந்துறைவிழவு, கூடல்விழவு.

மலைகள் :—குடவரை, கொல்லி, பொதியில்.

ஆறு :—காவிரி.

துறைகள் :—கழார்முன்றுறை=கழார்ப்பெருந்துறை, தொண்டி முன்றுறை.

காடுகள் :—உறந்தைப்புறங்காடு, ஒரிகானம்.

பறந்தலைகள் = போர்க்களங்கள் :—கூடற்பறந்தலை, பாழிப்பறந்தலை, வாகைப்பறந்தலை, வெண்ணிவாயிற்பறந்தலை.

கக - ம் திருமுறையிலுள்ள சிவபெருமான்திருவந்தாதியியற்றிய பரணதேவநாயனாரென்பவர் இவரேயென்று விவேகிகள் கூறுகின்றனர்.

கூ.—காக்கைபாடினியார் நச்செள்ளையார் :—ஆடுகோட்பாட்டுச் சேரலாதனென்னும் அரசன்மீது இந்நூல் கூ-ம்பத்தை இயற்றியோராகிய இவர் அணிகலனுக்கென்று கூ-துலாம் பொன்னும் நூறாயிரம்

பொற்காசும் அவனாற் பரிசுபெற்றவர் ; பெண்பாலார் ; நச்செள்ளை யாரென்பது இவரது இயற்பெயரென்றும் குறுந்தொகையில்,

" திண்டேர் நள்ளி கானத் தண்டர்
பல்லா பயந்த நெய்யிற் றொண்டி
முழுதுடன் விளைந்த வெண்ணெல் வெஞ்சோ
றெழுகலத் தேந்தினுஞ் சிறிதென் றோழி
பெருந்தோ ணெகிழ்த்த செல்லற்கு
விருந்துவரக் கரைந்த காக்கைய்து பலியே."

என்னும் உ௧0௰ம்பாட்டில், காக்கை கரைந்தமையைப் பாராட்டிக் கூறிய அருமைபற்றிக் காக்கைபாடினியாரென்ற சிறப்புப்பெயரைப் பிற்காலத்தில் ஆன்றோரால் இவர் பெற்றனரென்றும் தெரிகின்றன ; பாடினி-பாடுபவள். செள்ளையென்பது பெண்பாலார்க்கு இயற்பெயராகப் பண்டைக்காலத்து வழங்கிவந்ததுபோலும் ; இந்நூல் ௯௰ம் பத்தின்பதிகத்தில் பையூர்கிழானுடையமனைவியின்பெயர் அந்துவஞ் செள்ளையென்று வந்திருத்தல்காண்க.
மறக்குடிமங்கையின்சிறப்பை

2

விளக்கி இவர்பாடிய, ௨௭ அ-ம் புறப்பாட்டும் அப்பாடல் ஒக்கூர்மாசாத்தியாரென்னும்பெண்பாலாருடைய பாக்களின்வரிசையிற் சேர்க்கப் பெற்றிருத்தலும் இவர் பெண்பாலாராதலை வலியுறுத்தும். 'கலனணிக' என்று அரசன் பொற்காசுமுதலியன கொடுத்தானென்றது ஈண்டு அறியற்பாலது. எட்டுத்தொகையில் இவர்செய்தனவாக, ௧௨ - செய்யுட்கள்காணப்படுகின்றன. (குறு. ௧ ; பதிற். ௧௦; புறநா. ௧.)

௭.—கபிலர்: —

இப்பெயருடையபுலவர்சிலருளர்.) இவர்செல்வக் கடுங்கோவாழியாதனென்னும் சேரவரசன்மீது இந்நூல் ௭ - ம் பத்தைப்பாடி. நூறுபிராய்பொற்காசும் அவன் ஒருமலைமீதேறிக் கண்டு கொடுத்தநாடும் பரிசிலாகப்பெற்றவர். இஃது இந்நூல் ௭ - ம் பத்தின் பதிகத்தாலும் அ௫ - ம் பாடலிலுள்ள "கபிலன் பெற்ற வூரினும் பலவே" என்பதனாலும் விளங்குகின்றது.

இவர்பிறந்தவூர் பாண்டிநாட்டிலுள்ள திருவாதவூர் ; இது பழைய திருவிளையாடற்புராணத்தில் ௨௭ - வதாகிய ஞானவுபதேசஞ்செய்த திருவிளையாடலிலுள் ௩, "நீதியார் மதூக நீழ *னெட்டிலை யிருப்பை யென்றோர், காதல்கூர் பனுவல் பாடுங் கபிலனார் பிறந்த மூதூர், சோதி சேர் வகுள நீழற் சிலைப்பொலி துலங்கக் காட்டும், வேதநா யகனார் வாழும் வியன்றிரு வாத வூரால்" என்னும் ௪ - ம் திருவிருத்தத் தா

ல் வெளியாகின்றது.

இவர் அந்தணவருணத்தினர்; புறநானூறு, உ00.—"யானே, பரிசிலன் மன்னு மந்தணன்", உ0க.—"யானே, தந்தை தோழ னிவ ரென் மகளிர், அந்தணன் புலவன் கொண்டுவந் தனனே" எனத் தம்மைப்புலப்படுத்தற்காக இவர்கூறியசெய்யுட்களும், கஉ௬.—"புலனழுக் கற்ற வந்த ணாளன்" என மாறோக்கத்து நப்பசலையார் இவரைப் பாராட்டிக்கூறியசெய்யுளும் இதனைப்புலப்படுத்தும்.

வேள்பாரியினுடைய உயிர்நண்பரும் அவனுடைய அவைக்களத்துப்புலவருமாக இவர்விளங்கினர்; தமிழ்நாட்டுமூவேந்தரும் அழுக்காறுற்று அவனைக் கொல்லநினைந்து நால்வகைச்சேனைகளோடும் அவன்மலையைச்சூழ்ந் தகாலையில் அவர்களைச் சிறிதும் மதியாது அவ

* கெட்டிலை யிருப்பை வட்ட வொண்பூ, வாடா தாயிற் பீடுடைப் பிடியின், கோடேய்க் கும்மே வாடி லோ வைந்தலைப், பரதர் மனைதொறு முணங்குஞ், செந்தலை யிறவின் சிரேய்க் கும்மே".—இச்செய்யுள் தமிழ்நாவலர்சரிதையிற்கண்டது.



இவனுடைய அருமைக்குணங்களைப் புலப்படுத்திப் பாடினர்; அவ்வருமைச்செய்யுட்கள் புறநானூற்றிற் காணப்படும்;

அவனிறந்தபின்பு, இவர், பிரிவாற்றாது மனமுருகிப் பலசெய்யுட்களாற்புலம்பி, அவன் புதல்வியையழைத்துச்சென்று மணஞ்செய்துகொள்ளும்படி இருங் கோவேள், விச்சிக்கோனென்பவர்களைவேண்டி மறுத்தமைகண்டு அவர்களைவெறுத்துப் பின்பு அம்மகளிரைப் பார்ப்பார்ப்படுத்துத் தம் முடைய நட்புக்கடனைக்கழித்தனர்.

ஆரியவரசன்பிரகத்தனைத் தமிழறிவித்தற்குக் குறிஞ்சிப்பாட்டை இயற்றினர்.

பத்துப்பாட்டினுள் ஒன்றாகிய மேற்கூறிய குறிஞ்சிப்பாட்டும் பதி னெண்கீழ்க்கணக்கினுளொன்றாகிய இன்னாநாற்பதும் இவரியற்றிய நூல்கள்.

இவருடையசெய்யுட்கள் மிக்க இனிமையையுடையன ; [illegible] உரைகளில் உதாரணமாகக்காட்டப்படும் 'கபிலரதுபாட்டு' என்னும் தொடர்மொழியே இதனை வலியுறுத்தும்.

இவராருளிச்செய்தனவாக ௨௫௦ - பாடல்கள் இப்பொழுது கிடைக்கின்றன. அவற்றுள், அகவற்பாக்கள் ௨௦௭. [நற். ௨௦ ; குறு. ௨௯ ; ஐங். ௧௦௦ ; பதிற். ௧௦ ; அகநா. ௧௬ ; புறநா. ௩௦ ; குறிஞ். ௧ ; "நெட்டிலையிருப்பை" என்பது-௧.] வெண்பா ௪௨. [திருவள்ளுவமாலையிலுள்ள, "

திணையளவு" என்பது க, இந்நூற்பதிலுள்ள பாடல் சக.]

இவரியற்றியபாடல்களை உற்றுநோக்குகையில், இவர் குறிஞ்சித்திணையில் மிகப்பயின்றவரென்றும் அதன்வளங்களை விளக்கப்பாடுதலில் மிக்க ஆற்றலுடையவரென்றும் தெரிகின்றது

மேற்கூறிய அகவற்பாக்கள் உ0எ - ல் குறிஞ்சித்திணையைச்சார்ந்தன, கரு.

இவருடையவாக்கில் விநாயகக்கடவுள், முருகக்கடவுள், சிவ பெருமான், பலதேவர், திருமால் இவர்களுடையதுதிகள் வந்திருக்கின்றன. இதனால், இவர், சமயக்கோட்பாட்டிற் பாரதம்பாடியபெருந்தேவனாரைப் போன்றவராக எண்ணப்படுகிறார்.



எட்டுத்தொகை, பத்துப்பாட்டு, பதினெண்கீழ்க்கணக்கு என்னும் முத்தொகுதிநூல்களிலும் இவருடையபாடல்களும் நூல்களும் கலந்திருத்தல்.இவரது பெருமையை விளக்குகின்றது.

பதிற்றுப்பத்து, அறு -"அரசவை பணிய

வறம்புரிந்து வயங்கிய, மறப்புரி கொள்கை வயங்குசெந் நாவி, னுவலே கூராக் கவலையி னெஞ்சி, னனவிற் பாடிய நல்லிசைக், கபிலன்" எனப் பெருங்குன்றூர் கிழாரும், புறநானூறு, ருந - " வெறுத்த கேள்வி விளங்குபுகழ்க் கபிலன்" எனப் பொருந்திலிளங்கீரனாரும், கஉசு-"புலனழுக் கற்ற வந்தணாளன், இரந்துசென் மாக்கட் கினியிட னின்றிப், பரந்திசை நிற்கப் பாடினன்", கஎசு - "பொய்யா நாவிற் கபிலன்" என மாறோக்கத்து நப்பசலையாரும் பாடியவற்றைப்பார்க்கையில் இவருடைய மனம் வாக்குக்காயங்களின் தூய்மையும் அறம்புரி கொள்கையும் பெரும்புலமையும் அன்புடைமையும் நட்பின் பெருமையும் நன்கு விளங்குகின்றன.

இவராற்பாடப்பட்டோர் :—அகுதை, இருங்கோவேள், ஓரி, சேரமான் செல்வக்கடுங்கோவாழியாதன், நள்ளி, மலையமான் திருமுடிக் காரி, விச்சிக்கோன், வேள்பாரி, வையாவிக்கோப் பெரும்பேகன், மலையனென்பவர்கள்.

கொல்லிமலை, பறம்புநாடு, பறம்புமலை, முள்ளூர்மலை, முள்ளூர்க் கானமென்பவைகள் இவராற் பாராட்டப் பெற்றிருத்தலின், அவைகள் இவர்காலத்தில் விளக்கமுற்றிருந்தனவென்றும் இவர் பழகிய இடங்களென்றும் தெரிகின்றன.

நட்பு, வண்மை, நன்றிமறவாமை யென்பவைகளை இவருடைய செய்யுட்களிற் பரக்கக் காணலாகும்.

'கபிலபரணர்' என்பதனுல், பரணரென்பவருக்கும் பழையதிரு விளையாடற் புராணத்தில்வந்துள்ள, "பின்னமில் கபிலன் றோழன் பெயரிடைக் காடனென்போன்" என்னும் திருவிருத்தத்தால், இடைக்காடருக்கும் சிறந்தநட்பினராக இவர் எண்ணப்படுகிறார். இவர் வேறு; தொகை நூல்களிற் காணப்படும் தோல்கபிலரென்பவர் வேறு.

கக - ம் திருமுறையில் வந்துள்ள மூத்தநாயனுர் திருவிரட்டை மணிமாலை, சிவபெருமான்

திருவிரட்டைமணிமாலை, சிவபெருமான்



திருவந்தாதியென்னும் பிரபந்தங்கள் மூன்றையும் அருளிச்செய்த கபிலதேவநாயனுரென்பவர் இவரேயென்று பெரியோர் கூறுவர்.

மேற்கூறிய திருவிளையாடற்புராணத்தில், இடைக்காடன் பிணக் குத்தீர்த்த திருவிளையாடல், கக - ம் திருவிருத்தத்தில், "எழிலையந் தாதி சொன்னவன் கபிலன்" எனச் சிவபெருமான் கட்டளையிட்டரு ளியதாக வந்திருத்தல் காண்க.

அ.—அரிசில்கிழார்:—இவர், தகடூரெறிந்த பெருஞ்சேரலிரும் பொறையென்னும் அரசன்மீது இந்நூல் அ

- ம் பத்தைப்பாடி ஒன் பதனூறாயிரம் பொற்காசு பரிசில் பெற்றதன்றி அவன் கொடுத்த அரசாட்சிக்குரிய சிங்காதனத்தை அவனுக்கே மீட்டுமிரந்து கொடுத்து அவன்பால் அமைச்சுரிமை பூண்டு விளங்கினர் ; 'கிழார்' என்பது வேளாளர்க்கேயுரிய சிறப்புப்பெயராக இருந்ததென்று தெரிதலின், இவரை வேளாண்மரபினரென்று சொல்லவேண்டும் ; இதனை, தோல். மரபியல், எஅ - ம் சூத்திரத்தின் விசேடவுரையிற் காட்டிய பெயர்களாலும் திருத்தொண்டர்புராணவரலாற்றின் உ - ம் செய்யுளி லெடுத்துக்காட்டிய பெயர்களாலு முணர்க. அரிசிலென்பது ஈண்டு ஒரு நதியின் பெயரோ ஓரூரின் பெயரோ யாதும் விளங்கவில்லை. சோழநாட்டிலுள்ள நதிகளுள் அரிசிலென்று ஒரு நதியும் மைசூரைச்சார்ந்த ஊர்களுள் அரிசிற்கரையென்று ஒரூரும் உள்ளன. [கிழார் - உரியவர்.]

வையாவிக்கோப் பெரும்பேகனால் துறக்கப்பட்ட கண்ணகியை அவனுடன்சேர்த்தல்வேண்டி அவனைப்பாடினர் ; அதிகமான்தகடூரெறிந்து வீழ்ந்த எழினியென்பவனுடைய பிரிவாற்றாது வருந்திப் புலம்பினர் ; தகடூர்யாத்திரை யென்னுநூலில் அவ்வச்சமயங்களில் இவர் செய்தனவாகச் சிலபாடல்களுண்டென்று தெரிகிறது. [தொல். புறத்தி. அ, கஉ-ம் சூ. ந - உரை.]

மேற்கூறிய சேரவரசனும் உக்கிரப்பெருவழுதியாரும் பேகனென்னும் வள்ளலும் அதிகமானும் இவர்காலத்துத் தலைவர்கள்.

திருவள்ளுவமாலையில், "பரந்தபொருள்" என்னும் கூ - ம் செய்யுள் இவர்செய்ததாகத் தெரிதலின், இறையனார் முதலிய புலவர்களும், திருவள்ளுவரும், ஔவையாரும், உக்கிரப்பெருவழுதியாரைப் பாடிய ஐயூர் மூலங்கிழாரும் வையாவிக்கோப்பேகனைப்பாடிய



பரணர், பெருங்குன்றூர்கிழார் முதலியோரும், தகடூர்யாத்திரையில் வந்துள்ள பொன்முடியாரும் இவர்காலத்துப்புலவர்களென்று எண்ணுதற்கிடமுண்டு.

மேற்கூறிய செய்யுட்களால் இவர் மதுரையிலும் மலைநாட்டிலும் பெரும்பாலுமிருந்தாரென்று தெரிகிறது.

இவர் செய்தனவாக இப்பொழுது 20 - செய்யுட்கள் கிடைக்கின்றன [குறு. க; பதிற். கo; புறநா. எ; தகடூர். க; திருவள். க.]

௬.—பெருங்குன்றூர்கிழார்:—இவர் குடக்கோ இளஞ்சேரல்இரும்பொறையென்னும் சேரவரசன்மீது இந்நூல் ௯-ம் பத்தைப்பாடி ௩௨000 - பொற்காசுமுதலிய பலவகைப்பரிசில்கள் மிகப்பெற்றவர்; வேளாளர்; கடைச்சங்கமிருந்து தமிழாராய்ந்தோராகிய நாற்பத்தொன் பதின்மருள் ஒருவர்; (இறை. ௧-சூ. உரை) வையாவிக்கோப்பெரும் பேகனால் துறக்கப்பட்ட கண்ணகியென்பவளை அவனுடன்சேர்த்தற்கு அவனைப்பாடியவர்; இவராற்பாடப்பட்டோர்கள் மேற்கூறிய தலைவர்களிருவரும் உருவப்பஃறேரிளஞ்சேட் சென்னியும். இவர் காலத்துப்புலவர்கள் இறையனாரகப்பொருளுரையாற்றெரிகின்ற சிறுமேதாவியார், சேந்தம்பூதனார், அறிவுடையரனார், இளந்திருமாறனார், மதுரையாசிரியனல்லந்துவனார், மருதனிளநாகனார், கணக்காயனார்மகனார் நக்கீரனார் முதலியோர்களும் வையாவிக்கோப்பெரும்பேகனைப் பாடிய பரணர்முதலியோர்களும். இவரியற்றியனவாக எட்டுத்தொகையில் ௨௧ - செய்யுட்கள் இப்பொழுது கிடைக்கின்றன.

(நற். ச.
குறு. க. பதிற். க௰. அகநா. க. புறநா. ரு.) இவற்றுள் அகத்
திணைக்குரியன சு; புறத்திணைக்குரியன கரு.

---

உ

# உரையிற்கண்ட இலக்கணக் குறிப்பகராதி.

[எண்கள் பக்கத்தைத் தெரிவிப்பன.]

---

# பிழையும் திருத்தமும்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| ரு | கஅ | யாக்க | யாக்கி |
| கரு | ஙO | உடை | அடை |
| கசு | உரு | கஅ | கஎ |
| உO | ரு | அளவாய் | ணவாய் |
| உக | கஎ | ககூ | உO |
| உஎ | கச | செல் | சொல் |
| உஅ | கரு | நீர்த்த | நீர்த்தரு |
| ,, | உO | கூடைக் | கூடை |
| ஙரு | உஎ | றெல் | றெல் |
| ஙசு | கரு | மார் | மாறு |
| ஙஅ | உஅ | சிறப் | சிறப்பா |
| ஙகூ | ச | பாடும்; | பாடும் |
| சங | கஉ | கெழு | கெழூ |
| சஎ | சகூ | இற் | இயற் |
| சகூ | எ | பெயராய், | பெயர் |
| சுரு | ருஉ | பெரு | பொரு |
| சுஅ | கரு | முரச்சி | முரற்சி |
| கூரு | உகூ | பாடல் | பாடல். |
| க0ச | உரு | 'பறியாவருவியாம்பல்' | 'பறியா' |
| கஉசு | உச | திருவின். | திரு |
| கருரு | ருரு | தேவி | தேவை |

கணபதிதுணை.

# பதிற்றுப் பத்து

## மூலமும் உரையும்.



### இரண்டாம் பத்து.



(கக) வரைமருள் புணரி வான்பிசி ருடைய
வளிபாய்ந் தட்ட துளங்கிருங் கமஞ்சூ
லளியிரும் பரப்பின் மாக்கடன் முன்னி
யணங்குடை யவுண ரேமம் புணர்க்குஞ்
சூருடை முழுமுத றடிந்த பேரிசைக்
கடுஞ்சின விறல்வேள் களிறூர்ந் தாங்குச்

செவ்வா யெஃகம் விலங்குந ரறுப்ப
வருநிறந் திறந்த புண்ணுமிழ் குருதியின்
மணிநிற விருங்கழி நீர்நிறம் பெயர்ந்து
மனாலக் கலவை போல வரண்கொன்று
முரண்மிகு சிறப்பி னுயர்ந்த வூக்கலை
பலர்மொசிந் தோம்பிய திரள்பூங் கடம்பின்
கடியுடை முழுமுத றுமிய வேஎய்
வென்றெறி முழங்குபணை செய்த வெல்போர் கடு
நாரரி நறவி னார மார்பிற்
போரடு தானைச் சேரலாத
பார்புமலி பைந்தா ரோடை [illegible] விளங்கும்
வலனுயர் மருப்பிற் பழிதீர் யானைப்
பொலனணி யெருத்த மேல்கொண்டு
பொலிந்தநின் பலர்புகழ் செல்வ மினிதுகண்
டிகுமே

## ௨ பதிற்றுப் பத்து.

கவிர்ததை சிலம்பிற் றுஞ்சுங் கவரி

பரந்திலங் கருவியொடு நரந்தங் கனவு
மாரியர் துவன்றிய பேரிசை யிமயந்
தென்னங் குமரியொ டாயிடை
உ௫ மன்மீக் கூறுநர் மறந்தபக் கடந்தே.

துறை - செந்துறைப்பாடாண்பாட்டு.
வண்ணம் - ஒழுகுவண்ணம்.
தூக்கு - செந்தூக்கு.
பெயர் - (அ) புண்ணுமிழ்குருதி.

க. பிசிருடையவென்றது பிசிராக உடையவென்றவாறு.

உ. கமஞ்சூல் - நிறைந்தநீர் ; சூல்போறலாற் சூலெனப்பட்டது.

இ. சூருடைமுழுமுத லென்றது சூரவன்மாத்தனக்கு அரணாக வுடைய மாவின்முதலென்றவாறு.

இனிச் சூரவன்மாத்தான் ஓர்மாவாய் நின்றானென்று புராணமுண் டாயிற் சூரனதற்றன்மையையுடைய மாவின்முதலென்றவாறும்.

க-க0. நீர்நிறம்பெயர்த்து, மணலைக் கலவைபோலவென முடிக்க.

போலவென்றது ஈண்டுப் போலும்படியென வினையெச்சப் பொருள் பட்டு நின்றது. மணலையென்றது குங்குமம் ; சாதிங்குலிக மென்பாருமுளர்.

அ - க ௦. 'அருநிறந்திறந்த' என முன்வந்த அடைச்சிறப் பானும், 'மணிநிறவிருங்கழி நீர்நிறம்பெயர்ந்து, மனலக்கலவைபோல' எனப் பின்வந்த அடைச்சிறப்பானும் இதற்கு 'புன்னுமிழ்துறை' என்று பெய ராயிற்று.

க க - உ ௦. மேல்கொண்டுபொலிந்த நின் செல்வமென முடிக்க.

உ க. கவிர்ததை சிலம்பிற் றுஞ்சுமென்றது ஆண்டு உறையும் ஆரியராணையானே முருக்கென்னும் முள்ளுடைமரமும், "மயிர்நீப்பின் வாழாக் கவரிமா" (திருக்குறள், கசக) என்று சிறப்பிக்கப்பட்ட தன் மயிர்க்கும் வருத்தஞ்செய்யாமையால், அக்கவிர்செறிந்த சிலம்பின்கண்ணே இனிதாக உறங்குமென்றவாறு.

உ உ. அருவியொடு நரந்தம் கனவுமென்றது அவ்வாரியராணை யானே பிறவிலங்கானும் மக்களானும் வருத்தமின்றிப் பகற்காலத்துத் தான் நுகர்ந்த அருவியையும் நரந்தத்தையுமே கனவினும் காணுமென்றவாறு.

உ ச. குமரியொடுவென்னும் ஒடு - எண்ணொடு. ஆயிடையென்றது இமயம் குமரியாகிய அவற்றுக்கு இடையென்றவாறு; அவ்வென்னும் வகரவீற்றுப்பெயர் ஆயிடையென முடிந்தது.

## இரண்டாம் பத்து. ௩

உ ௫. மன்னென்றதனை அர்சென்றதுபோல அஃறிணைப்பெய ராக்கி, அம் மன்களில் மீக்கூறுமெனக்கொள்க.

(உ ௫) மறந்தபக்கடந்து (க ச) முழங்குபணைசெய்தவென

மாறி முடிக்க ; இங்ஙனம் மாறாது (கசு)
எருத்தமேல்கொண்டென்னும் வினையொடு மாறிமுடிப்பாருமுளர்.

(கசு) சேரலாத, (கஎ) கடுஞ்சினவிறல்வேள் களிறூர்ந்தாங்கு (கஅ) யானை (ககூ) யெருத்தமேல்கொண்டு பொலிந்தநின் (உ0) பலர்புகழ்செல்வம் கண்டிகுமெனமாறிக் கூட்டி வினைமுடிவு செய்க.

இதனாற் சொல்லியது, அவன் வெற்றிச்செல்வச்சிறப்புக் கூறியவாறாயிற்று.

**(பிரதிபேதம்)** ச. ஏமப்புணர்காக்கும். கக. துமியவோடிய.

கூ. நீனிறம். கஎ. வேண்டுதானை.
க0. போலரண். உரு. மதந்தப.

(ச) **(கஉ.)** வயவர் வீழ வாளரின் மயக்கி
யிடங்கவர் கடும்பி னரசுதலை பனிப்பக்
கடம்புமுத றடிந்த கடுஞ்சின வேந்தே
தாரணி யெருத்தின் வாரல் வள்ளுகி
ரரிமான் வழங்குஞ் சாரற் பிறமான்
றோடுகொ ளினநிரை நெஞ்சதிர்ந் தாங்கு
முரசுமுழங்கு நெடுநக ரரசுதுயி லீயாது
மாதிரம் பனிக்கு மறம்வீங்கு பல்புகழ்
கேட்டற் கினிதுநின் செல்வங் கேட்டொறுங்
காண்டல் விருப்பொடு கமழுங் குளவி
வாடாப் பைம்மயி ரிளைய வாடுநடை

பண்ணன் மழகளி றரிஞிமி றோப்புங்
கன்றுபுணர் பிடிய குன்றுபல நீந்தி
வந்தவ ணிறுத்த விரும்பே ரொக்கற்
றொல்பசி யுழந்த பழங்கண் வீழ
வெஃகுபோழ்ந் தறுத்த வானிணக் கொழுங்குறை
மையூன் பெய்த வெண்ணெல்வெண் சோறு
நனையமை கள்ளின் றேறலொடு மாந்தி
நீர்ப்படு பருந்தி னிருஞ்சிற கன்ன
நிலந்தின் சிதாஅர் களைந்த பின்றை

## பதிற்றுப் பத்து.

நூலாக் கலிங்கம் வாலரைக் கொளீஇ
வணரிருங் கதுப்பின் வாங்கமை மென்றோள்
வசையின் மகளிர் வயங்கிழை யணிய
வமர்புமெய் யார்த்த சுற்றமொடு
நுகர்தற் கினிதுநின் பெருங்கலி மகிழ்வே.

இதுவுமது.

பெயர் - (அ) மறம்வீங்கு பல்புகழ்.

எ. துயிலீயாதென்பது துயிலாதென்னும் வினைத்திரிசொல்; துயி லாமலெனத்திரிக்க; இனித் திரியாது,

'யாறுநீரொழுகாதுகிடந்தது' என்னும் வழக்குப்போல இடத்துநிகழ்பொருளின் தொழிலை இடத்திற்கேற்றி, மாதிரமானது அரசுதுயிலியாது பனிக்குமெனை அம்மாதிரத்தின் வினை யொடுமுடிப்பினும் அமையும்.

அ. மறம்வீங்குபல்புகழென்றது அரசர்க்குச்சிறந்த மறப்புகழ் மற்றைப்புகழினும் மிக்க பல்புகழென்றவாறு.

இச்சிறப்பானே இதற்கு '**மறம்வீங்குபல்புகழ்**' என்றுபெயரா யிற்று.

அ - க. நின்செல்வம் இனிது; யாது இனிதெனிற் பல்புகழ் கேட்டற்கு இனிதென முடிவுகொள்க.

க. கேட்டொறுமென்பதற்கு அச்செல்வத்தையென வருவிக்க.

உக. நூலாக்கலிங்கமென்றது ஒருவர் நூலாநூலாகிய பட்டுநூல் முதலாயவற்றாற்செய்த கலிங்கமென்றவாறு.

நூலாமையென்னுந்தொழில் கலிங்கத்துக்குச் சினையாகிய நூல் மேலதாலெனின், அச்சினையோடு முதற்குள்ள ஒற்றுமை பற்றிச் சினை வினையை முதல்மேலேற்றி வழுவமைதியாற் கூறினனென்க. இனி நூலா நூற்கலிங்கமென்பான் நூலென்பதனைத் தொகுத்துக் கூறினனென்பாருமுளர்.

உஉ. நுகர்தற்கு இனிது நின் பெருங்கலிமகிழ்வேயென்றது நின் பெரிய ஆரவாரத்தையுடைய ஓலக்கத்துச்செல்கின்ற விநோதமகிழ்ச்சி அனுபவித்தற்கு இனிதென்றவாறு.

(௬) வேந்தே, (௭) நின்செல்வம் (௮) புகழ் (௯) கேட்டற்கினிது; (௧௰) நின்பெருங்கலிமகிழ்வு நுகர்தற்கினிதென வினைமுடிவுசெய்க.

இதனாற்சொல்லியது, அவன்வென்றிச்சிறப்பும் அவனது ஓலக்க விநோதச்சிறப்பும் உடன்கூறியவாறாயிற்று.

(பி - ம்.) ௫. சோலைப்பிரமான். ௧௧. இழையவாகேடை. (௨)

## இரண்டாம் பத்து. ௫

(௧௧.) தொறுத்தவய லாரல்பிறழ்நவு
மேறுபொருதசெறு வுழா தவித்தநவுங்
கரும்பின் பாத்திப் பூத்த நெய்த
லிருங்க ணெருமையி னிரைதடுக் குநவுங்
கலிகெழு துணங்கை யாடிய மருங்கின்
வளைதலை மூதா வாம்ப லார்நவு
பொலிதெங்கி னிமிழ்மருதிற்
புனல்வாயிற் பூம்பொய்கைப்
பாடல் சான்ற பயங்கெழு வைப்பி

ஞாடுகவி னழிய நாமந் தோற்றிக்
கூற்றுடன்று நின்ற யாக்கை போல
நீசிவந் திறுத்த நீரழி பாக்கம்
விரிபூங் கரும்பின் கழனி புல்லெனத்
திரிகாய் விடத்தரொடு காருடை போகிக்
கவைத்தலைப் பேய்மகள் கழுதூர்ந் தியங்
வூரிய நெருஞ்சி நீறுடு பறந்தலைத்
தாதெரு மறுத்த கலியழி மன்றத்
துள்ள மழிய வூக்குநர் மிடறபுத்
துள்ளுநர் பனிக்கும் பாழா யினவே
காடே கடவுண் மேன புறவே
யொள்ளிழை மகளிரொடு மள்ளர் மேன
வாறே யவ்வனைத் தன்றியு ஞாலத்துக்
கூலம் பகர்நர் குடிபுறந் தராஅக்
குடிபுறந் தருநர் பாரமோம்பி
யழல்சென்ற மருங்கின் வெள்ளி யோடாது
மழைவேண்டு புலத்து மாரி நிற்ப
நோயொடு பசியிகந் தொரீஇப்
பூத்தன்று பெருமநீ காத்த நாடே.

துறை - செந்துறைப் பாடாண்பாட்டு.
வண்ணம் - ஒழுகுவண்ணம்.

துாக்கு - செந்தூக்கும் வஞ்சித்தூக்கும்.
பெயர் - (௫) பூத்தநெய்தல்.

## பதிற்றுப் பத்து.

(௧) பிறழ்நவெனவும் (௨) வித்துநவெனவும் (௩) தடுக்குநவெனவும் (௪) ஆர்நவெனவும் வந்தன வினைப்பெயர்த் திரிசொல்.

௩ - ௪. நெய்தல் எருமையின் நிரை தடுக்குநவுமென்றது நெய்தலானது அக்கரும்புமுதலாய மற்றோரிரையின்பாங்கிற் செல்லாது தன் னையேநின்று தின்னும்படி தான் போதவுண்ட எருமைநிரையைத் தடுக்கு மிடங்களுமென்றவாறு.

இச்சிறப்பானே இதற்கு '**பூத்தநெய்தல்**' என்று பெயராயிற்று.

௫. மூதா ஆம்பலார்நவுமென்றது புறத்துப்போய் இரைதெவிட்டாத முதிய ஆக்கள் (௫) துணங்கையாடிய இடத்துநின்று ஆம்பலையே தின்னுமிடங்களுமென்றவாறு.

என்றது, பெருக ஆம்பல்சூடித் துணங்கையாடுவாரையுடையன வென அவ்விடங்களின் செல்வச்சிறப்புக் கூறியவாறாயிற்று.

௭. இமிழ்மருதென்றதற்குப் புள்ளிமிழ்மருதென்று ஒருபெயர்வருவிக்க.

௮. புனல்வாயில் - வாய்த்தலை.

௧.- ௧ ௦. ஒலிதெங்கென்னும்பெயர்க்கு முன் னின் ற பெயர்கள்
எண்ணும்மையோடு நின்றமையால் அவற்றையுடைய நாடென இரண் டாவதன் தொகையாய் அச்சொல் அவற்றையெல்லாம் எழுவாயாக்கி நாட் டிற்கு அவ்விடங்கள் சினையாகலின், நாடு கவினழியவென்னும் முதற்பய னிலையோடு வழுவமைதியாக முடிக்க.

௧ ௦ - ௧ ௧ . கூற்றறேஉநின்றயாக்கைபோல நாடுகவினழியவென மாறிக்கூட்டிக் கூற்றுவனாலே கொல்லப்படாநின்ற யாக்கை ஒருகாலைக் கொருகால் அழகழியுமாறுபோல நாடு அழகழியும்படியெனவுரைக்க.

இனி மாறாதே போலும்படியெனப் போலவென்பதனை வினை யெச்சநீர்மையாக்கிப் போல்கின்றது மேல்வருகின்ற பாக்கமாகவுரைப்பினு மமையும். இனிக் கூற்றுவனை அட்டுநின்ற யாக்கையையுடையானொருவன் உளனாயினும் அவனைப்போல நீ சிவந்தென்றுரைப்பாருமுளர்.

௧ ௨. நீரழிபாக்கமென்றது வெள்ளத்தான் அழிவுபடினல்லது
பகைவரான் அழியாத பாக்கமென்றவாறு.

பாக்கமென்றது, நெய்தனிலத்து ஊர்க்கேயன்றி, "கட்கொண்டிக் குடிப்பாக்கத்து, நற்கொற்கை" (மதுரைக்காஞ்சி, ௧ ௩ ௭ - ௧ ௩௮ம் அடி கள்) என்று வந்தமையான் ஒரோவழி அரசனிருப்புக்குப் பெயராமாகலின் ஈண்டுப் பாக்கமுடைய பேரூர்களெனப்பட்டது.

௧ ௪. உடைபோகவெனத் திரிக்க.

## தபுத்து இரண்டாம் பத்து. 

உள்ளுநர் பனிக்கும் பாழென்றது அம்மன்றிலே போதற்கு உள்ளம் அழியச்செய்தே பின்னும் தம் கருமவேட்கையாற் போகமேற்கொண்டவருடைய வலியைக் கெடுத்தலானே பின்பு போக நினைப்பார் நடுங்குதற்குக்காரணமாகிய பாழென்றவாறு.

கஅ. தபுத்து - தபுக்கவெனத்திரிக்க.

உ0. காடேகடவுள்மேனவென்றது நின்னாட்டுப் பெருங்காடான இடங்களெல்லாம் முதற்காலத்துக் கோயில்களானவென்றவாறு.

மேயினவென்பது மேனவென்று இடைக்குறைந்தது.

உ0 - உக. புறவு மகளிரொடு மள்ளர்மேனவென்றது சிறுகாடான இடங்களெல்லாம் நின்படையாளர்கள் மகளிரோடு உறையும் படைநிலைகளாயினவென்றவாறு.

உஉ. ஆறே அவ்வனைத்தென்றது காடும் புறவும் அல்லாதபெருவழிகளும் ஆறலைகள்வரும் பிற இடையூறுமின்றி முன்சொன்னகடவுளும் மள்ளரும் உறையுமிடமாயினவென்றவாறு.

அனைத்தென்றது அவ்வனைத்தென்று சுட்டுஇரட்டித்தது, அந்த அந்தத் தன்மையவென முன் நின்றவற்றின் பன்மைதோற்றற்கென்பது.

உங. தாராவென்பது தராவெனக்குறுகிற்று.

உச. குடிபுறந்தருநரென்றது தம் கீழ்க்குடிகளாகிய வரிசையாளரைப் புறந்தரும் மேற்குடிகளாகிய காணியாளரை.

(உச) பாரமோம்பி (உஅ) நீகாத்தவென மாறிக்கூட்டுக.

(உ௫) வெள்ளியோடாமலெனவும் (உஎ) பசியிகந்தொருவவென வும் திரிக்க.

உஉ - உ௬. இனி ஆறு முன்சொன்ன அவ்வனைத்தாவதுமன்றி ஆறலைகள்வரின்றிக் கூலம்பகர்வார் இயங்கும்படியான வழக்காலே அந்தக் கூலம் பகர்வார்குடிகளைப் புறந்தந்தென்றும் குடிபுறந்தருநர் பாரத்தை ஓம்பி மழைவேண்டியபுலத்து மாரி நிற்பவென்றும் கூலம்பகர்நர்குடிபுறந் தருதலை ஆற்றின்தொழிலாகவும் குடிபுறந்தருநர் பாரமோம்புதலை மழையின் தொழிலாகவும் கூட்டி உரைப்பாருமுளர்.

(கக) கூற்றடூஉநின்றயாக்கைபோல (க0) நாடுகெவினறிய நாமந் தோற்றி (கஉ) நீசிவந்திறுத்த நீரழிபாக்கங்கள் (க௩) கழனிபுல்லெனக் (கச) காருடைபோகக் (க௫) கழூது ஊர்ந்து இயங்கப் (க௬) பாழாயின; (உஅ) நீ காத்தநாட்டிற் (உ0) காடு கடவுளான் மேவப்பட்டன; அந்நாட் டுப்புறவுகள் (உக) மள்ளரான் மேவப்பட்டன; அந்நாட் டு (உஉ) ஆறு அவ்வனைத்தாயிற்று; அன்றியும் (உ௩) கூலம்பகர்நர் குடிபுறந்தராக் (உச) குடிபுறந்தருநர்பாரமோம்பி (உஅ) நீகாத்தநாடு, (உ௬) மழை வேண்டிய

அ பதிற்றுப் பத்து.

புலத்து மாரிநிற்ப நோயொடு பசியிகந்தொருவப் பூத்தநெனக்கூட்டி

வினை முடிவுசெய்க.

இதனாற்சொல்லியது, அவன்வென்றிச்சிறப்பும் தன் நாடுகாத்தற் சிறப்பும் உடன்கூறியவாறாயிற்று.

(௧) 'தொறுத்த' என்றும் (௨) 'ஏறுபொருத' என்றும் (எ) 'ஒலி தெங்கின்' என்றும் (அ) 'புனல்வாயில்' என்றுமிருந்தநான்கடியும் வஞ்சியடியான்வந்தமையான், வஞ்சித்தூக்குமாயிற்று.

(பி - ம்.) ௧. தொறுத்தகுழீஇவயல். ௧௯. ஊறியநெருஞ்சி.

எ. ஒலித்தெங்கின். ௨௯. குடிபுறந்தாரா.(௯)

(௧௪.) நிலநீர் வளிவிசும் பென்ற நான்கி
னளப்பரி யையே
நாள்கோ டிங்கள் ஞாயிறு கனையழ
லைந்தொருங்கு புணர்ந்த விளக்கத் தனையை
போர்தலை மிகுத்த வீரைம் பதின்மரொடு
துப்புத்துறை போகிய துணிவுடை யாண்மை
யக்குரா னனைய கைவண் மையையே
யமர்கடந்து மலைந்த தும்பைப் பகைவர்
போர்பீ டழித்த செருப்புகன் முன்ப
கூற்றுவெகுண்டு வரினு மாற்றுமாற் றலையே

யெழுமுடி கெழீஇய திருஞெம ரகலத்து
நோன்புரித் தடக்கைச் சான்றோர் மெய்ம்மறை
வானுறை மகளிர் நலனிகல் கொள்ளும்
வயங்கிழை கரந்த வண்டுபடு கதுப்பி
கரு ஞெடுங்கீ ரோதிக் கொடுங்குழை கணவ
பல்களிற் றுத் தொழுதியொடு வெல்கொடி
நுடங்கும் கோட்டம்
படையே ருழவ பாடினி வேந்தே
யிலங்குமணி மிடைந்த பொலங்கலத் திகிரிக்
கடலக வரைப்பினிப் பொழின்முழு தாண்டநின்
உ0 முன்றிணை முதல்வர் போல நின்றுநீ
கெடாஅ நல்லிசை நிலைஇத்
தவாஅ லியரோவிவ் வுலகமோ டுடனே.

**துறை - செந்துறைப்பாடாண்பாட்டு.**

**வண்ணம் - ஒழுகுவண்ணமும் சொற்சீர்வண்ணமும்.**

## இரண்டாம் பத்து.

**தூக்கு - செந்தூக்கு.**

**பெயர் - (கஉ) சான்றோர்மெய்ம்மறை.**

க. பூதங்கள் ஐந்தையு மெண்ணுது தீயை ஒழித்தது, மேல் (ச) விளக்கத்துக்கு உவமமாக எண்ணுகின்றவற்றோடு கூட்டவேண்டி யென்பது.

௯. சண்டுக் கோளென்றது, விளக்கமில்லா
இராகுகேதுவென் னும் இரண்டும் நீக்கி நின்ற ஏழினும்
சிறப்புப்பற்றி வேறெண்ணப்பட்ட திங்கள் ஞாயிறென்னுமிரண்டும்
நீக்கி நின்ற ஐந்தையுமென்பது.

௰. ஐந்தென்று தொகைகூறியது,
நாள்கோளென்னுமவற்றைத் தொகைக்கூற்றின் ஓரோவொன்றாக்க
வென்பது.

௧௧. எழுமுடியென்பது ஏழுஅரசரைவென்று அவர்கள்
ஏழுமுடி யானுஞ் செய்ததோராரமாம்.

௧௨. நோன்புரித்தடக்கையென்றது
வலிபொருந்துதலையுடைய தடக்கையென்றவாறு.

சண்டுச் சான்றோரென்பது போரில் அமைதியுடைய வீரர்.
மெய்ம் மறை - மெய்புகுகருவி; மெய்ம்மறையென்றது,
அச்சான்றோர்க்கு மெய்புகு கருவிபோலப் போரிற்புக்கால் வலியாய்
முன்னிற்றலின்.

இச்சிறப்புநோக்கி இதற்கு, '**சான்றோர் மெய்ம்மறை**'
என்றுபெயராயிற்று.

௧௩. வானுறைமகளிர் நலன் இகல் கொள்ளுமென்றது
வானரமகளிர் அழகிற்கு அவளையொப்பேன் யானே
யானேயென்று தங்களில் மாறு கொள்ளுமென்றவாறு.

௧௪. ஓடுங்கிரோதி - சுருள்.

(௧) நிலமுதற் பூதநான்கும்போலப் பெருமை (௨)
அளத்தலரியை; (௩) நாண்மீன்முதல் (௪) ஐந்தையும் விளக்கத்தால்
ஒப்பை; (௭) கைவண்
மையால் அக்குரனென்பவனையொப்பை; அன்றி (௯) முன்ப,

நின்வலியிருக் கும்படிசொல்லிற் (௧௦) கூற்றுவெகுண்டுவரினும்
அதனையும் மாற்றும்வலி யையுடையை; ஆதலாற் (௧௨)
சான்றோர்மெய்ம்மறை, (௧௯) கொடுங்குழை
கணவ, (௧௭) படையேருழவ, பாடினிவேந்தே, (௨௦) நின்குடி
முன்முதல் வர்போலநின்று (௨௧) நல்லிசையைநிலைப்பித்து (௨௨)
இவ்வுலகத்தோடு கூடக் கெடாதொழிவாயாகவென
வினைமுடிவுசெய்க.

இதனாற்சொல்லியது, அவன்பலகுணங்களையும் ஆற்றலையும் ஒருங்கு கூறி வாழ்த்தியவாறாயிற்று.

(௨)

'அளப்பரியையே'எனச் சொற்சீரடிவந்தமையாற் சொற்சீர்வண்ணமுமாயிற்று; ஈண்டுச் சொற்சீரென்றது, அளவடியிற்குறைந்தும் வஞ்சியோசையன்றி அகவலோசையாயும்வரும் அடியினை.

௨



# பதிற்றுப் பத்து.

(பி - ம்.) ௧௦. வரினும்பாற்றும். ௧௪. வண்டுபடுதுப்பின்.

௧௨. சான்றோர்மெமறை.

(கரு.) யாண்டு தலைப்பெயர வேண்டு புலத்திறுத்து
முனையெரி பரப்பிய துன்னருஞ் சீற்றமொடு
மழைதவழ்பு தலைஇய மதின்மர முருக்கி
நிரைகளி றொழுகிய நிரைய வெள்ளம்
பரந்தாடு கழங்கழி மன்மருங் கறுப்பக்
கொடிவிடு குரூஉப்புகை பிசிரக் கால்பொர
வழல்கவர் மருங்கி னுருவறக் கெடுத்துத்
தொல்கவி னழிந்த கண்ணகன் வைப்பின்
வெண்பூ வேளையொடு பைஞ்சுரை கலித்துப்
பீரிவர்பு பரந்த நீரறு நிறைமுதற்
சிவந்த காந்தண் முதல்சிதை மூதிற்
புலவுவில் லுழவிற் புல்லாள் வழங்கும்
புல்லிலை வைப்பிற் புலஞ்சிதை யரம்பி
னறியா மையான் மறந்துதுப் பெதிர்ந்தநின்
பகைவர் நாடுங் கண்டுவந் திசினே
கடலவுங் கல்லவும் யாற்றவும் பிறவும்
வளம்பல நிகழ்தரு நனந்தலை நன்னாட்டு
விழவறு பறியா முழவிமிழ் மூதூர்க்
கொடிநிழற் பட்ட பொன்னுடை நியமத்துச்
சீர்பெறு கலிமகி ழியம்பு முரசின்
வயவர் வேந்தே பரிசிலர் வெறுக்கை

தாரணிந் தெழிலியு தொடிசிதை மருப்பிம்
போர்வல் யானைச் சேர லாத
நீவா ழியரிவ் வுலகத் தோர்க்கென
வுண்டுறை மாறிய மழலை நாவின்
மென்சொற் கலப்பையர் திருந்துதொடை
வெய்துற வறியாது நந்திய வாழ்க்கைச்
செய்தன் மேவ லமர்ந்த சுற்றமோ
டொன்றுமொழிந் தடங்கிய கொள்கை யென்றும
பதிபிழைப் பறியாது துய்த்த லெய்தி

## இரண்டாம் பத்து. கக

நிரைய மொரீஇய வேட்கைப் புரையோர்
மேயின ருறையும் பலர்புகழ் பண்பி
னீபுறந் தருதலி னோயிகந் தொரீஇய
யாணர்நன் னாடுங் கண்டுமதி மருண்டனென்
மண்ணுடை ஞாலத்து மன்னுயிர்க் கெஞ்சா
தீத்துக்கை தண்டாக் கைகடுந் துப்பிற்
புரைவயிற் புரைவயிற் பெரிய நல்கி
யேம மாகிய சீர்கெழு விழவி
னெடியோ னன்ன நல்லிசை

சO பொடியா மைந்தநின் பண்புபல நயந்தே.

துறை - செந்துறைப்பாடாண்பாட்டு.

வண்ணம் - ஒழுகுவண்ணம்.

தூக்கு - செந்தூக்கு.

பெயர் - (ச) நிரையவெள்ளம்.

(உ) நீசெற்றறோடு (எ) அழல்கவர்மருங்கின் உருவறக்கெடுத்தென முடிக்க.

ச. நிரையவெள்ளமென்றது பகைவர்க்கு நிரயபாலரைப்போலும் படைவெள்ள மென்றவாறு; நிரையமென்றது நிரயத்துவாழ்வாரை.

இச்சிறப்பானே இதற்கு 'நிரையவெள்ளம்' என்றுபெயராயிற்று.

ரு. மன்மருங்கறுப்பவென்றது மன்மருங்கறுப்பவேண்டியென்ற வாறு.

எ. கெடுத்தென்பதனைக் கெடுக்கவெனத்திரிக்க.

(அ) தொல்கவினழிந்த கண்ணகன்வைப்பினையும் (கஉ) புல்லாள் வழங்கும் (கூ) புல்லிலைவைப்பினையுமுடைய புலஞ்சிதைய (கஙு) நாடெனமுடிக்க.

அ. தொல்கவினழிந்தவைப்பென்றது சூடுண்டு அழிந்த வூர்களை.

கூ. புல்லிலைவைப்பென்றது குடிபோய்ப் பாழ்த்தவூர்களை.

கூ. சுரைகவிக்கவெனத் திரிக்க.

கO - கக. நிறைமுதற்காத்தவெனக்கூட்டுக.

கக - கரு. மூதில்லையுடைய புல்லிலைவைப்பெனக்கூட்டுக.

கரு. புல்லிலைவைப் பென்றது புல்லிய இலைகளாலே வேயப் பட்ட ஊரென்றவாறு; இதனை, 'நாலாக்கலிங்கம்' (பதிற்றுப்பத்து, கஉ) என்றதுபோலக்கொள்க.

கஉ. புல்லாளென்றது புல்லியதொழிலையுடைய ஆறலைகள்வரை.

## கஉ பதிற்றுப் பத்து.

(கரு) அரம்பிற் (கஎ) பகைவரொனமுடிக்க.

கரு. அரம்பென்பது குறும்பு.

உ0 - உக. சீர்பெறு கலிமகிழியம்பும் முரசின் வயவரென்றது வெற்றிப்புகழ்பெற்ற மிக்கமகிழ்ச்சியானே ஒலிக்கின்ற முரசினையுடையவீர ரொன்றவாறு.

கக - உ0. நியமத்தியம்புமென முடிக்க.

உச - உரு. நீ வாழியரிவ்வுலகத்தோர்க்கெனத் திருந்துதொடை வாழ்த்தவெனமுடித்து, இவ்வுலகத்தோராக்கத்தின்பொருட் டு நீ வாழ்வா யாகவெனச்சொல்லித் திருந்திய நரப்புத்தொடையினையுடைய யாழொடு வாழ்த்தவெனவுரைக்க.

தொடையொடெனவிரியும் ஒடு - வேறுவினையொடு.

உஎ - உசு. மழலைநாவினையும் மென்சொல்லினையுமுடைய கலப் பையரொனக்கொள்க.

(உஎ) வெய்துறவறியாது நந்தியவாழ்க்கையினையும் (உகூ) ஒன்று மொழிந்து அடங்கியகொள்கையினையும் (கூக) நிரையமொரீஇய வேட்கை யினையுமுடைய புரையோர் (உஅ) செய்தன மேவலமர்ந்த சுற்றத்தொடு (கூ0) பதிபிழைப்பறியாது துய்த்தலெய்தி (கூஉ) மேயினருறையும் (கூச) நாடெனமாறிக்கூட்டியுரைக்க.

உஅ. செய்தனமேவலமர்ந்தசுற்றமென்றது சுற்றத்தலைவர்செய்த காரியங்களைப் பின்சிதையாது தாம் அவற்றை மேவுதலையுடைய அத்தலைவரொடு மனம்பொருந்தின சுற்றமென்றவாறு.

செய்தனவென்பது கடைக்குறைந்தது.

(கூகூ) ஈத்துக்கைதண்டா (ச0) மைந்தவென முடிக்க.

கூஎ. புரைவயிற் புரைவயிற் பெரியநல்கியென்றது உயர்ந்த தேவாலயமுள்ளவிடங்களிலே உயர்ந்த ஆபரணமுள்ளிட்டவற்றைக் கொடுத்தென்றவாறு.

(சக) நின்பகைவர்நாடும் கண்டுவந்தேன்; அதுவேயன்றி (உக) வேந்தே, வெறுக்கை, (உகூ) சேரலாத, (கூகூ) நீ புறந்தருதலின், நோயிகந் தொரீஇய நின் (கூச) நாடும் கண்டு மதிமருண்டேன்; இவை இரண்டும் காணவேண்டினகாரணம் யாதெனின், (ச0) மைந்த, நின்பண்புபலவற்றையும் காணஈயங்தென வினைமுடிவுசெய்க.

இதனாற்சொல்லியது, அவன்வென்றிச்சிறப்பும் தன் நாடுகாத்தற்சிறப் பும் உடன்கூறியவாறாயிற்று.

(பி-ம்.) ௯. கழங்குவழி. அ. கவினிழந்த.
க0, பீர்வாய்பரந்த. (௯)

(கசு.) கோடுறழ்ந் தெடுத்த கொடுங்க ணிஞ்சி
நாடுகண் டன்ன கணைதுஞ்சு விலங்கற்
றுஞ்சுமரக் குழாஅந் துவன்றிப் புனிற்றுமகள்
பூணா வையவி தூக்கிய மதில
நல்லெழி னெடும்புதவு முருக்கிக் கொல்லு
மேன மாகிய நுனைமுரி மருப்பிற்
கடாஅம் வார்ந்து கடுஞ்சினம் பொத்தி
மரங்கொன் மழகளிறு முழங்கும் பாசறை
நீடினை யாகலிற் காண்குவந் திசினே
யாறிய கற்பி னடங்கிய சாய
லூடினு மினிய கூறு மின்னகை
யமிர்துபொதி துவர்வா யமர்த்த நோக்கிற்
சுடர்நுத லசைநடை யுள்ளலு முரியள்
பாய லுய்யுமோ தோன்ற றவின்று
திருமணி பொருத திகழ்விடு பசும்பொன்
வயங்குகதிர் வயிரமொ டுறழ்ந்துபூண் சுடர்வர

வெழுமுடி கெழீஇய திருஞெம ரகலத்துப்
புரையோ ருண்கட் டுயிலின் பாயல்
பாலுங் கொளாலும் வல்லோய்நின்
உ0 சாயன் மார்பு நனியலைத் தன்றே.

இதுவுமது.

பெயர் - (கஅ) துயிலின் பாயல்.

க. கோடுறழ்ந்து எடுத்த கொடுங்கணிஞ்சியென்றது மலையுள்ள விடங்களிலே அம்மலைதானே மதிலாகவும் மலையில்லாத இடங்களில் மதிலே அரணாகவும் இவ்வாறு மலையொடுமாறுடவெடுத்த வளைந்தஇடத்தை யுடைய புறமதிலென்றவாறு.

உறழவெனத்திரிக்க. 'கோடுபுரந்தெடுத்த' என்பது பாடமாயின் மதிலில்லாத இடங்களை மலை காவலாய்ப்புரக்கவெடுத்தவென்க.

உ. நாடுகண்டன்ன கணைதுஞ்சு விலங்கலென்றது நெடுநாட்பட உடைமதிற்பட்டகாலத்தே விளைத்துக்கோடற்கு வயலும் குளமும் உளவாகச் சமைத்துவைத்தமையாற் கண்டார்க்கு நாடுகண்டாற்போன்ற அப்புக் கட்டுக்கள்தங்கும் மலைபோன்ற இடைமதிலென்றவாறு.

கரு. பதிற்றுப் பத்து.

விலங்கல் போறலின், விலங்கலெனப்பட்டது. நாடுகண்டாலொப்பது அம்மதிலையடைந்தவிடமென்னின், அவ்விடவனுமைபற்றி அதன் உவமையை அம்மதில்மேலதாகக் கூறிற்றெனக்கொள்க.

௯. துஞ்சுமரமென்றது மதில்வாயிலிற்றூங்கும் கணையமரங்களை; இனிக் கழுக்கோலாக நாட்டிய மரமென்பாருமுளர்.

௨. ஐயவியென்றது கதவிற்குக் காவலாகப் புறவாயிலே தூக்கப் படும் துலாமரத்தை ; அப்புக்கட்டென்பாருமுளர். ஈண்டுமதிலென்றது உண்மதிலை.

(௧) கொடுங்கணிஞ்சியையும் (௨) விலங்கலையுமுடைய (௨) மதிலெனக் கூட்டுக.

இனி இடையில் விலங்கலென்றதனை மாற்றார் படையை விலங்குதலை யுடையவென்றாக்கி, முன்னின்ற கொடுங்கணிஞ்சியென்ற தொன்றுமே மதிலதாக ஐயவி தூக்கிய மதிலென்றதனை ஆகுபெயரான் ஊர்க்குப் பெயராக்கி நாடுகண்டன்ன ஊரென மாறியுரைப்பாருமுளர்.

௧௯. உள்ளலுமுரியளென்றது யான் குறித்த நாளளவும் ஆற்றி யிருக்கவென்ற நின்னேவல்பூண்டு நின்னை உள்ளாதிருத்தலேயன்றி நீ குறித்த நாளுக்குமேலே நீட்டித்தாயாகலின், நின்னை நினைத்து வருந்துதலு முரியளென்றவாறு.

௧௨ - ௧௩. தாவின்று திருமணிபொருத திகழ்விடுபசும்பொனென்றது வலியில்லையானபடியாலே அழகிய மணிகளொடு பொருத ஒளி விடுகின்ற பசும்பொனென்றவாறு.

ஈண்டுத்தாவென்றது வலி ; பொன்னுக்கு வலியாவது

உரனுடைமை. இன்றென்பதனை இன்றாகவெனத்திரித்து இன்றாகையாலெனக்கொள்க. என்றது - ஒளியையுடைய மணிகளோடு பொரவற்றாம்படி ஒட்டற்ற ஒளி யையுடைய பசும்பொனென்றவாறு.

கடு - கசு. பூண் பசும் பொன் வயிரமொடு உறழ்ந்து சுடர்வரவெனக்கூட்டி, பூணுனபசும்பொன் றன்னிடையழுத்தின வயிரங்களொடு மாறுபட்டு விளங்கவெனவுரைக்க.

கஅ. புரைபோனொன்றபன்மையாற் காதன்மகளிர் பல ரெனக் கொள்க.

கஎ - கஅ. அகலப் பாயலென இருபெயரொட்டாக்கி, அத்தை அல்வழிச்சாரியையென்க. துயிலினியபாயலெனவுரைக்க.

அகலத்தை மகளிர்க்குப் பாயலெனச்சிறப்பித்தமையான், இதற்கு 'துயிலின்பாயல்' என்று பெயராயிற்று.

க கூ. பாலுங்கொளாலும் வல்லோயென்றது அவ்வகலப்பாயலை

வேற்றுப்புலத்து வினையில்வழி நின்மகளிர்க்கு நுகரக்கொடுத்தற்கு நின்னி



டத்தினின்றும் பகுத்தலையும் வினையுள்வழி அம்மகளிர்பால்நின்றும் வாங்கிக் கோடலையும் வல்லோயென்றவாறு.

(அ) பாசறைக்கண் நீ (கூ) நீடினையாகவின் நின்னைக் காணவந்தேன்; நின்தேவியாகிய (க கூ) அசைநடை நின்னை

நினைத்தலுமுரியள்; ஆனபின்பு அவள் (கசு) பாயல்வருத்தத்திற்கு உய்யுமோ, உய்யாளன்றே; தோன்றல், (கஎ - கஅ) அகலப்பாயல் (கக) பாலும் கொளாலும் வல்லோய்; நின் (உ0) மார்பு மிக அவளை வருத்திற்றுக்காண்; நீ அவள்பாற் கடிதெழுக வென வினைமுடிவு செய்க.

இதனாற் சொல்லியது, அவன்வென்றிச்சிறப்பும் குலமகளோடு நிகழ்ந்த இன்பச்சிறப்பும் உடன்கூறியவாறாயிற்று.

(சு) (கஎ.) புரைவது நினைப்பிற் புரைவதோ வின்றே
பெரிய தப்புந ராயினும் பகைவர்
பணிந்துதிறை பகரக் கொள்ளுநை யாதலிற்
றுளங்குபிசி ருடைய மாக்கட னீக்கிக்
கடம்பறுத் தியற்றிய வலம்படு வியன்பணை
யாடுநர் பெயர்ந்துவந் தருப்பலி தூஉய்க்
கடிப்புக் கண்ணுறூஉந் தொடித்தோ ளியவ
ரரணங் காணாது மாதிரந் துழைஇய
நனந்தலைப் பஞ்ஞிலம் வருகவிந் நிழலென
ஞாயிறு புகன்ற தீதுதீர் சிறப்பி
னமிழ்துதிகழ் கருவிய கணமழை தலைஇக்
கடுங்கால் கொட்கு நன்பெரும் பரப்பின்
விசும்புதோய் வெண்குடை நுவலும்
பசும்பூண் மார்ப பாடினி வேந்தே.

இதுவுமது.

பெயர் - (ரு) வலம்படு வியன்பணை.

ரு. வலம்படுவியன்பணையென்றது போர்செய்து வருந்தாமற் பகைவர் வெருவியோடமுழங்கி அரசனுக்கு வென்றி தன்பாலேபடநின்றமுரச மென்றவாறு.

இச்சிறப்பான் இதற்கு 'வலம்படுவியன்பணை' என்றுபெயராயிற்று.

சு. ஆடுநரென்றது வினையெச்சமுற்றுவினைத்திரிசொல்.

கக. அமிழ்துதிகழ்மழையெனமுடிக்க.

அமிழ்தென்றது நீர். தலைஇயென்பதனைத் தலைய வெனத்திரிக்க.

## கஎ பதிற்றுப் பத்து.

கஉ. வெண்குடைநுவலுமென்றது வெண்குடையின்அருட்சிறப் பைச் சொல்லுமென்றவாறு.

கஉ - கச. நுவலுமார்பவென முடிக்க.

இஃது ஏதுப்பெயர்.

(ரு) வியன்பணையைக் (எ) கடிப்பைக்கண்ணுறுமியவர், (அ) 'அரணங்காணுது மாதிரந்துழைஇய (கூ) பஞ்ஞிலம் இங்கிழற்கண்ணே வருக' எனச்சொல்லி (கஉ) வெண்குடையின் அருட்சிறப்பைச் சொல்லு தற்குக் காரணமாய்நின்ற (கச)

பசும்பூண் மார்ப, பாடினிவேந்தே, நினக் குப் (க) புரைவது நினைப்பிற் (உ) பகைவர் பெரிய தப்புநராயினும் (ங) பணிந்து திறைபகரக் கொள்ளுநையாகலின், (க) புரைவதோவின்றென மாறிக்கூட்டி வினைமுடிவு செய்க.

இதனாற்சொல்லியது, பொறையுடைமையொடுபடுத்து அவன்வென் றிச்சிறப்புக் கூறியவாறாயிற்று.

(பி - ம்.) க. புரைவதோவன்றே.

(எ) (கஅ.) உண்மின் கள்ளே யடுமின் சோறே

யெறிக திற்றி யேற்றுமின் புழுக்கே
வருநர்க்கு வரையாது பொலங்கலந் தெளிப்ப
இருள்வண ரொலிவரும் புரியவிழ் ஐம்பா
லேந்துகோட் டல்குன் முகிழ்நகை மடவரற்
கூந்தல் விறலியர் வழங்குக வடுப்பே
பெற்ற துதவுமின் றப்பின்று பின்னு
மன்னுயி ரழிய யாண்டுபல துளக்கி
மண்ணுடை ஞாலம் புரவெதிர் கொண்ட
தண்ணிய லெழிலி தலையாது மாறி
மாரி பொய்க்குவ தாயினுஞ்
சேர லாதன் பொய்யல னசையே.

துறை - இயன்மொழிவாழ்த்து.

வண்ணம் - ஒழுகுவண்ணம்.

தூக்கு - செந்தூக்கு.

பெயர் - (சு) கூந்தல்விறலியர்.

உ. இற்றி - இறைச்சி.

(சு) வருநர்க்கு வரையாது (ச) வழங்குக அடுப்பென முடிக்க; வரையாமலென்த்திரித்து வரையாதொழியும்படியெனக்கொள்க.

## இரண்டாம் பத்து.

கள்

(சு) பொலங்கலந்தெளிர்ப்ப வென்பதனையும் (ச) வழங்குகவென் பதனோடு முடிக்க.

சு. கூந்தல்விறலியர் வழங்குகவடுப்பென்றது வந்தார்க்குச் சோறு கடிதினுதவுதற்பொருட்டு அடுப்புத்தொழிற்குரியரல்லாத வரிசைமகளிரும் அடுப்புத்தொழிலிலே வழங்குகவென்றவாறு.

இச்சிறப்பானே இதற்கு 'கூந்தல்விறலியர்' என்றுபெயராயிற்று.

(ச) ஐம்பால் (சு) கூந்தலென மாறிக்கூட்டுக; இனி மாறாது கூந் தல் விறலியரென்றதை ஒருபெயராகவுரைப்பினு மமையும்.

நீயிர் (க) கள்ளினையுண்மின்; அதுவேயன்றி உண்டற்குச் சோற் றையடுமின்; அதுவேயன்றித் (உ) தின்றற்குத் திற்றியையறுமின்; அதுவே யன்றித் தின்றற்குப் புழுக்கப்படுமவற்றை

அடுப்பிலேயேற்றுமின்; (கூ) வருநர்க்குவரையாதே கடிதின் உதவுதற்பொருட்டுக்(கூ) கூந்தல்விறலியர் அடுப் பிலேவழங்குக; இன்னும் வருநர்க்குச் சோறிடுதலேயன்றி அவன்பால் நாம் பொருளாகப் (எ) பெற்றதுகொடுமின்; இவ்வாறு எல்லாங் கொடுத்தாலும் பின்னுக்குக் காரியத்திறப்பில்லை; அதற்குயாது காரணமெனின், (அ) மன் னுயிரழிய (கக) மாரிபொய்த்தாலும் (கஉ) சேரலாதன் நசை பொய்யலன்; அதுகாரணமென வினைமுடிவுசெய்க.

இதனாற்சொல்லியது, அவன்கொடைச்சிறப்புக் கூறியவாறாயிற்று.

(பி - ம்.) எ. பெற்றவுதவுமின். கஉ. பொய்யிலனசையே.

அ. மன்னுயிரொழிய. (அ)

(கக.) கோள்ளை வல்சிக் கவர்காற் கூளியர்
கல்லுடை நெடுநெறி போழ்ந்துசுர னறுப்ப
வொண்பொறிக் கழற்கான் மாறா வயவர்
திண்பிணி யெஃகம் புலியுறை கழிப்பச்
செங்கள விருப்பொடு கூலமுற்றிய
வுருவச் செந்தினை குருதியொடு தூஉய்
மண்ணுறு முரசங் கண்பெயர்த் தியவர்
கடிப்புடை வலத்தர் தொடித்தோ ளோச்ச
வம்புகளை வறியாச் சுற்றமோ டம்புதெரிந்
தவ்வினை மேவலை யாகலி

னெல்லு நளியிருந் தெல்லிப் பெற்ற
வரிதுபெறு பாயற் சிறுமகி ழானுங்
கனவினு ளுறையும் பெருஞ்சால் பொடுங்கிய
நாணுமலி யாக்கை வாணுத லரிவைக்



## பதிற்றுப் பத்து.

கியார்கொ லளியை
யினந்தோ டகல வூருட னெழுந்து
நிலங்கண் வாட நாஞ்சில் கடிந்துநீ
வாழ்த லீயா வளனறு பைதிர
டன்ன வாயின பழனந் தோறு
மழன்மலி தாமரை யாம்பலொடு மலர்ந்து
நெல்லின் செறுவி னெய்தல் பூப்ப
வரிநர் கொய்வாண் மடங்க வறைநர்
தீம்பிழி யெந்திரம் பத்தல் வருந்த
வின்றோ வன்றோ தொன்றோர் காலை
நல்லம னளிய தாமெனச் சொல்லிக்
காணுநர் கைபுடைத் திரங்க
மாணா மாட்சிய மாண்டன பலவே.

துறை - பரிசிற்றுறைப்பாடாண்பாட்டு.
வண்ணம் - ஒழுகுவண்ணமும் சொற்சீர்வண்ணமும்.
தூக்கு - செந்தூக்கு.
பெயர் - (கஅ) வளனறுபைதிரம்.

க. கவர்கால் - செலவைவிரும்பின கால்.

உ. சுரன் - வழியிலருமை.

ஃ. எஃகம்புலியுறைகழிப்பவென்றது எஃகினைப் புலியுறைகழித் துக் கடைவனகடைந்தும் அல்லன வாய்கீறியும் போர்க்குரியவாம்படி பண்ணவென்றவாறு.

ஒ. கூலமுற்றியவென்றது பண்டமாகமுற்றியவென்றவாறு; இனிப் பலிக்குரிய மற்றைப்பண்டங்கள் குறைவறக்கூடினவென்பாருமுளர்.

கூ. வம்பு - கைச்சாடு.

(உ) சுரனறுப்பப் (ஃ) புலியுறைகழிப்பத் (அ) தோளோச்ச (க0) அவ்வினைமேவலையெனமுடிக்க.

கக. எல்லுநனியிருந்தென்றது பகற்பொழுதின்கண்ணே ஒரு விநோதமுமின்றி நெடிதே வருந்தியிருந்தென்றவாறு.

(கக) பெற்ற (கஉ) மகிழெனமுடிக்க.

அரிதுபெறுதலைப் பாயன்மேலேற்றுக. ஈண்டுப் பாயல் - உறக்கம்.

(கசு) ஊருடனெழுந்து இனந்தோடகலவெனவும் (கஎ) காஞ்சில் கடிந்து நிலங்கண்வாடவெனவுங்கூட்டுக.

ஊரெழுந்தென்னுமுதல்வினையை வழுவமைதியால் இனந்தோடகல வென்னும் அதன்சினைவினையொடு முடிக்க.

(க ௬) தோடகலக் (க எ) கண்வாட (க ௮) அன்னவாயினவென முடிகக.

ஈண்டுஆயினவென்பது தொழிற்பெயர்.

கஎ - க௮. நீவாழ்தலீயாவென்றது வென்று வாழ்வுகொடாதவென்றவாறு. நீ பண்டுபோலே குடியேறுக

'வாழ்தலீயா' என்ற அடைச்சிறப்பான், இதற்கு 'வளனறுபைதிரம்' என்று பெயராயிற்று.

உ0. தாமரைமலரவெனத் திரிக்க.

உஉ. கொய்வாள் மடங்கவென்றது நெற்றுளின் பருமையாலே கொய்யும் அரிவாட்கள் தங்கள் வாய்மடியவென்றவாறு.

உ௩. எந்திரமென்றது ஆலையை.

எந்திரமென்னு முதலெழுவாயை வழுவமைதியாற் பத்தல்வருந்த வென்னும் அதன் சினைவினையோடு முடிக்க. பத்தல் வருந்தலாவது பல காலும் சாறோடி நனைந்துசாதல்.

(உ0) தாமரைமலர (உக) செய்தல்பூப்ப (உஉ)

வாள்மடங்கப் (உக) பத்தல்வருந்த (உ௫) நல்லவென முடிக்க.

உஎ. மாணுமாட்சிய மாண்டனவென்றது மாட்சிமைப்படத் திருத்தினும் மாட்சிமைப்படாத அழகையுடையவாய்ப் பின்னைத் திருந் தாதவளவேயன்றி உருமாய்ந்தனவென்றவாறு.

மாணுதவற்றை மாட்சியவென்றது, பண்டு அழகியவுரும் வயதுமாய்த் தோன்றிக்கிடந்த பண்புபற்றி யெனக்கொள்க. மாட்சியவென்பது வினை யெச்சமுற்று. இனி மாணுமாட்சிய வென்பதற்கு மாணுமைக்குக் காரண மாகிய பெருக்குமுதலாயவற்றின் மாட்சிய வென்பாருமுளர்.

(உஎ) பலவாகிய (கஅ) நீ வாழ்தலீயா வளனறுபைதிரம் (கச) ஊருடனெழுந்து இனம் தோடு ஆகல (கஎ) நாஞ்சில்கடிந்து கிலங்கண் வாட (கக) அன்னவாயினவை பழனந்தோறும் தாமரை ஆம்பலொடு மலர நெல்லின்செறுவில் நெய்தல்பூப்ப அரிநர் கொய்வாள்மடங்க அறைநரெந்திரம் பத்தல்வருந்தத் தொன்றோர்காலை நல்லமன் அளியதாமெனச் சொல்லிக் காணுநர் கைபுடைத்திரங்க மாணுமாட்சிய மாண்டனவெனக் கூட்டுக.

(கஅ) பைதிரமென்னும் எழுவாய்க்கு (உஎ) மாண்டனவென்பது பயனிலை; அன்னவாயின வென்னும் பெயரும் இடையே ஒருபயனெனப் படும்.



## பதிற்றுப் பத்து.

(௧௬) அன்னவாயின (உ௭) மாணுமாட்சிய மாண்டனவென்

றது (௧அ) பைதிரங்கள் ஊருடனெழுதன் முதலாய வறுமையையுடைய ஊ அளவாய் நின்றன; பின் அவ்வளவினவன்றித் திருத்தவும் இருந்தாநிலைமை

யவாய் நின்றன; பின் அவ்வளவுமன்றி ஊரும்வயலும் தெரியாதபடி உருவ

மாய்ந்தன வென்றவாறு.

(௧௦) நீ அவ்வினைமேவலையாயிருந்தாய்; நீ வினையை மேவுகின்ற

படியால், (௧௬) கனவினுளுறையும் (௧௪) நின்னரிவைக்கு (௧௫) நீ யார்

கொல்; நீ அவள்பால்வாராமைக்குக் காரணம் யாது? நீ அழிக்க என்று அழி

ந்த நாடுகள் அழிந்து அற்றல் வருவலெனின், ஆம்; அழிக்க அழிந்து நீ பின்

(௧அ) வாழ்தலீயாத பைதிரம் (உ௬) காணுநர் கைபுடைத்திரங்க (உ௭)

மாணுமாட்சியவாய் மாண்டன; அதனால், அதுகுறையன்று; நின் அன்பின்

மையேகுறை; இனி நீ அவள்பாற் கடிது எழுகென வினைமுடிவுசெய்க.

இதனாற்சொல்லியது, அவன்வென்றிச்சிறப்பும்

குலடகளோடு நீக

ழ்ந்த இன்பச்சிறப்பும் உடன்கூறியவாறாயிற்று.

பாணன் பாசறைக்கண்வந்து தேவி ஆற்றாமைகூறி இனி அவள்

பாற் போகவேண்டுமென்று இரந்தமையாற் பரிசிற்றுறையாயிற்று.

(௧0) 'அவ்வினைமேவலை யாகலின்' எனவும், (௧௫) 'யார்கொ

லளியை' எனவும் சொற்சீர் வந்தமையாற் சொற்சீர் வண்ணமு மாயிற்று.

(பி - ம்.) ௪. கழிப்பி. ௨௯. பத்தர்வருந்த.

௧௨. சிறுமகிமானும். (௯)

(௨0.) நுங்கோ யாரென வினவி னெங்கோ

விருமுந்நீர்த் துருத்தியுண்

முரணியோர்த் தலைச்சென்று

கடம்புமுத றடிந்த கடுஞ்சின முன்பி

னெடுஞ்சேர லாதன் வாழ்கவவன் கண்ணி

வாய்ப்பறி யலனே வெயிற்றுக ளனைத்து

மாற்றோர் தேஎத்து மாறிய வினையே

கண்ணி னுவந்து நெஞ்சவிழ் பறியா

நண்ணார் தேஎத்தும் பொய்ப்பறி யலனே

கனவினு மொன்னார் தேய வோங்கி நடந்து

படியோர்த் தேய்த்து வடிமணி யிரட்டும் பாகு

கடாஅ யானைக் கணநிரை யலற
வியலிரும் பரப்பின் மாநிலங் கடந்து
புலவ ரேத்த வோங்குபுகழ் நிறீஇ

## இரண்டாம் பத்து. உக

விரியுளை மாவுங் களிறுந் தேரும்
வயிரியர் கண்ணுளர்க் கோம்பாது வீசிக்
கடிமிளைக் குண்டுகிடங்கி
னெடுமதி னிலைஞாயி
லம்புடை யாரெயி லுள்ளழித் துண்ட
வடாஅ வடுபுகை யட்டுமலர் மார்ப
னெமர்க்கும் பிறர்க்கும் யாவ ராயினும்
பரிசின் மாக்கள் வல்லா ராயினும்
கொடைக்கட னமர்ந்த கோடா நெஞ்சினன்
மன்னுயி ரழிய யாண்டுபல மாறித்
தண்ணிய லெழிலி தலையா தாயினும்
வயிறுபசி கூர வீயலன்
வயிறுமா சிலீயர வனீன்ற தாயே.

துறை - இயன்மொழி வாழ்த்து.

வண்ணம் - ஒழுகுவண்ணமும் சொற்சீர்வண்ணமும்.

தூக்கு - செந்தூக்கும் வஞ்சித்தூக்கும்.

பெயர் - (௨௯) அட்டுமேலார்மார்பன்.

௯. முரணியோரையெனவிரியும் இரண்டாவதனைத் தலைச் சென்றென்பதற்கு இடத்திலேசென்றென்பது பொருளாக்காது முடிவிலே சென்றென்பது பொருளாக்கி அதற்குப் போந்தபொருள் முடிவுசெயலாக்கி அதனொடுமுடிக்க.

மேலே (௨௯) கொடைக்கடனமர்ந்த கோடா நெஞ்சினனென்று கொடைகூறுகின்றான் ஈண்டு (௧௩) ஓர்பாதுவீசியென்று கொடை கூறியதற்குக் காத்தற்குச் சென்றவிடைக் கொண்டவற்றைக் களம்பாடச் சென்றார்க்குக் கொடுக்குங்கொடையென வுரைக்க.

௨௦. அடா அடுபுகை - ஊர்சுடுபுகை. அட்டுமேலார் மார்பனென்றது பகைவரைக்கொன்று அச்செருக்கானே அகன்றமார்பனென்றவாறு.

இச்சிறப்பானே இதற்கு 'அட்டுமேலார்மார்பன்' என்று பெயராயிற்று.

௨௧. எமர்க்கும் பிறர்க்குமெனை நின்றவற்றைக் கொடைக்கடனமர்ந்த வென்பதனொடு முடித்து, எமர்க்கென்றது தன் பாணராகிய வெமர்க்கென்றும் பிறர்க்கென்றது தன்பாணரல்லாத பிறர்க்கென்று முரைக்க.

௨௧ - ௨௨. பரிசின்மாக்கள் யாவராயினும் வல்லாராயினுமெனக் கூட்டிப் பரிசின்மாக்களென்றதற்கு முன்சொன்ன எமர்க்கும் பிறர்க்கு மெனப்பட்டாரையே யாக்கி

# பதிற்றுப் பத்து.

படும் தோற்றமிலராயினுமெனவும் வல்லாராயினுமென்றதற்கு ஒருகல்வி மாட்டாராயினுமெனவு முரைக்க.

யாவராயினு மென்றவும்மை இழிவுசிறப்பு ; வல்லாராயினுமென்ற வும்மை எதிர்மறை.

(௧0) நடந்து (௧௧) கடந்து (௧௪) நிறீஇ (௧௬) வீசியென நின்ற வற்றை (உ௧) நெஞ்சினனென்னு முற்றுவினைக்குறிப்பொடு முடிக்க.

உ௬. வயிறுபசிகூரவீயலனென மூன்றுவதும் கொடைகூறியதற்கு மழைபெய்யா விளைவில்காலத் தன் பரிகரமாயுள்ளார்க்கு அவர்கள்பசித்து வருந்தாமல் வேண்டும்பொழுதுகளிலே வேண்டுவன கொடுக்குமென்று ஓர்கொடைநிலையாக வுரைக்க.

(௬) நுங்கோ யாரெனவினவின் எங்கோ, (௫) சேரலாதன், அவன் கண்ணிவாழ்க ; அவனியல்பிருக்குமாறுசொல்லின், (எ) மாற்றோர்தேளத்து மாறியவினையே (௬)வெயிற்றுகளனைத்தும் வாய்த்தலறியான்; (௯) பொய்த்த லறியான் ; (உ0) அட்டுமலர்மார்பன், (உ௧) கொடைக்கடனமர்ந்த கோடாநெஞ்சினன் ; கோடையிடத்து (உ௫) எழிலி தலையாதாயினும் (உ௬) வயிறுபசிகூரவீயலன் ; ஆதலான், (உஎ) அவனையீன்றதாய் வயிறுவிளங்கு வாளாகவென வினைமுடிவுசெய்க.

இதனாற்சொல்லியது, அவன்றன் செல்வப் பொலிவுகண்டு

நீ யாரு டையபாணனென்று வினவியாற்கு யான் இன்னுருடையேனென்று சொல்விமுடிக்க, அவன் குணங்களின்னகூறிப் பின்னவனைவாழ்த்திமுடித்த வாறாயிற்று.

(உ) 'இருமுந்நீர்' எனவும், (கூ) 'முரணியோர்' எனவும், (கஎ) 'கடிமிளை' எனவும், (கஅ) 'நெடுமதில்' எனவுமெழுந்த நான்கடியும் வஞ்சி யடியாகலான், வஞ்சித்தூக்குமாயிற்று.]

கனவினுமென்பது கூன்.

(பி - ம்.) கo. ஒருங்குநடந்து. உக. எமக்கும்.

,, ஓங்குநடந்து. (கo)

இதன்பதிகத்து, யவனர்ப்பிணித்தென்றது யவனரைப் போருள் அகப்படுத்தியென்றவாறு.

நெய் தலைப்பெய்து கை பிற்கொளீஇ யென்பதற்கு அக்காலத்துத் தோற்றாரை நெய்யைத் தலையிற்பெய்து கையைப் பிறகு பிணித்தென் றுரைக்க.

அருவிலைநன்கலம் வயிரமொடுகொண்டென்றது அந்த யவனரைப் பிணிதண்டமாக அருவிலைநன்கலமும் வயிரமுங்கொண்டென்றவாறு.

## இரண்டாம் பத்து. 

(பதிகம்.)

மன்னிய பெரும்புகழ் மறுவில் வாய்மொழி

பின்னிசை முரசி னுதியஞ் சேரற்கு
வெளியன் வேண்மா ணல்லினி யீன்றமக
னமைவர லருவி யிமையம் விற்பொறித்
திமிழ்கடல் வேலித் தமிழகம் விளங்கத்
தன்கோ னிறீஇத் தகைசால் சிறப்பொடு
பேரிசை மரபி னாரியர் வணக்கி
நயனில் வன்சொல் யவனர்ப் பிணித்து
நெய்தலைப் பெய்து கையிற் கொளீஇ
யருவிலை நன்கலம் வயிரமொடு கொண்டு
பெருவிறன் மூதூர்த் தந்துபிறர்க் குதவி
யமையார்த் தேய்த்த வணங்குடை நோன்றா
ளிமையவரம்ப னெடுஞ்சேரலாதனைக்

குமட்டூர்க்கண்ணனார் பாடினார் பத்துப்பாட்டு. அவைதாம்: புண்ணுமிழ்குருதி, மறம்வீங்கு பல்புகழ், பூத்தநெய்தல், சான்றோர்மெய்ம்மறை, நிரையவெள்ளம், துயிலின்பாயல், வலம்படுவியன்பணை, கூந்தல்விறலியர், வளனறுபைதிரம், அட்டுமலர்மார்பன். இவை பாட்டின்பதிகம்.

பாடிப்பெற்றபரிசில்: உம்பற்காட்டு

ஐஞ்ஞூறூர் பிரமதாயங்கொடுத் து முப்பத்தெட்டியாண்டு தென்னாட்டுள் வருவதனிற் பாகங் கொடுத்தான் அக்கோ.

இமயவரம்பனெடுஞ்சேரலாதன் ஐம்பத்தெட்டியாண்டு வீற்றிருந் தான்.

## இரண்டாம்பத்து முற்றிற்று.

---

## மூன்றாம்பத்து.

---

(உக.) சொற்பெயர் நாட்டங் கேள்வி நெஞ்சமென்
றைந்துடன் போற்றி யவைதுணை யாக
வெவ்வஞ் சூழாது விளங்கிய கொள்கைக்
காலை யன்ன சீர்சால் வாய்மொழி
௫ யுருகெழு மரபிற் கடவுட் பேணியர்
கொண்ட தீயின் சுடரெழு தோறும்
விருப்புமெய் பரந்த பெரும்பெய ராவுதி
வருநர் வரையார் வார வேண்டி
விருந்துகண் மாறா துணீஇய பாசவ

ஊனத் தழித்த வானிணக் கொழுங்குறை
குய்யிடு தோறு மானா தார்ப்பக்
கடலொலி கொண்டு செழுநகர் நடுவ
ணடுமை யெழுந்த வடுநெய் யாவுதி
யிரண்டுடன் கமழு நாற்றமொடு வானத்து
நிலைபெறு கடவுளும் விழைதகப் பேணி
யார்வளம் பழுனிய வையந்தீர் சிறப்பின்
மாரியங் கள்ளின் போர்வல் யானைப்
போர்ப்புறு முரசங் கறங்க வார்ப்புச்சிறந்து
நன்கலந் தரூஉ மண்படு மார்ப
முல்லைக் கண்ணிப் பல்லான் கோவலர்
புல்லுடை வியன்புலம் பல்லா பரப்பிக்
கல்லுயர் கடத்திடைக் கதிர்மணி பெறூஉ
மிதியற் செருப்பிற் பூழியர் கோவே
குவியற் கண்ணி மழவர் மெய்ம்மறை
பல்பயந் தழீஇய பயங்கெழு நெடுங்கோட்டு
நீரறன் மருங்கு வழிப்படாப் பாகுடிப்
பார்வற் கொக்கின் பரிவேட் பஞ்சாச்
சீருடைத் தேஎத்த முனைகெட விலங்கிய

௩௦ யாண்டுபிழைப் பறியாது பயமழை சுரந்து
நோயின் மாந்தர்க் கூழி யாக
மண்ணு வாயின் மணங்கமழ் கொண்டு
கார்மலர் கமழுந் தாழிருங் கூந்த
லொரீஇயின போல விரவுமலர் நின்று
௩௫ திருமுகத் தலமரும் பெருமதர் மழைக்க
ணலங்கிய காந்த ளிலங்குநீ ரழுவத்து
வேயுறழ் பணைத்தோ ளிவளோ
டாயிர வெள்ளம் வாழிய பலவே.

துறை - செந்துறைப்பாடாண்பாட்டு.
வண்ணம் - ஒழுகுவண்ணம்.
தூக்கு - செந்தூக்கு.
பெயர் - (௩௩) அடுநெய்யாவுதி.

க. சொல் - சொல்லிலக்கணஞ் சொல்லுநூல். பெயர் - பொருளிலக்கணஞ்சொல்லுநூல்; "பெற்ற பெரும்பெயர் பலர்கை யிரீஇய" (பதிற்றுப் பத்து, ௧௦) என இத்தொகையுள் மேலே வந்தமையால், பெய ரென்பது பொருளாம். நாட்டம்-சோதிடநூல். கேள்வி-வேதம். நெஞ்ச மென்றது இந்திரியங்களின் வழியோடாது உடங்கிய தூயநெஞ்சினை.

ரு. எவ்வஞ்சூழாமை - உயிர்வருத்தஞ்சூழாமை; சூழாமலெனத் திரிக்க.

௬. காலை அன்ன வாய்மொழி - ஆதித்தனைப்போல எஞ்ஞான்றும் தப்பாதாகிய மெய்ம்மொழி; மொழியானென ஆனுருபுவிரிக்க; ஒடுவிரிப்பி னுமமையும்.

(உ) துணையாகக் (ரு) கொண்டவெனமுடிக்க.

எ. விருப்புமெய்யென்னும் ஒற்று மெலிந்தது; 'மைபரந்த' என் பதுபாடமாயின் மைபோலப்பரந்தவென்க.

கூ. பாசவர் - ஆட்டுவாணிகர்.

க0. ஊனம் - இறைச்சிகொத்தும் அடைகுறடு.

(கஉ) கடலொலிகொண்டு (கக) ஆர்ப்பவெனக்கூட்டி, ஆர்ப்ப (கரு) எழுந்தவெனமுடிக்க; இனி, 'கடலொலிகொண்ட' என்பது பாடமாயின், கடலொலிகொண்ட நகரென்க.

கரு. அடுநெய்யாவுதியென்றது அடுசில்நெய்யாகிய ஆவுதியென்ற வாறு; அடுநெய்யை ஆவுதியென்றது, விருந்து புறந்தருதலையும் ஒருவேள்வி யாக்கி ஆள்வினைவேள்வியென்று ஒரு துறையாக நூலுட்கூறலானென்பது.

௬

௨௬ **பதிற்றுப் பத்து.**

இச்சிறப்பானே இதற்கு 'அடுநெய்யாவுதி' என்று பெயராயிற்று.

எ - க கூ. ஆவுதியென்ற இரண்டனையும் அவற்றுடைய புகைமேற் கொள்க.

க ச. நாற்றமொடென்பதனை நாற்றத்தானெனக்கொள்க.

க ரு. கடவுளும் விழைதகவென்றது கடவுளரும் இவ்வாறு நாம்
அறஞ்செய்யப்பெறின் அழகிதென்று அதுவிரும்ப வென்றவாறு. பேணி
யென்றது, முன்சொன்ன வேள்வியால் தேவர்களையும் பின்பு அதனோடு ஒப்பித்துச்சொன்ன ஆள்வினைவேள்வியால் விருந்தாய் வரு மக்களையும் பேணியென்றவாறு; அதனைத்திரித்துப் பேணப் (க சு)பழுனியவென முடிக்க. பழுனியவென்பது பெயரெச்ச வினைத்திரிசொல்.

க சு. ஆர்வளம்பழுனிய சிறப்பென்றது கொடுக்கக் கொடுக்கக் குறைபடாத நிறைந்தசெல்வத்திலேநின்று பழுத்த சிறப்பென்றவாறு.

க எ. கள்ளிற்போர்வல்யானையென்னும் ஒற்று மெலிந்தது.

(க அ) ஆர்ப்புச்சிறந்து (க கூ) கலந்தரூஉம் மார்பவெனக் கூட்டுக.

க கூ. மண்படுமார்பவென்றது பகைவர்மண்ணெல்லாம் படுகின்ற மார்பவென்றவாறு.

(உ க) பல்லாபரப்பிக் (உ உ) கதிர்மணிபெறூஉஞ் (உ கூ) செருப் பென முடிக்க.

உ கூ. செருப்பென்பது ஒருமலை. மிதியலென்பது அடை; மிதி யென்று செருப்பிற்குப் பேராக்கிச் செருப்பல்லாத

செருப்பென்று வெளிப் படுத்தானாகவுரைக்க. (உச) குவியற்கண்ணியென்னுந் தொடைநோக்கி மிதியற்செருப்பெனவலிந்தது. மிதியற்செருப்பென்பதற்குப் பிற வாறு சொல்லுவாருமுளர்.

உச. குவியற்கண்ணியென்றதற்கு வெட்சிமுதல் வாகையீறாய போர்க்கண்ணியெல்லாம் குவிதலையுடைய கண்ணியென்க.

உரு - உகூ. பரிவேட்பு அஞ்சா அயிலையென்று வெளிப்படை கூறுகின்றானாகலின், அதற்கேற்ப, நீரறன்மருங்கு வழிப்படாவென்று பெய ரெச்சமறையே பாடமாகல் வேண்டும். இனிப்படாதென்று வினையெச்ச மறையாகிய பாடத்திற்கு நீரற்றவிடத்தில் தான் படாதபடியாலே கொக் கின் பரிவேட்புக்கு அஞ்சா அயிலையெனவுரைக்க. அயிலையென்பது ஒரு மலை.

(உ௮) நெடுங்கோட்டு (உகூ) அயிலையென முடிக்க.

கூக. மாந்தர்க்கு நோயிலுழியாகவென மாறிக்கூட்டுக; கிடந்தவாறும் பொருள்படும்.



கூச.

ஓரிஇயினபோலவென்பதற்குப் பொய்கையென வருவித்துப் பொய்கையை ஒருவினபோலவென உரைக்க. இனி, மேற்சொன்ன கூந்தலை ஓரிஇயினபோல வென்பாருமுளர்.

இரவுமலர்கின்றென்பது பொய் கைப்பூப்போலன்றி இரவுக்காலத்தும் மலர்ச்சி நிலைபெற்றென்றவாறு.

(கச) ஓரீஇயினபோல (கஇ) அலமருமெனக் கூட்டுக.

கசு. காந்தளுள்ளவிடத்து எழுந்த மூங்கிலைத் தோளுக்கு உவமை கூறி, அக்காந்தளையும் கைக்கு உவமையாக்குக. நீரழுவம் - நதியென்க.

கசு - கஎ. நீரழுவத்து வேயென்றது ஒருநாளும் உடல்வெம்மை யாற் கொதியாது குளிர்ந்தேயிருக்குந் தோளென்றற்கென்க.

(கக) யண்படுமார்ப, (உக) பூழியர்கோவே, (உச) மழவர்மெய்ம் மறை, (உக) அயிரைப்பொருந, (க0) பயமழைசுரந்து (கக) மாந்தர்க்கு நோயிலூழி உண்டாக (கஎ) இவளோடே (கஅ) பலவாயிரம் வெள்ளம் வாழியவெனக்கூட்டி வினைமுடிவு செய்க.

இதனாற்சொல்லியது, அவன் நாடுகாத்தற் சிறப்புக்கூறி வாழ்த்திய வாறாயிற்று.

(பி - ம்.) க-உ. நெஞ்ச, மைந்து. கஉ-கக. செழுநகர்வரைப்பி,

க0. ஊனைத்தழித்த. [னடுவணெழுந்த. (க)

(உஉ.) சினனே காமங் கழிகண் ணோட்ட

மச்சம் பொய்ச்சொ லன்புமிக வுடைமை
தெறல்கடு மையொடு பிறவுமிவ் வுலகத்
தறந்தெரி திகிரிக்கு வழியடை யாகுந்
தீதுசே ணிகந்து நன்றுமிகப் புரிந்து
கடலுங் கானமும் பலபய முதவப்
பிறர்பிறர் நலியாது வேற்றுப்பொருள் வெஃகாது
மையி லறிவினர் செவ்விதி னடந்துதம்
மமர்துணைப் பிரியாது பாத்துண்டு மாக்கண்
மூத்த யாக்கையொடு பிணியின்று கழிய
வூழி யுய்த்த வுரவோ ரும்பல்
பொன்செய் கணிச்சித் திண்பிணி யுடைத்துச்
சிரறுசில வூறிய நீர்வாய்ப் பத்தற்
கயிறுகுறு முகவை மூயின மொய்க்கு
மாகெழு கொங்கர் நாடகப் படுத்த
வேல்கெழு தானை வெருவரு தோன்ற



துளைப்பொலிந்த மா
விழைப்பொலிந்த களிறு

வம்புபரந்த தே
ரமர்க்கெதிர்ந்த புகன் மறவ ரொடு
துஞ்சுமரந் துவன்றிய மலரகன் பறந்தலை
யோங்குநிலை வாயிற் றூங்குபு தகைத்த
வில்விசை மாட்டிய விழுச்சீ ரையவிக்
கடிமிளைக் குண்டுகிடங்கி
னெடுமதி லிரைப்பதணத்
தண்ணலம் பெருங்கோட் டகப்பா வெறிந்த
பொன்புனை யுழிஞை வெல்போர்க் குட்டுவ
போர்த்தெறிந்த பறையாற் புனல்செறுக் குநரு
நீர்த்த பூச லினம்பழிக் குநரு
பொலித்தலை விழவின் மலியும் யாணர்
நாடுகெழு தண்பணை சீறினை யாதலிற்
குடதிசை மாய்ந்து குணமுதற் றோன்றிப்
பாயிரு ளகற்றும் பயங்கெழு பண்பின்
ஞாயிறு கோடா நன்பக லமயத்துக்
கவலை வெண்ணரி கூஉமுறை பயிற்றிக்
கழல்கட் கூகைக் குழறுகுரற் பாணிக்
கருங்கட் பேய்மகள் வழங்கும்
பெரும்பா ழாகும னளிய தாமே.

துறை - வஞ்சித்துறைப்பாடாண்பாட்டு.

வண்ணம் - ஒழுகுவண்ணமும் சொற்சீர்வண்ணமும்.
தூக்கு - செந்தூக்கும் வஞ்சித்தூக்கும்.
பெயர் - (கசு) கயிறுகுறுமுகவை.

உ. அச்சம் - பகைவர்க்கஞ்சுதல். அன்பு - பொருண்மேலன்பு.

கரு. சிரறு சில ஊறியவென்றது பல்லூற்றொழியச் சில்லூற்றாக ஊறியவென்றவாறு; சிரறுதல் - சிதறுதல்.

கசு. கயிறு குறு முகவையென்றது தன்னால் நீர்வாங்குவது பெரி தன்றித் தன்கயிற்றையே நின்று வாங்கப்படு முகவையென்றவாறு.

இச்சிறப்பானே இதற்கு 'கயிறுகுறுமுகவை' என்று பெயராயிற்று.

## மூன்றாம் பத்து. 

உஉ. தூங்குபு என்பதனைத் தூங்கவெனத்திரித்துக் காலவழு வமைதியெனக்கொள்க. தகைத்தல் - கட்டுதல்.

உகூ. வில்விசை மாட்டிய விழுச்சீர் ஐயவியென்றது விசையையுடைய வில்லானும் துளையுருவ எய்யமுடியாது மிக்க கனத்தையுடைய ஐயவித்துலாமென்றவாறு.

கூஎ. கருங்கண் - கொடியகண். வழங்குதல் - ஆடுதல்.

(கக) உரவோரும்பல், (கசு) தோன்றல், (உஎ) குட்டுவ, நீ (௯க)சிறினையாதலின், நாடுகெழுதண்பணை (௯அ)அளியதாம் பெரும் பாழாகுமெனக்கூட்டி வினைமுடிவுசெய்க.

இதனாற்சொல்லியது, அவன்வென்றிச்சிறப்புக் கூறியவாறாயிற்று.

சிறினையாதலின், நாடுகெழு தண்பணை பாழாகுமென எடுத்துச்செல வினை மேலிட்டுக்கூறினமையால், வஞ்சித்துறைப் பாடாணாயிற்று.

(கஎ) 'உளைப்பொலிந்தமா' என்பதுமு தலாய நாலடியும் (உ௭) 'கடிமிளை' என்பதுமுதலாய இரண்டடியும் வஞ்சியடியால்வந்தமையால், வஞ்சித்தூக்குமாயிற்று.

உo. 'புகல்' என அடியிடையும், 'ஓடு' என அடியினிறுதியும் வந்தன கூன்.

(பி - ம்.) க௯. சிரறுசெல. ௯ச. ஞாயிறுகொண்ட.

(உ)

(உரு.) அலந்தலை யுன்னத் தங்கவடு பொருந்திச்
சிதடி கரையப் பெருவறங் கூர்ந்து
நிலம்பை தற்ற புலங்கெடு காலையும்
வாங்குபு தகைத்த கலப்பைய ராங்கண்
௫ மன்றம் போந்து மறுகுசிறை பாடும்
வயிரிய மாக்கள் கடும்பசி நீங்கப்
பொன்செய் புனையிழை யொலிப்பப் பெரிதுவந்து
நெஞ்சமலி யுவகைய ருண்டுமலிந் தாடச்

சிறுமகி ழானும் பெருங்கலம் வீசும்
போரடு தானைப் பொலந்தார்க் குட்டுவ
நின்னயந்து வருவேங் கண்டனம் புன்மிக்கு
வழங்குந ரற்றென மருங்குகெடத் தூர்ந்து
பெருங்கவி னழிந்த வாற்ற வேறுபுணர்ந்
தண்ணன் மரையா வமர்ந்தினி துறையும்
விண்ணுயர் வைப்பின காடா யினநின்
மைந்துமலி பெரும்புக ழறியார் மலைந்த

## [illegible]. பதிற்றுப் பத்து.

போரெதிர் வேந்தர் தாரழிந் தொராலின்
மருதிமிழ்ந் தோங்கிய நளியிரும் பரப்பின்
மணன்மலி பெருந்துறைத் ததைந்த காஞ்சியொடு
முருக்குத்தாழ் பெழிலிய நெருப்புற ழடைகரை
நந்து நாரையொடு செவ்வரி யுகளுங்
கழனி வாயிற் பழனப் படப்பை
யழன்மருள் பூவின் றாமரை வளைமகள்
குறாஅது மலர்ந்த வாம்ப
லறாஅ யாணர வகன்றலை நாடே.

துறை - வஞ்சித்துறைப்பாட்டாண்பாட்டு.

வண்ணம் - ஒழுகுவண்ணம்.

துாக்கு - செந்தூக்கு.

பெயர் - (கக) தழைந்தகாஞ்சி.

க. அலந்தலையெனல் விகாரம்.

க௫. விண்ணுயர் வைப்பின காடென்றது மரங்கள் விண்ணிலே செல்லவோங்கி..............; மாறியுரைப்பாரு முளர்.

கக. தழைந்த காஞ்சியென்றது விளையாட்டுமகளிர் பலரும் தளிரும் முறியும் தாதும் பூவும் கோடலாற் சிதைவுபட்டுக் கிடக்கின்ற காஞ்சியென்றவாறு.

இச்சிறப்பானே இதற்கு '**தழைந்தகாஞ்சி**' என்று பெயராயிற்று.

உக - உச. வளைமகள் குறூஅது மலர்ந்த ஆம்பலென்றது விளையாட்டுமகளிர் குறுதற்கு எட்டாமையாலே மலர்ந்த ஆம்பலென்றவாறு.

குறூமலெனத்திரிக்க.

(க0) குட்டுவ, (கஎ) போரெதிர் வேந்தர் தாரழிந்து ஒராலின், (உ௫) அவர் அகன்றலைநாடு (க௫) காடாயின; அதனை (கக) நின்னயந்து வருவேம் கண்டனமெனக்கூட்டி வினைமுடிவுசெய்க.

இதனாற்சொல்லியது, அவன் வென்றிச்சிறப்புக் கூறியவாறாயிற்று.

(கஎ) போரெதிர்வேந்தர் தாரழிந்து ஒராலின், (உ௫) நாடு (க௫) காடாயினவென எடுத்துச்செலவினை மேலிட்டுக் கூறினமையால், வஞ்சித்துறைப் பாடாணாயிற்று.

(பி - ம்.) க௫. காடாயினவே.

(க)

(உ௪.) நெடுவயி ரொளிறு மின்னுப்பரந் தாங்குப்
புலியுறை கழித்த புலவுவா யெஃகு
மேவ லாடவர் வலனுயர்த் தேந்தி

## மூன்றாம் பத்து.



யாரரண் கடந்த தாரருந் தகைப்பிற்
பீடுகொண் மாலைப் பெரும்படைத் தலைவ
வோதல் வேட்ட லவைபிறர்ச் செய்த
லீத லேற்றலென் றாறுபுரிந் தொழுகு
மறம்புரி யந்தணர் வழிமொழிந் தொழுகி
ஞால நின்வழி யொழுகப் பாடல்சான்று
நாடுடன் விளங்கு நாடா நல்லிசைத்
திருந்திய வியன்மொழித் திருந்திழை கணவ
குலையிழி பறியாச் சாபத்து வயவ
ரம்புகளை வறியாத் தூங்குதுளங் கிருக்கை
யிடாஅ வேணி யியலறைக் குருசி
னீர்நிலந் தீவளி விசும்போ டைந்து
மளந்துகடை யறியினு மளப்பருங் குரையைநின்
வளம்வீங்கு பெருக்க மினிதுகண் டிகுமே

யுண்மருந் தின்மரும் வரைகோ ளறியாது
குறைத்தொடி மழுகிய வுலக்கை வயின்றோ
றடைச்சேம் பெழுந்த வாடுறு மடாவி
னெஃகுறச் சிவந்த வூனத் தியாவருங்
கண்டுமதி மருளும் வாடாச் சொன்றி
வயங்குகதிர் விரிந்து வானகஞ் சுடர்வர
வறிதுவடக் கிறைஞ்சிய சீர்சால் வெள்ளி
பயங்கெழு பொழுதோ டாநிய நிற்பக்
கலிழுங் கருவியொடு கையுற வணங்கி
மன்னுயிர் புரைஇய வலனேர் பிரங்குங்
கொண்டற் றண்டளிக் கமஞ்சூன் மாமழை
காரெதிர் பருவ மறப்பினும்
பேரா யாணர்த்தால் வாழ்கநின் வளனே.

துறை - இயன்மொழிவாழ்த்து.
வண்ணம் - ஒழுகுவண்ணம்.
தூக்கு - செந்தூக்கு.
பெயர் - (௨௪) சீர்சால்வெள்ளி.

௪-இ. தாரருந் தகைப்பிற் பீடுகொண் மாலைப் பெரும்படை யென்றது தார்ப்படைக்கு அழித்தற்கரிய மாற்றார் படைவகுப்பிலே வென்றி

செய்து பெருமைகொள்ளும் இயல்பையுடைய அணியாய்நிற்கும் பெரும் படை யென்றவாறு.

சு. அவை பிறர்ச்செய்தலென்புழிப் பிறனாயென விரியும் இரண் டாவதனை அவை செய்தலென நின்ற செய்தலென்னுந்தொழிலைப் போந்த பொருளாற் செய்வித்தலென்னுந் தொழிலாக்கி அதனொடு முடிக்க.

க உ. குலையிழிபு அறியாச் சாபமென்றது போர்வேட்கையான் இன்னபொழுது போருண்டாமென்று அறியாதே எப்பொழுதும் நாணியேற் றியே கிடக்கும் வில்லென்றவாறு.

க ௩. அம்புகளைவறியாவென்றது போர்வேட்கையான் எப்பொழு தும் கையினின்றும் அம்பைக் களைதலறியாவென்றவாறு. தூங்கு துளங்கு இருக்கையென்றது படை இடம்படாது செறிந்து துளங்குகின்ற இருப் பென்றவாறு.

க ௪. இடா ஏணி - அளவிடப்படாத எல்லை. இயலென்றது பாசறைக்குள்ளவியல்பை ; பாசறை - அறையெனத் தலைக்குறைந்தது.

க அ. உண்மாரும் தின்மாருமென்பன குறுகிநின்றன ; உண்மா ராயும் தின்மாராயுமென்னும் இரண்டாவது விகாரத்தாற்றொக்கது. அறி யாதென்பதனை அறியாமலெனத் திரிக்க.

உச - உரு. வறிது வடக்கு இறைஞ்சிய சீர் சால் வெள்ளி பயம்

கெழு பொழுதோடு ஆநியம் நிற்பவென்றது சிறிது வடக்கிறைஞ்சின புகழானமைந்த வெள்ளி மழைக்குப்பயன்படும் மற்றைக் கோட்களுடனே தான் நிற்குநாளிலே நிற்கவென்றவாறு.

பொழுதென்றது, அதற்கு அடியாகிய கோளை.

வறிது வடக்கிறைஞ்சியவென்னும் அடைச்சிறப்பான், இதற்கு '**சீர்சால்வெள்ளி**' என்று பெயராயிற்று.

(**ரு**) பெரும்படைத்தலைவ, (**கக**) திருந்திழைகணவ, (**கச**) குருசில், (**க ரு**) நீர் நிலமுதலைந்தினையும் (**க சு**) அளந்து முடிவறியினும் பெருமை அளந்தறிதற்கரியை; (**க எ**) நின் செல்வ மிக்க பெருமை இனிதுகண்டேம்; அஃது எவ்வாறிருந்ததென்னின், (**உ உ**) வாடாச்சொன்றி, (**உ அ**) மழை (**உ க**) காரெதிர்பருவமறப்பினும் (**ங 0**) பேராயாணர்த்து; அப் பெற்றிப்பட்ட நின்வளம் வாழ்கவென வினைமுடிவுசெய்க.

இதனாற்சொல்லியது, அவன் பெருமையும் கொடைச்சிறப்புங்கூறி வாழ்த்திய வாறாயிற்று.

(**ச**)

(**உரு.**) **மாவாடியபுல னாஞ்சிலாடா**
**கடாஅஞ்சென்னிய கடுங்கண்யானை**
**யினம்பரந்தபுலம் வளம்பரப்பறியா**

நின்படைஞர், சேர்ந்த மன்றங் கழுதை போகி
நீ, யுடன்றோர் மன்னெயி றோட்டி வையா
கடுங்கா லொற்றலிற் சுடர்சிறந் தருத்துப்
பசும்பிசி ரொள்ளழ லாடிய மருங்கி
னாண்டலை வழங்குங் கானுணங்கு கடுநெறி
முனையகன் பெரும்பா ழாக மன்னிய
வுருமுறழ் பிரங்கு முரசிற் பெருமலை
வரையிழி யருவியி னொளிறுகொடி நுடங்கக்
கடும்பரிக் கதழ்சிற ககைப்பநீ
நெடுந்தே ரோட்டியபிற ரகன்றலை நாடே.

துறை - வஞ்சித்துறைப்பாடாண்பாட்டு.
வண்ணம் - ஒழுகுவண்ணமும் சொற்சீர்வண்ணமும்.
தூக்கு - செந்தூக்கும் வஞ்சித்தூக்கும்.
பெயர் - (அ) கானுணங்குகடுநெறி.

உ. கடாச்சென்னியென்னும் ஒற்று மெலிந்த[illegible]
ச. கழுதை போகியென்பதனைப் பே[illegible]வெனத்திரிக்க.
ரு. தோட்டி - காவல்.
எ. அழல் - காட்டுத்தீ.
அ. கானுணங்கு கடுநெ[illegible] யெ[illegible] மழையின்மையாற்

கானம்
தீந்த கடியவழியென்றவாறு.

இச்சிறப்பானே இதற்கு 'கானுணங்குகடுநெறி' என்றுபெயராயிற்று.

௩. முனை ஆறலைகள்வர்செய்யும் போர்.

௧௨. செலவின் அருமை ஆற்றல்தோன்றப் பறவையாகக்கூறுவான் உபசாரவழக்குப்பற்றிச் சிறகு அகைப்பவென்றானென்க.

(௧௰) முரசினொடுவென ஓடு விரித்து அதனைத் (௧௩)தேரோட்டிய வென்பதனொடு முடிக்க.

(௧௨) நீ (௧௩) தேரோட்டிய பிறர்நாடு அழிந்தவாறு சொல்லின், நாடு (௧) நின்மாவழங்கினவயல் பின்பு கவப்பைவழங்கா; (௨) நின்யானை (௩) யினம் பரந்தவயல் பின் செல்வம் பரத்தலையறியா; (௪) நின்படை யாளர்சேர்ந்த மன்றம் கழுதையாலுழப்பட, (௫) நீ உடன்றஅரசர்தங்நகரிகள் பின்புதமக்குஅரணுகக்காவலாளரை வைக்கப்படா; இவ்வாறு அழிந்த படியேயன்றிச் சில்லிடங்கள் (௬) கடுங்கால் ஒற்றலின், (௭) அழலாடிய மருங்கினையுடைய கானுணங்குகடுநெறியினையும் முனைகளையுமுடைய அக
ன்ற பெரும்பாழாக நின்றனவெனக்கூட்டி வினைமுடிவுசெய்க.





## பதிற்றுப் பத்து.

இதனாற் சொல்லியது, அவன்வென்றிச்சிறப்புக் கூறியவாறாயிற்று.

தேரோட்டிய பிறர்நாடு இவ்வாறு அழிந்ததென எடுத்துச்செலவினை மேலிட்டுக்கூறினமையால் வஞ்சித்துறைப் பாடாணாயிற்று.

௧. 'மாவாடிய' என்பது முதலாக மூன்றும் வஞ்சியடியாக வந்தமையால், வஞ்சித்தூக்குமாயிற்று.

(௪) 'நின்படைஞர்' எனவும் (௫) 'நீ' எனவும் அடிமுதற்கட் சீரும் அசையும் கூனாய்வந்தன.

(பி - ம்) ௧உ. சிறைகைப்ப.

(௫) (உகூ.) தேஎர்பரந்தபுல மேஎர்பரவா
களிறாடியபுல நாஞ்சிலாடா
மத்துரறியமனை யின்னியமிமிழா
வாங்குப், பண்டுநற் கறியுநர் செழுவள நினைப்பி
ஞேகோ யானே நோதக வருமே
பெயன்மழை புரவின் றாகவெய்துற்று
வலமின் றம்ம காலையது பண்பெனக்
கண்பனி மலிர்நிறை தாங்கிக் கைபுடையூ
மெலிவுடை நெஞ்சினர் சிறுமை கூரப்
பீரிவர் வேலிப் பாழ்மனை நெருஞ்சிக்
காடுறு கடுநெறி யாக மன்னிய
முருகுடன்று கறுத்த கலியழி மூதூ
ருரும்பில் கூற்றத் தன்னநின்

திருந்துதொழில் வயவர் சீறிய நாடே.

இதுவுமது.

பெயர் - (கக) காடுறுகடுநெறி.

க. தேர்பரந்தபுலம் ஏர்பரவாவென்றது ஒருகால் தேர்பரந்த வயல் அத்தேர்பரந்தமாத்திரையாற் சேறாய்ப் பின்பு உழுதற்கு ஏர்பரவா வென்றவாறு.

உ. களிறு ஆடிய புலம் நாஞ்சில் ஆடாவென்றது பன்றிகளுழுத கொல்லைத்துறை அவை உழுதமாத்திரையானே புழுதியாகிப் பின்பு கலப்பை வழங்காவென்றவாறு.

ங. மத்து உரறிய மனை இன்னியம் இமிழாவென்றது மத்து ஒலிக்கின்ற மனைகள் அம்மத்தொலியின்மிகுதியானே இனிய இயங்களின்ஒலி கிளராவென்றவாறு.

அ. கட்பனியென்னும் ஒற்று மெலிந்தது.

## மூன்றும் பத்து. கூ

க0 - கக. நெருஞ்சியின் அடர்ச்சியை நெருஞ்சிக்காடெனக் கூறிய அடைச்சிறப்பான், இதற்கு 'காடுறுகடுநெறி' என்று பெயராயிற்று.

(கஉ) மூதூர்போலவென உவமவுருபுவிரித்து, அதனை (கஎ) வயவர்சீறியவென்னும் வினையொடு முடிக்க. இனிப் போலுமெனவிரித்து வயவர்சீறியநாடெனஅம் ஒன்று. இனி மூதூர்க்கூற்றமெனக்கூட்டிக் கூற்று வன்கொடுமைமிகுதி கூறலுமொன்று.

கரு. உரும்பில்கூற்றென்பது பிறிதொன்றால் நலிவுபட்டு மனக் கொதிப்பில்லாத கூற்றமென்றவாறு; உருப்பென்னும் ஒற்று மெலிந்தது.

(கரு) நின் (கச) வயவர்சீறியநாடு அவ்வயவர்சீறுதற்குமுன்பு இருக்கும்படிசொல்லின், (க)தேர்பரந்தபுலம் ஏர்பரவா; (உ) களிறாடியபுலம் நாஞ்சிலாடா; (ரு) மத்து உரறியமனை இன்னியம் இமிழா; அவ்வாறுவளவி யது இப்பொழுது (கக) காடுறுகடுநெறியை உடைத்தாகாநின்றது; அதன் (ச) செழுவளத்தைப் பண்டுநற்கறியுநர்நினைப்பின், அவர்க்கு (ஓ) நோதக வரும்; நோவேன்யானென மாறிக்கூட்டி வினைமுடிவுசெய்க.

இதனாற்சொல்லியது, அவன்வென்றிச்சிறப்புக் கூறியவாறாயிற்று.

நின்வயவர்சீறியநாடு இவ்வாறு அழிந்ததென எடுத்துச்செலவினை மேலிட்டுக் கூறினமையால், வஞ்சித்துறைப் பாடாணாயிற்று.

க. 'தேஎர்பரந்த' என்பது முதலாக மூன்றடி வஞ்சிய டியாக வந்தமையால், வஞ்சித்தூக்கு மாயிற்று.

ச. 'ஆங்கு' என்பது அடிமுதற்கூன்.

(சு)

(உஎ.) சிறைந்தது மன்றநீ சிவந்தனை நோக்கலிற்
றொடர்ந்த குவளைத் தூநெறி யடைச்சி

யலர்ந்த வாம்ப லகமடி வையர்
சுரியலஞ் சென்னிப் பூஞ்செய் கண்ணி
யரிய லார்கைய ரினிதுகூ டியவர்
துறைமணி மருத மேறித் தெறுமா
ரெல்வளை மகளிர் தெள்விளி யிசைப்பிற்
பழனக் காவிற் பசுமயி லாலும்
பொய்கை வாயிற் புனல்பொரு புதவி ம
னெய்தன் மரபி னிரைகட் செறுவின
வல்வா யுருளி கதுமென மண்ட
வள்ளற் பட்டுத் துள்ளுபு துரப்ப
நல்லெருது முயலு மளறுபோகு விழுமத்துச்
சாகாட் டாளர் கம்பலை யல்லது



பூச லறியா நன்னாட்
டியாண ரறாஅக் காமரு கவினே.

துறை - செந்துறைப்பாடாண்பாட்டு.
வண்ணம் - ஒழுகுவண்ணம்,
தூக்கு - செந்தூக்கு.

## பேயர் - (உ) தோடர்ந்தது வரி.

உ. தொடர்ந்தகுவரி - ஆண்டுகள்தோறுமிட்டு
ஆக்கவேண்டாது

தொண்டு இட்டதே ஈடாக எவ்வாண்டிற்கும் இடையறுது
தொடர்ந்துவரு
மென்றவாறு.

இச்சிறப்பானே, இதற்கு '**தோடர்ந்தது வரி**' என்று
பெயராயிற்று.

(௬) மடிவையரென்பதனை வினையெச்சமுற்றாக்கி,
அதனைத் (எ)
தெள்விளியிசைப்பினென்னும் வினையொடு முடிக்க.

(எ) மகளிர் (௬) தெறுமார் (எ) இசைப்பின்,
(அ) காவிற் பசும
யில் ஆலுமென்றது வயலிற்புகுந்து உழக்காதிருத்தற்பொருட்டு
அவ்வயற் புள்ளோப்பும் உழவர்மகளிர் அதனைக் கடியவேண்டித்
தெள்விளியிசைப் பின், இயவர் இயங்களின் ஒலிகேட்ட
பழக்கத்தானே தன்னைக் கடிகின்ற ஒலியையும் அவற்றின்
ஒலியாகக்கருதி மயில் ஆலுமென்றவாறு.

௧0. நெய்தல் மரபின் நிரை கள் செறுவென்றது நெய்தல்
இடை யறாதுபூக்கும் மரபினையும் நிரைத்த வண்டினையுமுடைய
செறுவென்றவாறு.

கள்ளென்பது வண்டு.

(௧௧) வல்வாயுருளி (௧௨) அள்ளற்பட்டு (௧௧)
மண்டவெனக் கூட்டுக.

கஉ. துள்ளுபுதுரப்பவென்றது சாகாட்டாளர் துள்ளித்துரக் கையாலேயென்றவாறு.

கக. அளறுபோகு விழுமமென்றது அளற்றைக்கழியப் போகின்ற காலத்து வருத்தமென்றவாறு.

(க௰) நன்னாட்டுக் (கசு) கவின் (க) நீ சிவந்தனை நோக்கலின், சிதைந்ததென வினைமுடிவு செய்க.

இதனாற் சொல்லியது, அவன் வென்றிச்சிறப்புக் கூறியவாறாயிற்று.

(பி - ம்.) கக. கதுமெனமண்டி.

(எ)

(உ-ம்.) திருவுடைத் தம்ம பெருவிறற் பகைவர்
பைங்கண் யானைப் புணர்நிரை துமிய
வுரந்துரந் தெறிந்த கறையடிக் கழற்காற்
கடுமா மறவர் கதழ்தொடை மறப்ப

௫ வினையினிது தந்து வினைவுமுட் டுறாது

## மூன்றாம் பத்து. ௬௭

புலம்பா வுறையு ணீதொழி லாற்றலின்
விடுநிலக் கரம்பை விடரளை நிறையக்
கோடை நீடக் குன்றம் புல்லென

வருவி யற்ற பெருவறற் காலையு
நிவந்துகரை யிழிதரு நனந்தலைப் பேரியாற்றுச்
சீருடை வியன்புலம் வாய்பரந்து மிகீஇய
ருவலை சூடி யுருத்துவரு மலிர்நிறைச்
செந்நீர்ப் பூச லல்லது
வெம்மை யரிதுநின் னகன்றலை நாடே.

துறை - நாவோழ்த்து.

வண்ணமும் தூக்கும்அது.

பெயர் - (௧௨) உருத்துவருமலிர்நிறை.

௩. கறையடியென்றது குருதிக்கறையினையுடைய அடியென்றவாறு.

௪ - ௫. மறவர் கதழ் தொடை மறப்ப இலை இனிது தந்தென்றது நின்வீரர் போரில்லாமையால் விரைந்து அம்புதொடுத்தலை மறக்கும்படி நாடுகாவலை இனிதாகத் தந்தென்றவாறு.

இலை - காவல். விளைவில் முட்டுறுமலெனத் திரிக்க.

௬. புலம்பா உறையுட்டொழிலென மாறிக்கூட்டுக.

௭. கரம்பை விடர் அளை நிறையவென்றது முன்பு நீரேறாத கரம்பைவயல்களிற் கமர்வாய் நீர்நிறைய வென்றவாறு.

(௭) விடரளைநிறைய (௧௧) வாய்பரந்து மிகீயரென முடிக்க.

(௮) கோடைநீடுகையாலே குன்றம் புல்லெனும்படி (௯)

அருவி யற்ற காலேயெனக் கூட்டியுரைக்க.

கக. வாய் பரந்து மிகேயரென்றது இடத்திலே பரந்து நீர்தான் தன்னை மிகுக்கவேண்டி யென்றவாறு.

கஉ. உவலே சூடி உருத்துவரும் மலிர்நிறையென்றது தழைகளைச் சூடித் தோறறிவரும் வெள்ள மென்றவாறு.

தன்னை வயல் பொறுக்குமாறு காணவென்று போர்வேட்டு வருவா ரைப் போலுமென்று கூறிய இச்சிறப்பானே, இதற்கு 'உருத்து வருமலிர் நிறை' என்று பெயராயிற்று.

(கக) வாய்பரந்து மிகேஇயர் (கஉ) உருத்துக் (க0) கரையிழி தரும் நனந்தலைப் பேர்யாற்று (கஉ) மலிர்நிறைச் (கக) செந்நீரொன மாறிக் கூட்டுக,

## கூ அ பதிற்றுப் பத்து.

(கூ) பெருவற்றகாலேயும் (கச) நின் அகன்றலைநாடு, (கூ) புலம்பா வுறையுட்டொழிலே நீ ஆற்றலின், (க) திருவுடைத்தெனக் கூட்டி வினை முடிவுசெய்க.

இதனற் சொல்லியது, அவன் நாடுகாத்தற்சிறப்புக் கூறியவாறு யிற்று.

(அ)

(உகூ.) அவலெறிந்த வுலக்கை வாழைச் சேர்த்தி
வளைக்கை மகளிர் வள்ளை கொய்யு

முடந்தை நெல்லின் விளைவயற் பரந்த
தடந்தா ணாரை யிரிய வயிரைக்
கொழுமீ னார்கைய மரந்தொறுங் குழாஅலின்
வெண்கை மகளிர் வெண்குரு கோப்பு
மழியா விழவி னிழியாத் திவவின்
வயிரிய மாக்கள் பண்ணமைத் தெழீஇ
மன்ற நண்ணி மறுகுசிறை பாடு
மகன்கண் வைப்பி னாடும னளிய
விரவுவேறு கூலமொடு குருதி வட்ட
மயிர்புதை மாக்கண் கடிய கழற
வமர்கோ ணேரிகந் தாரெயில் கடக்கும்
பெரும்பல் யானைக் குட்டுவன்
வரம்பி றானை பரவா வூங்கே.

துறை - வஞ்சித்துறைப்பாடாண்பாட்டு.
வண்ணமும் தூக்கும்அது.
பெயர் - (௯) வெண்கைமகளிர்.

௧. முடந்தை நெல்லென்றது கதிர்க்கனத்தாலே வளைந்து முடமான நெல்லென்றவாறு; முடந்தையென்பது பெயர்த்திரிசொல்; இனிப் பழவழக்கென்பதுமொன்று.

௫. கொழுமீனார்கையவென்றது.........................................

பா இச்சிறப்பானே, இதற்கு 'வெண்கைமகளிர்' என்று பெயராயிற்று.

இனி வெண்சங்கணிந்த கையென்பாருமுளர்; இனி அடுகைமுதலா கிய தொழில்செய்யாத கையென்பாருமுளர்.

எ. திவவையுடையயாழ் திவவெனப்பட்டது.

குட்டுவென் வரம்பில் தானை பரந்த இப்பொழுது அழிந்து கிடக்கின்ற இந்நாகேள், (கச) குட்டுவென் (க௫) வரம்பில் தானை பரவாலுங்கு



(௧) முடந்தை நெல்லின் விளைவயற் பரந்த (௪) நாளாயிரிய (௯) வெண்கை மகளிர் வெண்குரு கோப்புதலையுடையவாய் (எ)அழியாத விழவினையும் இழி யாததிவவினையு முடைவாய் (அ) வயிரியமாக்கள் எழீஇ (௯) மன்றநண்ணி மறுகுசிறைபாடும் ‖ இப்பெற்றிப்பட்ட சிறப்பையுடைய (௧0) அகன்கண் வைப்பினுடு இப்பெற்றியெல்லாமழிந்து கண்டார்க்கு அளித்தலை யுடைய வென வினைமுடிவுசெய்க.

இதனாற் சொல்லியது, அவன் வென்றிச்சிறப்புக் கூறியவாறாயிற்று.

வரம்பிறானை பரவாலுங்கென எடுத்துச்செலவினை மேலிட்டுக் கூறி னமையால், வஞ்சித்துறைப்பாடாணாயிற்று.

(பி - ம்.) க. அவலெறியுலக்கை. இ. குமுறலின்; குழறலின்.(௯)

(௱0.) இணர்ததை ஞாழற் கரைகெழு பெருந்துறை
மணிக்கலத் தன்ன மாயிதழ் நெய்தற்
பாசடைப் பனிக்கழி துழைஇப் புன்னை
வாலிணர்ப் படுசினைக் குருகிறை கொள்ளு
மல்குறு கான லோங்குமண லடைகரை
தாழடும்பு மலைந்த புணரிவளை ஞரல
இலங்குநீர் முத்தமொடு வார்துகி ரெடுக்குந்
தண்கடற் படப்பை மென்பா லனவுங்
காந்தளங் கண்ணிக் கொலைவில் வேட்டுவர்
செங்கோட் டாமா னூனொடு காட்ட
மதனுடை வேழத்து வெண்கோடு கொண்டு
பொன்னுடை நியமத்துப் பிழிநொடை கொடுக்குங்
குன்றுதலை மணந்த புன்புல வைப்புங்
கால மன்றியுங் கரும்பறுத் தொழியா
தரிகா லவித்துப் பலபூ விழவிற்
றேம்பாய் மருத முதல்படக் கொன்று
வெண்டலைச் செம்புனல் பரந்துவாய் மிகுக்கும்
பலசூழ் பதப்பர் பரிய வெள்ளத்துச்
சிறைகொள் பூசலிற் புகன்ற வாய
முழவிமிழ் மூதூர் விழவுக்கா ணூஉப் பெயருஞ்

செழும்பல் வைப்பிற் பழனப் பாலு
மேனை யுழவர் வரகுமீ திட்ட
கான்மிகு குளவிய வன்புசே ரிருக்கை

## ௮0 பதிற்றுப் பத்து.

மென்றினை நுவணை முறைமுறை பகுக்கும்
புன்புலந் தழீஇய புறவணி வைப்பும்
பல்பூஞ் செம்மற் காடுபய மாறி
யரக்கத் தன்ன நுண்மணற் கோடுகொண்
டொண்ணுதன் மகளிர் கழலொடு மறுகும்
விண்ணுயர்ந் தோங்கிய கடற்றவும் பிறவும்
பணிகெழு வேந்தரும் வேளிரு மொன்றுமொழிந்து
கடலவுங் காட்டவு மரண்வலியார் நடுங்க
முரண்மிகு கடுங்குரல் விசும்படை பதிரக்
கடுஞ்சினங் கடாஅய் முழங்கு மந்திரத்
தருந்திறன் மரபிற் கடவுட் பேணிய
ருயர்ந்தோ னேந்திய வரும்பெறற் பிண்டங்
கருங்கட் பேய்மகள் கைபுடையூஉ நடுங்க
நெய்த்தோர் தூஉய நிறைமகி ழிரும்பலி

யெறும்பு மூசா விறும்பூது மரபிற்
கருங்கட் காக்கையொடு பருந்திருந் தார
வோடாப் பூட்கை யொண்பொறிக் கழற்காற்
பெருஞ்சமர் ததைந்த செருப்புகன் மறவ
ருருமுகில னதிர்க்குங் குரலொடு கொளைபுணாநது
பெருஞ்சோ றுகுத்தற் கெறியுங்
கடுஞ்சின வேந்தேநின் றழங்குகுரன் முரசே.

துறை - பெருஞ்சோற்றுநிலை.
வண்ணமும் தூக்கும்அது.
பெயர் - (௧௯) புகன்றவாயம்.

௨. மணிக்கலமென்றது நீலமணியாலே செய்த பாத்திரம். மணிக்கலத்தன்ன(௧) கழியெனக்கூட்டி நெய்தற்பூவின் கருமையா லும் அதன்பாசடைக்கருமையாலும் மணிக்கலம்போன்றகழியெனவுரைக்க.

௩. கானலென்றது தன்னிடத்துவந்து குருகு தங்கிவாழும் கானலென்றவாறு. இளைகொள்ளுவதற்குக்

௪. புணரி வளை ஞரலவென்றது கடல்கொண்டுவந்த சங்கு திரை யிலே துவண்ட வருத்தத்தாலே ஈனுகைக்கு மெய்வருந்திக் கதறவென்ற வாறு.

௭. முத்தமொடு வார்துகிரெடுக்குமென்றது க ளாகின்றோரில் (௬) யவ்ளாரலக்கேட்டார், அம்முத்தெடுக்கவென்றுவந்து முத்தையன்றி அத ளேடு பவளத்தையுமெடுக்கு மென்றவாறு.

(௧௭) பலபூவிழவினையுடைய (௨௧) வைப்பெனக்கூட்டுக.

௧௭. புனல் பரந்தென்றதனைப் பரக்கவெனத்திரிக்க.

௧௮. பலசூழ்பதப்பரென்றது பலபுரியாலும் சூழப்பட்ட மணற் கோட்டையென்றவாறு.

௧௯. புகன்றஆயமென்றது முன்பு மணலணைக்கு நில்லாத பெரு வெள்ளத்தினை அணைசெய்துமுடித்த விருப்பத்தையுடைய ஆயமென்றவாறு.

இச்சிறப்புப்பற்றி இதற்கு **'புகன்றவாயம்'** என்று பெயராயிற்று.

௨௭. மணற்கோடுகொண் டென்றது மணற்கோட்டைக் கழலாடு தற்கிடமாகக் கொண்டென்றவாறு.

இனிக் (௨௮) கழலென்றதனைக் கழலையுடைய தலைமகன்காலாக்கி அக்காலொடு தலைமகளிர் ட ுணர்ந்துடன்போமென்பாருமுளர்.

௨௯. பிறவுமென்றது அவ்வாறு ஒருநிலமாகச்சொல்ல ப்படாத பல நிலப்பண்புமுடைய இடங்களுமென்றவாறு.

முன்பு எண்ணிநின்ற நிலங்களெல்லாம் ஆகுபெயரான் அந்நிலத்து வாழ்வார்மேலனவாகக் கொள்க.

௧0. ஒன்றுமொழிந்தென்றது ஒருவர் துணிந்ததே க ாரியமாக அனைவரும் துணிந்து சொல்லியென்றவாறு.

(௧௧) கடுஞ்சினங்கடாஅய் (௭௧) எறியும் (௭௭)முரசெ னமுடிக்க.

௧௧. முழங்குமந்திரமென்றது முழங்க உச்சரிக்கப்படுமந்திரமென்றவாறு.

மந்திரத்தானெனை உருபுவிரித்து அதனைப் (௧௭) பேணியரென்பதனோடு முடிக்க.

௧௭. கடவுளென்றது முரசுறை கடவுள்.

(௧௩) கருங்கட்பேய்மகள் கைபுடையூஉநடுங்க (௧௫) உயர்ந்தோ னேந்திய அரும்பெறற்பிண்டம் (௧அ) எறும்பு மூசாஇறும்பூது மரபின் (௧எ) செய்த்தோர் தூஉய நிறைமகிழிரும்பலி (௧௧) கருங்கட்காக்கை யொடு பருந்திருந்தாரவெனக் கூட்டுக.

(௧அ) இறும்பூது மரபிற் (௧எ) பலியென மாறிக்கூட்டுக.

(௧௩) பேய்மகளும் (௧அ) எறும்பும் அஞ்சிச்செல்லாத (௧எ) பலிகளைக் (௧௧)காக்கையொடு பருந்திருந்தாரவென்றது அம்முரசுறை கடவுள் தனுணையால் தன்பலிகளை மேல் தன்னருளாலேபோர்வென்றி வினை வதறிவித்தற்கு நிமித்தமாகக் க ாக்கையும் பருந்துமிருந்து ஆரவென்றவாறு.

௩

இவ்விடத்துக்குப் பிறவாறு கூட்டியுரைப்பாருமுளர்.

௨௧. பெருஞ்சமந்ததைந்த செருவென்றது பகைவர்செய்யும் போர்சிதையும்படி செய்யும் போரென்றவாறு.

௨௧ - ௨௨. மறவர்குரலெனக்கூட்டுக.

ஆகுபெயரான், உருமுநிலனதிர்க்குங்குரலோடு ஒத்த மறவர்குரலை உருமு நிலனதிர்க்குங் குரலென்றாகக்கொள்க.

௨௩ - ௨௪. எறியுமுரசென்க.

(அ) மென்பால் முதலாகக் (௨௩) கடற்றாக எண்ணப்பட்ட ஐவகை நிலத்துமக்களும் (பிறவும்) (௧௦) அந்நிலத்து வேந்தரும் வேளிரும் தங்களிலே ஒன்றுமொழிந்து (௧௧) அரண்வலியாதே நடுங்காநிற்கும்படி (௧௨) கடுங்குரல்விசும்படைந்து அதிரும்படி (௧௩) கடுஞ்சினத்தைக்கடாவிப் (௧௪) பேய்மகள் கைபுடையூஉநடுங்க (௧௫) உயர்ந்தோனேந்திய பிண்டத்தினையும் (௧௮) எறும்பு மூசாமரபின் (௧௭) கெய்த்தோர்தூஉய நிறைமகிழிரும்பலியினையும் (௧௯) கருங்கட்காக்கையொடு பருந்திருந்து ஆரா நிற்கச் (௨௧) செருப்புகன்மறவரது (௨௨) குரலொடே கோட்பாடு பொருந்திப் (௨௩) பெருஞ்சோறு உகுத்தற்கெறியப்படாநின்றது, (௨௪) நின்முரசென வினைமுடிவுசெய்க.

இதனாற் சொல்லியது, அவன்வென்றிச்சிறப்புக் கூறியவாறாயிற்று.

(பி - ம்.) ௧. இணர்த்ததை. ௧௮. இறும்பூதுபிரப்பின்.

இதன்பதிகத்து அகப்பாவெறிதலைப் பகற்றீவேட்டற்கு அடையாக்கி யுரைக்க.

முதியரை மதியுறழ்மரபிற்றழீஇ மண்வகுத்தீத்தெனக்கூட்டித் தன் குலத்தில் தனக்குமுதியாரை மதியோடொத்த தன்றண்ணளியால் தழீஇக் கொண்டு அவர்க்குத் தன்னாட்டைப் பகுத்துக்கொடுத்தென உரைக்க.

இருகடலுமென்றது தன்னதாயமேல்கடலும் பிறநாட்டதாய்ப்பின்பு தான் பொருதுகொண்டு தன்னதாக்கிய நாட்டிற் கீழ்கடலுமென்றவாறு.

கருங்களிற்றியானைப்புணர்நிரைநீட்டி இரு க ட னீரு ம ொரு பகலாடி யென்றது அவ்விருமுந்நீரும் ஒருபகலிலே வரும்படி யானைகளை நிரைத்து அழைப்பித்து ஆடியென்றவாறு.

அயிரை பரைஇயென்றது தன்னாட்டு அயிரையென்னு மலையில்வாழும் கொற்றவைக்கடவுளைத் தன்குலத்துள்ளார் செய்துவரும் வழிபாடு கெடாமல் தானும் வழிபட்டென்றவாறு.

ஆற்றல்சான்முன்போடு காடுபோந்தவெனக்கூட்டுக.

நெடும்பாரதாயனார் முந்துறக் காடுபோந்தவென்றது தன்புரோகிதராகிய நெடும்பாரதாயனார் தனக்குமுன்னே துறந்து காடுபோக அதுகண்டு தானும் துறவுள்ளம்பிறந்து துறந்து காட்டிலே போனவென்றவாறு.

## மூன்றும்பத்து.

(பதிகம்.)

இமைய வரம்பன் றம்பி யமைவர
வும்பற் காட்டைத் தன்கோ னிறீஇ
யகப்பா வெறிந்து பகற்றீ வேட்டு
மதியுறழ் மரபின் முதியரைத் தழீஇக்
கண்ணகன் வைப்பின் மண்வகுத் தீத்துக்
கருங்களிற் றியானைப் புணர்நிரை நீட்டி
யிருகட னீரு மொருபக லாடி
யயிரை பரைஇ யாற்றல்சான் முன்போ
டொடுங்கா நல்லிசை யுயர்ந்த கேள்வி
நெடும்பார தாயனார் முந்துறக் காடுபோந்த
பல்யானைச் செல்கெழு குட்டுவனைப்

பாலைக்கௌதமனார் பாடினார் பத்துப்பாட்டு. அவைதாம்: அடுநெய்யாவுதி, கயிறுகுறு முகவை, தசைந்தகாஞ்சி, சீர்சால்வெள்ளி, காணுணங்குகடுநெறி, காடுறுகடுநெறி, தொடர்ந்தகுவளை, உருத்துவருமலிர்நிறை, வெண் கைமகளிர், புகன்றவாயம். இவை பாட்டின்பதிகம்.

பாடிப்பெற்றபரிசில் : 'நீர் வேண்டியதுகொண்மின்' என,
'யானும் என்பார்ப்பனியும் சுவர்க்கம்புகல்வேண்டும்' என, பார்ப்பாரிற்
பெரியோரைக் கேட்டு ஒன்பது பெருவேள்விவேட்பிக்கப்
பத்தாம்பெருவேள்வியிற் பார்ப்பானையும் பார்ப்பனியையும்
காணாராயினர்.

இமயவரம்பன்றம்பி பல்யானைச்செல்கெழுகுட்டுவன்
இருபத்தை யாண்டு வீற்றிருந்தான்.

## மூன்றாம்பத்து முற்றிற்று.



## நான்காம் பத்து.



(௩க.) குன்றுதலை மணந்து குழூஉக்கட லுடுத்த
மண்கெழு ஞாலத்து மாந்த ரொராங்குக்
கைசுமந் தலறும் பூசன் மாதிரத்து
நால்வேறு நனந்தலை யொருங்கெழுந்
தொலிப்பத்
௫ தெள்ளுயர் வடிமணி யெறியுநர் கல்லென

வுண்ணாப் * பைஞ்ஞிலம் பனித்துறை மண்ணி
வண்டூது பொலிதார்த் திருஞெம ரகலத்துக்
கண்பொரு திகிரிக் கமழ்குரற் றுழாஅ

யலங்கற் செல்வன் சேவடி பரவி
நெஞ்சுமலி யுவகையர் துஞ்சுபதிப் பெயர
மணிநிற மையிரு ளகல நிலாவிரிபு
கோடுகூடு மதிய மியலுற் றாங்குத்
துளங்குகுடி விழுத்திணை திருத்தி
முரசுகொண்
டாண்கட னிறுத்தநின் பூண்கிளர் வியன்மார்பு
கருவி வானந் தண்டளி தலைஇய
வடதெற்கு விலங்கி விலகுதலைத் தெழிலிய
பனிவார் விண்டு விறல்வரை யற்றே
கடவு ளஞ்சி வானத் திழைத்த
தூங்கெயிற் கதவங் காவல் கொண்ட
வெழூஉநிவந் தன்ன பரேரெறுழ்
முழவுத்தோள்
வெண்டிரை முந்நீர் வளைஇய வுலகத்து
வண்புகழ் நிறுத்த வகைசால் செல்வத்து
வண்ட னனையைம னீயே வண்டுபட

வொலிந்த கூந்த லறஞ்சால் கற்பிற்
குழைக்குவிளக் காகிய வொண்ணுதற்
பொன்னி
னிழைக்குவிளக் காகிய வவ்வாங் குந்தி
விசும்புவழங்கு மகளி ருள்ளுஞ் சிறந்த
செம்மீ னனையணின் றொன்னகர்ச் செல்வி
நிலனதிர் பிரங்கல வாகி வலனேர்பு

* இப்பெயர் பஞ்ஞிலமெனவும் வழங்கும்.



வியன்பணை முழங்கும் வேன்மூ சமுவத்
தடங்கிய புடையற் பொலங்கழ ஞேன்று
ளொடுங்காத் தெவ்வ ரூக்கறக் கடைஇப்
புறக்கொடை யெறியார்நின் மறப்படை கொள்ளுநர்
நகைவர்க் கரண மாகிப் பகைவர்க்குச்
சூர்நிகழ்ந் தற்றுநின் றூனை
போர்மிகு குருசினீ மாண்டனை பலவே

துறை - செந்துறைப்பாடாண்பாட்டு.
வண்ணம் - ஒழுகுவண்ணம்.

தூக்கு - செந்தூக்கு.
பெயர் - (அ) கமழ்குரற்றுழாய்.

(ஶ) ஒலிப்பப் (க) பரவியெனமுடிக்க.

இ - க. மணியெறிதலை உண்ணுப்பைஞ்ஞிலத்தின் தொழிலாக்கி, அவர்கள் மணியையெறிந்து தீர்த்தம ாடுகின்றார்களாகக்கொள்க.

க. உண்ணுப்பைஞ்ஞிலமென்றது அத் திருமால்கோயிலுள் வரம் வேண்டி உண்ணுதுகிடந்த மக்கட்டொகுதியென்றவாறு.

எறியுநரென்றது வினையெச்சமுற்று.

இனி எறியுநரென்பதனைத் தொழிற்பெயர ாக்கி, மணியையெறிவார், தீர்த்தமாடுவோர் ஆடுதற்கு இது முகூர்த்தமென்று அறிந்துவருதற்பொருட்டு அம்மணியையெறிந்து ஆரவாரிப்பவென்றுரைப்பாருமுளர்.

அ. கமழ்குரற்றுழாயென்றது நாறுகின்ற பூங்கொத்துக்களையுடைய துழாயென்றவாறு.

நாறுத பூவுடையதனை மிக நாறுவதொன்றுபோலச் சாதிபற்றிச் சொன்ன சொற்சிறப்பான், இதற்கு '**கமழ்குரற்றுழாய்**' என்று பெயராயிற்று.

க. செல்வனென்றது திருவனந்தபுரத்துத் திருமாலை.

க ௦. பகிப்பெயரவென்னும் எச்சத்தினை (க உ) மதியார் இயலுந் தூங்கென்னும் வினையொடு முடிக்க.

(ஶ) உண்ணுப்பைஞ்ஞிலம் (க ௦) நெஞ்சுமலியுவகையராய்த்

தாந் தாம் துஞ்சுபதிகளிலேபெயரும்படி (கக) மையிருளகல (க உ) கோடு கூடு மதியம் இயலுற்றுங்குத் (கங) துளங்குகுடி விழுத்திணை திருத்தி யெனக்கூட்டி, உண்ணுதுவரங்கிடந்த மக்கட்டொகுதி வரம்பெற்று நெஞ்சமலிந்த உவகையராய்த் தாந்தாம் துஞ்சுபதிகளிலே பெயரும்படி இருள் அகல விரிந்து கோடுகூடுதலையுடைய உவாமதியம் ......................

## ருகூ பதிற்றுப் பத்து.

இனி, (க0) துஞ்சுபதிப் பெயரவென்னுமெச்சத்தினை (கச) ஆண்கடனிறுத்தவென்னும் வினையொடுமுடித்து, வழி ஆறலைகள்வர்முத லாய ஏதங்களின்றித் தாந்தாம் துஞ்சுபதிகளிலே பெயரும்படி தன் ஆண் மைக்கடனையிறுத்தவென்று உரைப்பாருமுளர்.

கங. முரசுகொண்டென்றது சிலகாலத்துப் பயன்கொள்வாரின் மையிற் பண்ணழிந்து கிடந்த பழமுரசினைத் தான் தோன்றி அதன் அழிவு தீர்த்து அதன் பயன்கொண்டென்றவாறு.

கச. ஆண்கடனிறுத்தவென்றது ஆண்மக்களாயுள்ளார் தங்கீழ் வாழ்வாரைக் காத்தற்பொருட்டு அவர்க்கு அவர்செய்யும் கடன்களெல்லாம் செய்து முடித்தவென்றவாறு.

கரு. விலங்கியென்றதனை விலங்கவெனத் திரிக்க.

கஎ. பணிவார் விண்டுவாகிய விறல்வரையென இருபெயரொட்டு.

(உச) கூந்தலினையும் கற்பினையுட் (உ௫) நுதலினையும் (உக) உந்தி யினையுமுடைய (உஅ) தொன்னகர்ச் செல்வியெனமாறிக்கூட்டுக.

உஅ. செம்மீன் - அருந்ததி.

உக. நிலனதிரவெனத் திரிக்க.

கக. புடையலென்றது பனந்தார்.

(கக) புடையலினையும் கழறொன்றளினையுமுடைய (கக) நின் படைகொள்ளுநரொன மாறிக்கூட்டுக.

கக. ஈண்டுப் படைகொள்ளுநரென்றது படைத்தலைவரை யென்றவாறு.

(கச) நின்மார்பு (கஎ) பனிவார்விண்டு விறல்வரையற்று; (உ0) நின்றோள்கள் எழுஉநிவந்தன்ன; (உக) நீதான் வண்டனென்பவனை அனையை; (உஅ) நின்செல்வி செம்மீனனையள்; (கக) நின் மறப்படை கொள்ளுநர் புறக்கொடையெறியார்; (க௫) நின்றானை (கச) நகைவர்க்கு அரணமாகிப் பகைவர்க்குச் (க௫) சூர்நிகழ்ந்தற்று; அவ்வாற்றாற் (கக) குருசில், நீ பலவும் மாட்சிமைப்பட்டனையென வினைமுடிவுசெய்க.

இதனாற் சொல்லியது. அவற்குள்ள மாட்சிமையெல்லாமெடுத்து உடன்புகழ்ந்தவாறாயிற்று.

(பி - ம்.) உ. மாந்தரோங்குக. கச. நயவர்க்கரணம்.

உ0. நிமிர்ந்தன்ன. (௪)

(௩௨.) மாண்டனை பலவே போர்மிகு குருசினீ
மாதிரம் விளக்குஞ் சால்புஞ் செம்மையு
முத்துடை மருப்பின் மழகளிறு பிளிற
மிக்கெழு கடுந்தார் துய்த்தலைச் சென்று

---

## நான்காம் பத்து. ௪௧

துப்புத்துவர் போகப் பெருங்கிளை யுவப்ப
வீத்தா னானு விடனுடை வளனுந்
துளங்குகுடி திருத்திய வலம்படு வென்றியு
மெல்லா மெண்ணி னிடுகழங்கு தபுந
கொன்னொன்று மருண்டனெ னடுபோர்க் கொற்றவ
நெடுமிடல் சாயக் கொடுமிட றுமியப்
பெருமலை யானையொடு புலங்கெட விறுத்துத்
தடந்தா ணாரை படிந்திரை கவரு
முடந்தை நெல்லின் கழையமல் கழனிப்
பிழையா விளையு ணாடகப் படுத்து
வையா மாலையர் வசையுநர்க் கறுத்த
பகைவர் தேஎத் தாயினுஞ்
சினவா யாகுத லிறும்பூதாற் பெரிதே.

இதுவுமது.

பெயர் - (கரு) கழையமல்கழனி.

அ. இடுகெழங்குதபுநவென்றது இடுகெழங்கும் அலகுதபுதற்குக்காரண மாக இருப்பனவென்றவாறு.

தபுநவென்றது பெயர்த்திரிசொல்.

க0. நெடுமிடல் - அஞ்சி இற்பெயராம்.

கொடுமிடல், மிடல் -

வலி; என்றது வலியாற் செய்யப்படும் போரினை.

கக. மூடமாகிய கழையென இருபெயரொட்டு.

நெல்லின்கழை- நெல்லினது கழை.

நெற்றாளை அதன்பருமையாலே மூங்கிலோடு ஒப்புமைபற்றிக் கழை யென்று பெயர்கொடுத்தசிறப்பான், இதற்கு 'கழையமல்கழனி' என்று பெயராயிற்று.

கஉ. வையா மாலையரென்றது ஒன்றில் வகைபடாத இயல்பை யுடையாரென்றவாறு.

கஉ - கங. வசையுநர்க் கறுத்த பகைவரென்றது தங்கள் பகைவ ரொடு செற்றம்கொண்டாடாது ஒழிந்திருக்கவேண்டுமெனினும் ஒழியாது அவர்களை அக்கடப்பாடன்றி வெகுண்டிருத்தலே தொழிலாகவுடைய பகைவரென்றவாறு.

வசையுநர் - பகைவர்; வசையுநரென்றது பெயர்த்திரிசொல். இனிக் ககரவொற்றின்றி 'வசையுநர்கறுத்த' என்பது பாடமாயின், அதனை

வினையெச்சவினைக்குறிப்புமுற்றுத் திரிசொல்லாக்கி, வசைசொல்லுதலு டையவராய் வெகுண்ட பகைவரென்று உரைப்பாருமுளர்.

(௧) குருசில், நீ பலகுணங்களுமாட்சிமைப்பட்டன ; (௮) அப்பல குணங்களும் எண்ணப்புகின், இடுகழங்கு தபும் எல்லையவாயிருக்கும் ; (௯) கொற்றவ, பலகுணத்தினும் ஒன்றைக் கொன்னே யான் வியந்தேன் ; அப் பலவற்றுள்ளும் வியப்பானகுணம் யாதெனின், பகைவர்செய்த குற்றத்திற் குத் தண்டமாக அவர் (௧௪) நாட்டை அகப்படுத்திக்கொண்டு (௧௫) வையாமாலையராகிய வசையுநர்க்கறுத்த (௧௩) அப்பகைவரிடத்தாயினும் நீ (௧௭) சினவாதொழிகின்ற பொறை எமக்குப் பெரிதும் வியப்பாகாநின்றதென வினைமுடிவுசெய்க.

இதனாற் சொல்லியது, அவற்குள்ள பலகுணங்களையும் உடனெண்ணிப் புகழ்ந்து அவற்றுட் பொறையுடைமையை மிகுத்துப் புகழ்ந்தவாறாயிற்று.

(பி - ம்.) ௧௪, பிழையாவினையினொடு,

(௨) (௱௱.) இறும்பூதாற் பெரிதே கொடித்தே ரண்ணல்
வடிமணி யணைத்த பணைமரு ணோன்றாட்

கடிமரத்தாற் களிறணைத்து
நெடுநீர துறைகலங்க
மூழ்த்திறுத்த வியன்றானையொடு
புலங்கெட நெரிதரும் வரம்பில் வெள்ளம்
வாண்மதி லாக வேன்மிளை யுயர்த்து
வில்விசை யுமிழ்ந்த வைம்முள் ளம்பிற்
செவ்வா யெஃகம் வளைஇய வகழிற்
காரிடி யுருமி னுரறு முரசிற்
கால்வழங் காரெயில் கருதிற்
போரெதிர் வேந்த ரொருஉப நின்னே.

**துறை - வஞ்சித்துறைப்பாடாண்பாட்டு.**

**வண்ணம் - ஒழுகுவண்ணம்.**

**தூக்கு - செந்தூக்கும் வஞ்சித்தூக்கும்.**

**பெயர் - (௯) வரம்பில்வெள்ளம்.**

உ - ரை. தோன்றாட்களிறென மாறிக் கூட்டுக.

௫. வியன்றானையென்றது பகைவர்நாட்டெல்லையின் முற்பாடு சென்றுவிட்ட தூசிப்பெரும்படையை.

## நான்காம் பத்து. ௬௧

௧. வரம்பில்வெள்ளமென்றது அதனோடுகூடி நாட்டுள்ளுச் சென்றுவிடும் பேரணிப் பெரும்படையை.

கரையையுடையகடலை வரம்புடைய வெள்ளமென்றாக்கி இதனை வரம்பில்வெள்ளமென்று கூறியசிறப்பான், இதற்கு ' **வரம்பில்வெள்ளம்'** என்று பெயராயிற்று.

வெள்ளமென மகரவொற்றுக் கெடாமையான் இருபெயரொட்டுப் பண்புத்தொகையன்றி ஒருபொருளாக இருபெயர்ம் நின்றதாக்கிக்கொள்க.

க - க க. படைவெள்ளத்தை ஆரெயிலென்றது அரசன்றனக்கு ஆரெயில்போல அரணாய் நிற்றலினெனக்கொள்க.

இனிக் கால்வழங்காரெயிலெனக் காற்றல்லதுவழங்கா ஆரெயிலென்று பகைவர்மதிலாக்கி, அதனை வரம்பில்வெள்ளம் கொள்ளக்கருதினென்று உரைப்பாருமுளர்.

எ. உயர்த்தென்பதனை உயர்த்தெனத்திரித்து, அதனை (கூ) எஃகம் வளைஇயவென்பதனொடு முடிக்க.

(கூ) செவ்வாயெஃகம்வளைஇய அகழினையும் (அ) வில்விசையுமிழ்ந்த அம்பாகிய வைம்முள்ளினையுமுடைய (க க) ஆரெயிலென மாறிக் கூட்டுக.

செவ்வாயெஃகமென்றது முனைமுகத்திற்செல்லாதொழிந்த கூர் வேற் கருவிகளையெனக்கொள்க.

இனி, வாள் மதிலாகவென்றுவைத்துப் பின்னை ஆர் எயிலென்றது, வாண் மதிலைச்சூழ்தலையுடைய ஆராகிய எயிலினையெனக் கொள்க ; ஈண்டு ஆராவது காலாள்வழங்கிச்செல்கின்றபடையின் றிரட்சி. இனி வரம்பில் வெள்ளமானது வாள் மதிலாக வேல்மிளை உயர்த்துக் கால்வழங்கு ஆர் எயிலாதலைக் கருதினென்றலுமொன்று.

(க) அண்ணல், இது பெரிதும் இறும்பூதாயிருந்தது ; யாதெனின், (கூ) வரம்பில்வெள்ளம் (கக) கால்வழங்காரெயிலெனச் சொல்லப்பட்ட நின்படை போர்செய்யக்கருதின், (கஉ) நின்னோடு போரெதிர்ந்தவேந்தர் பொரமாட்டாது நின்னை நீங்குவர் ; இஃது அதுவென வினைமுடிவுசெய்க.

இதனாற்சொல்லியது,
அவன்வென்றிச்சிறப்புக் கூறியவாறாயிற்று.

வரம்பில்வெள்ளங்கருதினென எடுத்துச்செலவினை மேலிட்டுக் கூறினமையான், வஞ்சித்துறைப்பாடாணாயிற்று.

கூ. 'கடிமரத்தான்' என்றதுமுதலாக மூன்றடி வஞ்சியடியாக வந்த மையான், வஞ்சித்தூக்குமாயிற்று.
(கூ)

எ

## பதிற்றுப் பத்து.

(கூ.) ஒருஉப நின்னை யொருபெரு வேந்தே
யோடாப் பூட்கை பொண்பொறிக் கழற்கா
லிருநிலந் தோயும் விரிநூ லறுவையர்

செவ்வுளைய மாவூர்ந்து
நெடுங்கொடிய தேர்மிசையு
மோடை விளங்கு முருகெழு புகர்நுதற்
பொன்னணி யானை முரண்சே ரெருத்தினு

மன்னிலத் தமைந்த......................

பாரு மைந்தர் மாறுநிலே தேய

முரசுடைப் பெருஞ்சமந் ததைய வார்ப்பெழு
வரசுபடக் கடக்கு மாற்றற்
புரைசான் மைந்தநீ யோம்பன் மாறே.

**துறை - தும்பையரவம்.**

**வண்ணமும் தூக்கும் அது.**

**பெயர் - (உ) ஒண்பொறிக்கழற்கால்.**

(க) ஒரூஉப (௬) அறுவையரென முடிக்க.

உ. ஒண்பொறிக் கழற்காலென்றது தாங்கள்செய்த அரிய போர்த் தொழில்களைப் பொறித்தலையுடைய ஒள்ளிய கழற்காலென்றவாறு.

இச்சிறப்பான், இதற்கு 'ஒண்பொறிக்கழற்கால்' என்று பெயராயிற்று.

(க) வேந்தே, (௬) மாலூர்ந்து (க க) அரசுபடக்கடக்குமாற்றலையு டைய (க உ) புரைசான்மைந்த, அவ்வாற்றலிடத்துவரும் குறைகளுக்குப் பிறரை ஏவாது அவற்றை நீயே பாதுகாத்துச்செய்தலால், (க) ஒரூஉப (௬) அறுவையரெனக்கூட்டி வினைமுடிவுசெய்க.

இதனாற்சொல்லியது, அவன்வென்றிச்சிறப்புக் கூறியவாறாயிற்று.

மாற்றார் நாடுகோடல் முதலாயினவன்றி

வென்றிகோடலே கூறி னமையால், துறை தும்பையாய் ஒருஉபவெனப் படையெழுச்சிமாத்திரமே கூறினமையான், அதனுள் அரவமாயிற்று.

(ச) 'செவ்வுளைய ' என்பதுமுதலாக இரண்டும் வஞ்சியடியாய் வந் தமையான், வஞ்சித்தூக்குமாயிற்று.

(ச) (ரூ.) புரைசான் மைந்தநீ யோம்பன் மாறே
யுரைசா னுனவாற் பெருமையின் வென்றி
யிருங்களிற் றியானை யிலங்குவான் மருப்பொடு

## நான்காம் பத்து. ௩க

நெடுந்தேர்த் திகிரி தாய வியன்களத்
தளகுடைச் சேவற் கிளைபுகர் வாரத்
தலைதுமிந் தெஞ்சிய மெய்யாடு பறந்தலை
யந்தி மாலை விசும்புகண் டன்ன
செஞ்சுடர் கொண்ட குருதி மன்றத்துப்
பேஎ யாடும் வெல்போர்
வீயா யாணர் நின்வயி னானே.

துறை - வாகைத்துறைப்பாடாண்பாட்டு.
வண்ணம் அது.
தூக்கு - செந்தூக்கு.

**பெயர் - (சு) மெய்யாபேறந்தலை.**

ரு. அளருடைச்சேவலென்றது பெடையொடுகூடின பருந்தின் சேவலை.

சு. வியன்களமென்றது ஒன்றான போர்க்களப்பரப்பை.

எ. பறந்தலையென்றது அப்பெரும்பரப்பின் உட்களத்தை.

அ. மன்றென்றது அவ்வுட்களத்தின் நடுவை; அது மன்றுபோறலின், மன்றெனப்பட்டது.

கூ. குறையுடலெழுந்தாடுவது ஒருபெயருடையார் பலர்பட்ட வழியன்றே; அவ்வாற்றாற் பலர்பட்டமை தோன்றக் கூறியசிறப்பான், இதற்கு '**மெய்யாபேறந்தலை**' என்று பெயராயிற்று.

கூ - க0. வெல்போர் வீயாயாணரென்றது வெல்போராகிய இடையறாது வருகின்ற செல்வமென்றவாறு.

ஆன் - அசை.

(க) மைந்த,நின்படைஅழிவுபடாமை நீஓம்புவினைசெய்தமையானே, (உ) நின்வென்றிகளின்பெருமை பிறரிடத்தின்றி (க0) நின்னிடத்தே (உ) புகழ்ச்சியமைந்தனவென முடிவுசெய்க.

இதனாற்சொல்லியது, அவன்வென்றிச்சிறப்புக் கூறியவாறாயிற்று.

உரைசான்றன நின்வென்றியெனக் கூறினமையான், வாகைத்துறைப் பாடாணாயிற்று.

(பி - ம்.) உ. பெருமநின்வென்றி. ரு. அருகுடைச்சேவல்.

ரு. அருளுடைச்சேவல். (சு)

(௫௧.) வீயா யாணர் நின்வயி னானே
தாவா தாகு மலிபெறு வயவே
மல்லல் உள்ளமொடு வம்பமர்க் கடந்தே

## ௩௨ பதிற்றுப் பத்து.

செருமிகு முன்பின் மறவரொடு தலைச்சென்று
பணைதடி புனத்திற் கைதடிபு பலவுடன்
யானை பட்ட வான்மயங்கு கடுந்தார்
மாவு மாக்களும் படுபிண முணீஇயர்
பொறித்த போலும் புள்ளி யெருத்திற்
புன்புற வெருவைப் பெடைபுணர் சேவல்
குடுமி யெழாலொடு கொண்டுகிழக் கிழிய
நிலமிழி நிவப்பி னீணிரை பலசுமந்
துருவெழு கூளியரு ண்டுமகிழ்ந் தாடக்
குருதிச் செம்புன லொழுகச்
செருப்பல செய்குவை வாழ்கநின் வளனே.

துறை - கள்வழி.
வண்ணமும் தூக்கும் அது.
பெயர் - (௩) வான்மயங்கு கடுந்தார்.

(௪) தலைச்சென்று (௬) வம்பமர்க்கடந்தென மாறிக்கூட்டுக.
வம்பமரென்றது முன்புசெய்துவருகின்ற போரன்றிப்

பகைவர் புதிதாகப் பகைத்துச்செய்யும் போரினை.

௯. வாண்மயங்குதலாவது இரண்டு படையில்வாளும் தம்மில் தெரியாமல் மயங்குதல்.

இச்சிறப்பான், இதற்கு 'வாண்மயங்குகடந்தார்' என்று பெயராயிற்று.

௧௦. கிழக்கென்றது கீழான பள்ளங்களை.

(௧) உள்ளமொடு வம்பமர்க்கடந்து (௧௪) செருப்பலசெய்குவை; அதனானே (௨)நினதுவலி (௧)நின்னிடத்துக் (௨) கேடுபடாததாயிருந்தது; அதன்மேலும் இதற்கு அடியாகிய (௧௪) நின்போர்வளம் வாழ்கவெனக் கூட்டி வினைமுடிவுசெய்க.

இதனாற்சொல்லியது, அவன்வென்றிச்சிறப்புக் கூறியவாறாயிற்று.

மிகுதிவகையால், தன்போர்க்களச்சிறப்புக் கூறினமையின், துறை களவழியாயிற்று.

(௯)

(௩௭.) வாழ்கநின் வளனே நின்னுடை வாழ்க்கை
வாய்மொழி வாயர் நின்புக ழேத்தப்
பகைவ ராரப் பழங்க ணருளி
நகைவ ரார நன்கலஞ் சிதறி
ஆன்றவிந் தடங்கிய செயிர்தீர் செம்மால்

வான்றோய் நல்லிசை யுலகமொ டுயிர்ப்பத்

துளங்குகுடி திருத்திய வலம்படு வென்றியு

மாயிரும் புடையன் மாக்கழல் புனைந்து
மன்னெயி லெறிந்து மறவர்த் தரீஇத்
தொன்னிலைச் சிறப்பி னின்னிழல் வாழ்நர்க்குக்
கோடற வைத்த கோடாக் கொள்கையு
நன்றுபெரி துடையையா னீயே
வெந்திறல் வேந்தேயிவ் வுலகத் தோர்க்கே.

துறை - செந்துறைப் பாடாண்பாட்டு.
வண்ணமும் தூக்கும் அது.
பெயர் - (எ) வலம்படுவென்றி.

எ. வலம்படுவென்றியென்றது மேன்மேலும் பல போர் வென்றி படுதற்கு அடியாகிய வென்றியென்றவாறு.

இச்சிறப்பான், இதற்கு 'வலம்படுவென்றி' என்று பெயராயிற்று

(இ) செம்மால், (எ) துளங்குகுடி திருத்திய வலம்படு வென்றியும் (க)மன்னெயில்களையெறிந்து அதில்வாழும் மறவர்களைப்பிடித்துக்கொண்டு (க0) பழைதான நிலைமைச்சிறப்பினையுடைய நின்னிழலில் வாழும்வீரர்க்குக் (கக) கொடுமைஅறும்படிவைத்த பிறழாக்கொள்கையும் (கஉ) நீ மிகப் பெரிதுடையையாயிராநின்றாய்: ஆதலால், (கரு) வேந்தே, இவ்வுல

கத்தோர் ஆக்கத்தின்பொருட்டு (க) நின்செல்வமும் நின்வாழ்நாளும் வாழ்வனவாகவெனக்கூட்டி வினைமுடிவுசெய்க.

இதனாற்சொல்லியது, அவற்குள்ள குணங்களையெல்லாம் எடுத்துப் புகழ்ந்து அவன்செல்வத்தையும் அவனையும் வாழ்த்தியவாறாயிற்று.

(பி - ம்.) க. பகைவராயினும். இ. செம்மல்.

(எ) (ருஅ.) உலகத் தோரே பலர்மற் செல்வ
ரெல்லா ருள்ளுநின் னல்லிசை மிகுமே
வளந்தலை மயங்கிய பைதிரந் திருத்திய
களங்காய்க் கண்ணி நார்முடிச் சேர
ரெயின்முகஞ் சிதையத் தோட்டி யேவலிற்
றோட்டி தந்த தொடிமருப் பியானைச்
செவ்வுளைக் கலிமா வீகை வான்கழற்
செயலமை கண்ணிச் சேரலர் வேந்தே
பரிசிலர் வெறுக்கை பாணர் நாளவை



க0) வாணுதல் கணவ மள்ள ரேறே
மையற விளங்கிய வடுவாழ் மார்பின்
வசையில் செல்வ வான வரம்ப
வினியவை பெறினே தனிதனி நுகர்கேந்

தருகென விழையாத் தாவி னெஞ்சத்துப்
கறு பகுத்தூண் டொகுத்த வாண்மைப்
பிறர்க்கென வாழ்திநீ யாகன் மாறே.

இதுவுமது.
பெயர் - (கூ) பரிசிலர்வெறுக்கை.

ச. களங்காய்க்கண்ணி நார்முடியென்றது களங்காயாற்செய்தகண்ணியும் நாராற்செய்தமுடியுமென்றவாறு.

தான் முடிசூடுகின்றகாலத்து ஒருகாரணத்தால் முடித்தற்குத்தக்க கண்ணியும் முடியும் உதவாமையிற் களங்காயால் கண்ணியும் நாரால் முடியும் செய்து கொள்ளப்பட்டனவென்றவாறு.

கூ. பரிசிலர்வெறுக்கையென்றது பரிசிலர்வாழ்வென்றவாறு.

இச்சிறப்பான், இதற்கு, 'பரிசிலர்வெறுக்கை' என்று பெயராயிற்று.

நாளவையுடைமையாற் பாணர்நாளவையென்றும் அவற்குப் பெயராயிற்று.

(ச) சேரல், (அ) சேரலர்வேந்தே, (கூ) பரிசிலர்வெறுக்கை, பாணர் நாளவை, (க0) வாணுதல்கணவ, மள்ளரேறே, (கஉ) வசையில்செல்வ, வானவரம்ப, (க) செல்வர் உலகத்தார் பலர்மன்; (அச்செல்வத்தாரெல்லாம் பெற்றதுஈதெனத்) (கச) தாவில்நெஞ்சத்துப் (க) பகுத்தூண் தொகுத்த ஆண்மையானே (கசு) பிறர்க்கெனவாழ்திநீயாகலான், (உ) அவர்களெல்லாருள்ளும் நின் நல்லிசை மிகுமெனக்கூட்டி வினைமுடிவுசெய்க.

இதனாற்சொல்லியது, அவன்கொடைச்சிறப்புக் கூறியவாறாயிற்று. (அ)

(பி - ம்) கசு. வாழ்கநீ.

(௩௯.) பிறர்க்கென வாழ்திநீ யாகன் மாறே
யெமக்கிலென் னார்நின் மறங்கூறு குழாத்தர்
தப்புத்துறை போகிய வெப்புடைத் தும்பைக்
கறுத்த தெவ்வர் கடிமுனை யலற
வெடுத்தெறிந் திரங்கு மேவல் வியன்பணை
யுருமென வதிர்பட்டு முழங்கிச் செருமிக்
குடங்கா ராரரண் வாடச் செல்லும்

## நான்காம் பத்து. [illegible]

கால னனைய கடுஞ்சின முன்ப
வாலிதி, னூலி னிழையா நுண்மயி ரிழைய
பொறித்த போலும் புள்ளி யெருத்திற்
புன்புறப் புறவின் கணநிரை யலற
வலந்தலை வேலத் துலவை யஞ்சினைச்
சிலம்பி கோலிய வலங்கற் போர்வையி
னிலங்குமணி மிடைந்த பசும்பொற் படலத்
தவிரிழை தைஇ மின்னுமிழ் பிலங்கச்
சீர்மிகு முத்தந் தைஇய
நார்முடிச் சேரனின் போர்நிழற் புகன்றே.

துறை - வாகை.

வண்ணமும் தூக்கும் அது.

பெயர் - (ரு) ஏவல்வியன்பணை.

உ. எமக்கிலென்னூர் நின்மறங்கூறு குழாத்தரென்றது நின்படைக் குழாத்திற் படைத்தலைவர் நீ பிறர்க்கென வாழ்கியாகையால், அவரும் தம் பால் இரந்துசென்றார்க்கு எமக்கு இல்லையென்று மாறாரென்றவாறு.

ஙு. எடுத்தெறியவெனத் திரிக்க. ஏவல்வியன்பணையென்றது எடுத்த வினை முடிந்ததெனாது மேன்மேலும் படையைக் கடிமுனைக்கண் ஏவுதலை யுடைய முரசென்றவாறு.

இச்சிறப்பான், இதற்கு 'ஏவல்வியன்பணை' என்று பெயராயிற்று.

கூ. இழைய (கக) போர்வையெனக்கூட்டுக.

கக. புறவின்கணநிரையலறுதல் - அப்போர்வையை வலையெனக் கருதி அலறுதல்.

கஉ. உலவையஞ்சினையென்றது உலந்த சிறுகொம்பினையுடைய பெருங்கொம்பினை.

கச. இலங்கு மணிமிடைந்த பசும்பொற் படலமென்றது விளிம்பு மணியழுத்திய பொற்றகட்டாற்செய்த கூட்டினை.

கரு. அவிரிழை தைஇயென்றது விளங்கின நூலாலே முத்தைக் கோத்தென்றவாறு.

கக. போர்வையின் (கக) முத்தந்தைஇயவென்றது அப்போர் வையை முத்தாற்சூழுமாறுபோல அக்கூட்டினைச் செறிந்த நார்முடியின் பொல்லாங்கு குறைதற்கு முத்துவடங்களைச்

சூழ்ந்தவென்றவாறு.

(கக) போர்வையின் (கக) முத்தந்தைஇய (கச) பசும்பொற்பட லத்து (கஎ) நார்முடியென்று மாறிக்கூட்டுக.

## ௩௰ பதிற்றுப் பத்து.

கஎ. நின்போராகியநிழலை என்றும் உளவாகவேண்டுமென்று விரும்பியென்றவாறு. போரை நிழலென்றது, அப்போர் மறவரது ஆக்கத்திற்குக் காரணமாகலின்.

(அ) முன்ப, (கஎ) சேரல், (க) நீ பிறர்க்கென வாழ்தியாகலான், (உ) நின் மறங்கூறுகுழாத்தர் (கஎ) நின்போர்நிழற்புகன்று (உ) எமக்கு இல்லையென்னாரெனக்கூட்டி வினைமுடிவு செய்க.

இனி இதற்குப் பிறவாறு கூட்டி வேறுபொருளுரைப்பாருமுளர்.

இதனாற்சொல்லியது, அவன்கொடைச்சிறப்பும் அவன்வென்றிச்சிறப்பும் உடன்கூறியவாறாயிற்று.

அம்மறவரது கொடைக்குக்காரணம் அவன்வென்றியாகலின், துறை வாகையாயிற்று.

(கூ)

(௬௰.) போர்நிழற் புகன்ற சுற்றமொ டூர்முகத்
திறாஅ லியரோ பெருமநின் றானை
யின்னிசை யிமிழ்முர சியம்பக் கடிப்பிகூஉப்
புண்டோ ளாடவர் போர்முகத் திறுப்பக்
காய்த்த கரந்தை மாக்கொடி விளைவயல்
வந்திறை கொண்டன்று தானை யந்திற்
களைநர் யாரினிப் பிறரெனப் பேணி
மன்னெயின் மறவ ரொலியவிந் தடங்க
வொன்னார் தேயப் பூமலைந் துரைஇ
வெண்டோடு நிரைஇய வேந்துடை யருஞ்சமங்
கொன்றுபுறம் பெற்று மன்பதை நிரப்பி
வென்றி யாடிய தொடித்தோண் மீகை
யெழுமுடி கெழீஇய திருஞெம ரகலத்துப்
பொன்னங் கண்ணிப் பொலந்தேர் நன்னன்
சுடர்வீ வாகைக் கடிமுத றடிந்த
தார்மிகு மைந்தி னார்முடிச் சேரல்
புன்கா லுன்னஞ் சாயத் தெண்கண்
வறிதுகூட் டரிய விரவலர்த் தடுப்பத்
தான்றர வுண்ட நனைநறவு மகிழ்ந்து
நீரிமிழ் சிலம்பி னேரி யோனே
செல்லா யோதில் சில்வளை விறலி

மலர்ந்த வேங்கையின் வயங்கிழை யணிந்து
மெல்லியன் மகளி ரெழினலஞ் சிறப்பப்
பாணர் பைம்பூ மலைய விளைய
உடு ரின்களி வழாஅ மென்சொ லமர்ந்து
நெஞ்சுமலி யுவகையர் வியன்களம் வாழ்த்தத்
தோட்டி நீவாது தொடிசேர்பு நின்று
பாக ரேவலி னொண்பொறி பிசிரக்
காடுதலைக் கொண்ட நாடுகா ணவிர்சுட
ஙூ0 ரழல்விடுபு மரீஇய மைந்திற்
றொழில்புகல் யானை நல்குவன் பலவே.

துறை - விறலியாற்றுப்படை.
வண்ணமும் தூக்கும் அது.
பெயர் - (உகூ) நாடுகாணவிர்சுடர்.

க. போர்கிழற்புகன்ற சுற்றமென்றது படைத்தலைவரை. ஊர்முக மென்றது படைபொருமிடத்தை.

(ச) ஆடவர் போர்முகத்திறுப்ப (ரு) வயவிலே (சு) வந்து இறை கொண்டன்று தானை; (எ) களைநர்யார், இனிப்பிறர்; (உ) பெரும, நின்றானை (க) சுற்றமொடு ஊர்முகத்து (உ) இரு அவியரெனச் (எ) சொல்லிப் பேணியென மாறிக் கூட்டுக.

க. ஒன்னுரென்றது முன்சொன்ன (அ)
மன்னெயின்மறவரல்லாத பகைவரை.

(க ०) வெண்டோடுநிரைஇய (க) பூமலேந்தென மாறிக்
கூட்டுக.

க க. மன்பதைநிரப்பியென்றது தன்படையை
அவ்வேந்தர்காட்டுத் தன் ஆணையானே நிரப்பியென்றவாறு.

க உ. வென்றியாடியவென்னும் பெயரெச்சத்திற்கு
மீகையென் னும்பெயரினை அவன்முன் வென்றியாடுதற்குக்
கருவியாகியகையெனக் கரு விப்பெயராக்குக.

மீகை - மேலெடுத்தகை.

க ௪. பொன்னங்கண்ணியும் பொலந்தேரும் நன்னற்கு
அடையாக்குக.

க எ. உன்னஞ் சாயவென்றது தன்னொடு பொரக்கருதுவார்
நிமித் தம்பார்த்தவழி அவர்க்கு வென்றியின்மையிற்
கரிந்துகாட்டவென்றவாறு.

க அ. வறிதுகூட்டு அரியலென்றது களிப்பு மிறக்கவிடும்
பண்டங்

அ

இ அ பதிற்றுப் பத்து.

கள் பெருகக்கூட்டிற் களிப்புமிகுமென்று அவை அளவேகூட்டின
அரிய லென்றவாறு.

௧௬. தானென்பதனைச் (௧௬)சேரல் தானெனக்கூட்டித் தரவுண்ட வென்பதனை வளையாது கொடுத்தற்பொருட்டு உண்டவெனவுரைக்க.

இனி இதற்குப் பிறவாறு உரைப்பாருமுளர்.

௨௭. தோட்டி நீவாமலெனத்திரிக்க.

௨௬. காடுதலைக்கொண்ட சுடரெனக்கூட்டுக.

நாடுகாணவிர்சுட ரென்றது நாடெல்லாம்நின்றுகாணும்படி நின்றெரிகின்ற விளங்கினசுடரெ ன்றவாறு

இச்சிறப்பானே, இதற்கு 'நாடுகாணவிர்சுடர்' என்று பெயராயிற்று.

௨௬ - ௬௦. சுடரழலென்றதனைச் சுடர்போலும்அழலென உவமத் தொகையாக்கி அழலை அந்தயானையின் சீற்றத்தீயாக்குக. மரீஇயவென்றது அவ்வாறுஅழல்விட்டும் பாகரோவலொடு மரீஇயவென்றவாறு.

(௧௬) சேரல் (௧௬) தான் (௨௦) நேரியோன்; (௨௪) இளையர் (௨௩) களம்வாழ்த்த (௨௬) மகளிர் (௨௨) மலர்ந்தவேங்கையின் இழைய ணிந்து (௨௬) நலஞ்சிறப்பப் (௨௪) பாணர் பூமலைய (௬௧) யானையைப் பல நல்குவான்; ஆனபின்பு (௨௧) விறலி, நீ செல்லாயோவெனக்கூட்டி வினை முடிவுசெய்க.

இதனாற்சொல்லியது, அவன் கொடைச்சிறப்புக் கூறியவாறாயிற்று.

(பி - ம்) ௧௦. வெண்டோடு நிரைத்த. ௨௭. தோட்டி நிவந்து.

௨௧. செல்லா மோதில்.

இதன்பதிகத்துக் கடம்பின்பெருவாயிலென்றது,
அந்நன்னனூரை.

நிலைச்செருவென்றது, அந்நன்னன்
நாடொறுஞ்செய்தபோரினை.

(பதிகம்.)

ஆராத் திருவிற் சேர லாதற்கு
வேள் ஆவிக் கோமான்
பதுமன் றேவி யீன்ற மகன்முனை
பனிப்பப் பிறந்து பல்புகழ் வளர்த்

தூழி யாகிய வுயர்பெருஞ் சிறப்பிற்
பூழி நாட்டைப் படையெடுத்துத் தழீஇ

யுருள்பூங் கடம்பின் பெருவாயி னன்னனை

நிலைச்செருவி னாற்றலை யறுத்தவன்
பொன்படு வாகை முழுமுத றடிந்து
குருதிச் செம்புனல் குஞ்சர மீர்ப்பச்



செருப்பல செய்து செங்களம் வேட்டுத்

துளங்குகுடி திருத்திய வளம்படு வென்றிக்

களங்காய்க்கண்ணி நார்முடிச்சேரலைக் காப்பியாற்றுக் காப்பிய ஞர்பாடினர் பத்துப்பாட்டு. அவைதாம் : கமழ்குரற்றுழாய், கழை யமல்கழனி, வரம்பில்வெள்ளம், ஒண்பொறிக்கழற்கால், மெய்யாடு பறந்தலை, வாண்மயங்குகடுந்தார், வலம்படுவென்றி, பரிசிலர்வெறுக்கை, ஏவல்வியன்பணை, நாடுகாணவிர்சுடர்.

இவைபாட்டின்பதிகம்.

பாடிப்பெற்றபரிசில் : நாற்பதுநூறாயிரம்பொன் ஒருங்குகொடுத்துத் தான் ஆள்வதிற் பாகங்கொடுத்தான் அக்கோ.

களங்காய்க்கண்ணி நார்முடிச்சேரல் இருபத்தையாண்டு வீற்றிருந் தான்.

நான்காம்பத்து முற்றிற்று.



## ஐந்தாம் பத்து.



(௪௧.) புணர்புரி நரம்பின் றீந்தொடை பழுனிய
வணரமை நல்யா ழிளையர் பொறுப்பப்
பண்ணமை முழவும் பதலையும் பிறவுங்
கண்ணறுத் தியற்றிய தூம்பொடு சுருக்கி
காவிற் றகைத்த துறைகூடு கலப்பையர்
கைவ லிளையர் கடவுட் பழிச்ச
மறப்புலிக் குழூஉக்குரல் செத்து வயக்களிறு
வரைசேர் பொழுந்த சுடர்வீ வேங்கைப்
பூவுடைப் பெருஞ்சினை வாங்கிப் பிளந்துதன்
மாயிருஞ் சென்னி யணிபெற மிலைச்சிச்
சேஎ ருற்ற செல்படை மறவர்
தண்டுடை வலத்தர் போரெதிர்ந் தாங்கு

வழையமல் வியன்காடு சிலம்பப் பிளிறு
மழைபெயன் மாறிய கழைதிரங் கத்த
மொன்றிரண் டலபல கழிந்து திண்டேர்
வசையி னெடுந்தகை காண்குவந் திசினே
தாவ லுய்யுமோ மற்றே தாவாது
வஞ்சின முடித்த வொன்றுமொழி மறவர்
முரசுடைப் பெருஞ்சமத் தரசுபடக் கடந்து
வெவ்வ ரோச்சம் பெருகத் தெவ்வர்
மிளகெறி யுலக்கையி னிருந்தலை யிடித்து
வைகார்ப் பெழுந்த மைபடு பரப்பி
னெடுத்தே றேய கடிப்புடை வியன்கண்
வலம்படு சீர்த்தி யொருங்குட னியைந்து
காலுளைக் கடும்பிசி ருடைய வாலுளைக்
கடும்பரிப் புரவி யூர்ந்தநின்
படுந்திரைப் பனிக்கட லுழந்த தாளே.

துறை - காட்சிவாழ்த்து.

வண்ணம் - ஒழுகுவண்ணம்.

• • •

தூக்கு - செந்தூக்கு.

பெயர் - (அ) சுடர்வீவேங்கை.

இ. துறைகூடு கலப்பை - ஆடற்றுறைக்கு வேண்டுவனவெல்லாம் கூடின மூட்டு.

(சு) கடவுட்பழிச்ச (கச) அத்தம் (கூ) பலகழிந்து காண்குவந்திசி னென முடிக்க.

எ - அ: களிறு தன்சினத்தாற்செய்த செயலுக்கெல்லாம் வேங்கை காரணமாய்நின்றமையான், இதற்கு 'சுடர்வீவேங்கை' என்று பெய ராயிற்று.

கூ. தாவலுய்யுமோவென்றது வருத்தத்தில்நின்று நீங்குமோ வென்றவாறு.

தாவென்னும் உரிச்சொல் தொழிற்பெயர்ப்பட்டுத் நின்றது.

தாவலெனை கூ. வஞ்சினமுடித்தல் - மாற்றார் மண்டலங்களைக் கொண்டு முடித்தல்.

உ0. வெம்மையென்னும் பண்பிற்கு வெவ்வவென்பதும் ஓர் வாய் பாடு.

உ0. தெவ்வர் (உக) தலையென மாறிக்கூட்டுக.

(உக) இருந்தலையிடித்து (க ரு) அரசுபடக்க டந்தெனமுடித்து அத னைக் கடக்கவெனத்திரித்து அதனை (உரு) எடுத்தேறென்னும் தொழிற்பெய ரொடு முடிக்க.

உஉ. வைகாரப்பு ! - ஒருகாலும் நீங்குதலில்லாத தங்கின ஆரவாரம்.
மைபடு பரப்பு - கடற்பரப்பு.

(உச) இயைந்தென்பதனை இயையவெனத்திரித்து (உஎ) உழந்த வென்பதனோடுமுடிக்க; இனி (உகூ) ஊர்ந்தவென்பதனோடு முடிப்பினும் அமையும்.

உடு. காலுளையென்றது காற்றானே உளைதலையுடையவென்ற வாறு. உளைதல் - ஈடுபடுதல்.

(கக) நெடுந்தகை, காண்குவந்தேன், (உகூ) நின் (உஎ) கடலுழந்த தாள் (கஎ) தாவலுய்யுமோவெனக்கூட்டி வினைமுடிவுசெய்க.

இதனாற் சொல்லியது, அவன் வென்றிச்சிறப்புக் கூறியவாறாயிற்று.

நின்கடலுழந்த தாள் தாவலுய்யுமோவென்றதனாற் காட்சிவாழ்த் தாயிற்று.

(பி - ம்.) ௫. தசைத்த. க௫. கடந்து. உஎ. உழந்தனனே. (க).

## ௬உ. பதிற்றுப் பத்து.

(௪உ.) இருப்பணம் புடைய லீகை வான்கழன்
மீன்றேர் கொட்பிற் பனிக்கய மூழ்கிச்

சிரல்பெயர்ந் தன்ன நெடுவெள் ளூசி
நெடுவசி பரந்த வடுவாழ் மார்பி
னம்புசே ருடம்பினர்ச் சேர்ந்தோ ரல்லது
தும்பை சூடாது மலைந்த மாட்சி
யன்னோர் பெரும நன்னுதல் கணவ
வண்ணல் யானை யடுபோர்க் குட்டுவ
மைந்துடை நல்லமர்க் கடந்து வலந்தரீஇ
யிஞ்சிவீ விராய பைந்தார் பூட்டிச்
சாந்துபுறத் தெறிந்த தசும்புதுளங் கிருக்கைத்
தீஞ்சே றுவிளைந்த மணிநிற மட்ட
மோம்பா வீகையின் வண்மகிழ் சுட…
கோடியர் பெருங்கிளை வாழ வாடிய
லுளையவிர் கலிமாப் பொழிந்தவை யெண்ணின்
மன்பதை மருள வரசுபடக் கடந்து
முந்துவினை யெதிர்வரப் பெறுதல் காணிய
ரொளிறுநிலை யுயர்மருப் பேந்திய களிறூர்ந்து
மான மைந்தரொடு மன்ன ரேத்தநின்
றேரொடு சுற்ற முலகுடன் மூய
மாயிருந் தெண்கடன் மலிதிரைப் பௌவத்து
வெண்டலைக் குரூஉப்பிசி ருடையத்
தண்பல வரூஉம் புணரியிற் பலவே.

துறை - செந்துறைப்பாடாண்பாட்டு.
வண்ணமும் தூக்கும் அது.
பெயர் - (கக) தசும்புதுளங்கிருக்கை.

உ-ரு. கயம் மூழ்கிச் சிரல்பெயர்ந்தன்ன

நெடுவெள்ளூசியென்றது கயத்திலேமூழ்கிச் சிரல் எழுகின்றகாலத்து அதன்வாயலகை ஒக்கப் புண்களை இழைகொள்கின்றகாலத்து அப்புண்ணின் உதிரத்திலே மறைந்தெழு கின்ற ஊசியென்றவாறு.

ச. நெடுவசியென்றது அவ்வூசித்தழும்பினை. புண்ணின் வடுவினை. வடுவென்றது அப்



இனி நெடுவெள்ளூசியை நெட்டையென்பதோர் கருவியென்பாரு முளர்.

௭. அம்பென்றது அம்பாலாகிய தழும்பினை.

௭-௮. அம்பு சேர் உடம்பினர்ச் சேர்ந்தோரல்லது தும்பை சூடாது மலைந்த மாட்சியென்றது அரசன்வீரரில் அம்புசேருடம்பினராய்த் தம் மோடு வீரமொத்தாரோடல்லாது போர்குறித்தார்தம்மோடு தும்பை சூடாமல் மாறுபட்ட மாட்சிமையுடைய வென்றவாறு.

௧௦-௧௧. இஞ்சி வீ விராய பைந்தார் பூட்டிச் சாந்து புறத்து எறிந்த வென்றது மதுநுகர்வுழி இடையிடைக்கறித்து இன்புறுதற்பொருட்டு இஞ்சியும் மோந்து இன்புறுதற்பொருட்டுப் பூவுமாக விரவித்தொடுத்த மாலையினைப்பூட்டி அவ்வாறு பயன்கோடற்குச் சாந்தும் புறத்தெறிந்தவென்றவாறு.

௧௧. தசும்புதுளங்கிருக்கையென்றது தன் களிப்புமிகுதியால் தன்னையுண்டாருடல்போல அத்தசும்பிருந்துஆடும்படியான இருப்பென்றவாறு.

இச்சிறப்பான், இதற்குத் '**தசும்புதுளங்கிருக்கை**' என்று பெயராயிற்று.

௧௨. தேறு - சுவை.

௧௨-௧௩. வண்மகிழ்மட்டத்தை ஓம்பாவீகையிற் சுரந்தெனமாறிக் கூட்டுக.

இனி மணிநிறமட்டத்தினையும் ஓம்பாவீகையினது வளவியமகிழ்ச்சியினையும் சுரந்தென இரண்டாக உரைத்தலுமாம்.

(௧௩) மன்னரேத்தக் (௧௮) களிறூர்ந்தெனமுடித்து அதனைக் களிறூரவெனத்திரித்து (௨௦) மூயவென்னும் வினையொடுமுடிக்க.

(எ) பெரும, கணவ, (௮) குட்டுவ, (௧௪) கோடியர்கிளைவாழ நீ (௧௩) சுரந்து, (௧௫) மாப்பொழிந்தவையெண்ணின், (௨௩) புணரியிற்பலவென வினைமுடிவுசெய்க.

இதனாற் சொல்லியது, அவன் கொடைச்சிறப்பும் வென்றிச்சிறப்பும் உடன் கூறியவாறாயிற்று.

(பி - ம்.) உக. தெண்கழி. தெண்கமலிகினா.

(உ)

(சாங.) கவரி முச்சிக் கார்விரி கூந்த
லூசன் மேவற் சேயிழை மகளி

ரூரல்போற் பெருங்கா லிலங்குவாண் மருப்பிற்
பெருங்கை மதமாப் புகுதரி னவற்றுள்
விருந்தின் வீழ்பிடி யெண்ணுமுறை பெறாஅக்
கடவு ளிலைய கல்லோங்கு நெடுவரை

[illegible]

## பதிற்றுப் பத்து.

வடதிசை யெல்லை யிமய மாகத்
தென்னங் குமரியொ டாயிடை யரசர்
முரசுடைப் பெருஞ்சமந் ததைய வார்ப்பெழச்
சொல்பல நாட்டைத் தொல்கவி னழித்த
போரடு தானைப் பொலந்தார்க் குட்டுவ
விரும்பனை திரங்கப் பெரும்பெய
லொளிப்பக்
குன்றுவறங் கூரச் சுடர்சினந் திகழ
வருவி யற்ற பெருவறற் காலை

மருஞ்செலற் பேராற் றிருங்கரை யுடைத்துக்
கடியோர் பூட்டுநர் கடுக்கை மலைய
வளாஜி லதிர்சிலை முழங்கிப் பெயல்சிறந்
தார்கலி வானந் தளிசொரிந் தாஅங்
குறுவ ராரா வோம்பா துண்டு
நகைவ ராரா நன்கலஞ் சிதறி
யாடுசிறை யறுத்த நரம்புசே ரின்குரற்
பாடு விறலியர் பல்பிடி பெறுக
துய்வீ வாகை நுண்கொடி யுழிஞை
வென்றி மேவ லுருகெழு சிறப்பிற்
கொண்டி மள்ளர் கொல்களிறு பெறுக
மன்றம் படர்ந்து மறுகுசிறைப் புக்குக்
கண்டி நுண்கோல் கொண்டுகளம் வாழ்த்து
மகவலன் பெறுக மாவே யென்று
மிகல்வினை மேவலை யாகலிற் பகைவருந்
தாங்காது புகழ்ந்த தூங்குகொளை முழவிற்
றொலையாக் கற்பநின் னிலைகண் டிகுமே
நிணஞ்சுடு புகையொடு கனல்சினந் தவிராது
நிரம்பகல் பறியா வேறு வேணி
நிறைந்து நெடிதிராத் தசும்பின் வயிரிய

கூ௫ ருண்டெனத் தவாஅக் கள்ளின்
வண்கை வேந்தேசின் கலிமகி ழானே.
துறை - இயன்மொழிவாழ்த்து.
வண்ணமுந் தூக்கும் அது.

## ஐந்தாம் பத்து. கூ௫

பெயர் - (௬௫) ஏறுவேணி.

க. முச்சி - கொண்டைமுடி. கவரிபோலுங் கூந்தலெனக்கூட்டுக.

௫. விருந்தின் வீழ்பிடியென்றது எண்ணுகின்ற மகளிர்க்கு விருந் தாகி அம்மகளிர்விரும்பிய பிடியென்றவாறு.

இனிக் காட்டியானைக்கு விருந்தாகிய அவ்வியானைகள் விரும்பும் பார்வைப்பிடியென்பாருமுளர். பிடியினையே எண்ணியது, தங்கள் நடை யொப்புமைபற்றியென்க.

(உ) மகளிரொன்னுமெழுவாய் (௫) பெறுவென்னும் பயனிலைகொண் டது.

௫. பிடியது எண்ணென்க. எண்ணுமுறையாவது சங்கு பற்பமுள் ளிட்டதொகை.

(௬) கல்லோங்குநெடுவரையாகிய (௭) இமயம் (௮) தென்னங்குமரி யொடு (௯) வடதிசையெல்லையாகவென மாறிக்கூட்டுக.

எல்லையாகவென்னும்வினையெச்சந் திற்கு இவ்வாறு எல்

லையான வென ஒருபெயரெச்சச்சொல்வருவித்து அப்பெயரெச்சத்திற்கு (ஃ) ஆயி டையென்புழி அவ்வென்னும் வகரவீற்றுப்பன்மைச்சுட்டுப்பெயரா முடி பாக்குக.

கo. சொல்பலநாடென்றது ஆயிடை அரசர்நாடெல்லாவற்றையும்.

கஉ - கச. பணை திரங்கும்வண்ணம் பெயல் ஒளித்தலானும் குன்று வறங்கூரும்வண்ணம் சுடர் சினம்திகழ்கையானும் அருவியற்றவெனக் கூட்டியுரைக்க.

கரு. அருஞ்செலற்பேராறு - புனல் நிறைந்த ஆறு; யாறென்பது ஆறெனமருவிற்று.

கரு - கஅ. கரையயுடைத்துத் தளிசொரிந்தாங்கென உடைத்தற் றொழிலை வானத்தின்றொழிலாக்குக; இந்நீரென ஒரு பெயர்வருவித்து உடைக்கவெனத் திரிக்கவுமாம்.

கஎ. சிலைமுழங்கியென்றது சிலைத்தலொடு முழங்கியென்றவாறு.

உக. ஆடு சிறையறுத்த நரம்பென்றது கின்னரமென்னும் புள்ளின் இசையெழுகின்ற சிறகினைத் தோற்பித்த யாழ்நரம்பென்றவாறு.

இனிச் சிறையென்றதை அந்நரம்பின் ஒலியெழாமற் சிறைப்படுத்தி நிற்கும் அதன் குற்றமென்பாருமுளர்.

உங. வாகையுழிஞையென்றது வாகையை முடிவிலேயுடைய உழிஞை யென்றவாறு.

இனி வாகையும் உழிஞையுமென இரண்டாக்கலுமாம்.

உகு. கொண்டி - கொள்ளை.

உஎ. நுண்கோல்-பிறப்புணர்த்துங்கோல்; நரம்பென்பதுமொன்று.

உஅ. அகவலன் - பாடும் பாணன்.

என்றுமென்புழி உம்மையை இசைநிறையும்மையாக்கி, அவ்வென் றென்பதனை முன் எண்ணிநின்ற வியங்கோட்களுடன்கூட்டிப் பின்னதனை (உகூ) இகல்வினைமேவலையென்னும் வினையொடுமுடிக்க.

இனி, என்றுமென்பதனை முன்னின்ற வியங்கோட்களுடன் கூட் டலுமொன்று.

முன்னின்ற (கஏ) உண்டு (உo) சிதறியென்னுமெச்சங்களையும் (உகூ) மேவலையென்பதனொடு முடிக்க.

கூo. தூங்குகொளைமுழவென்றது மந்தகதியையுடைய ஆடற் கேற்ற முழவு.

கூக. கற்பவென்றது கல்வியுடையாயென்றவாறு; பிறிதுமுரைப்ப. நின்னிலை கண்டிகுமென்றது நின்செல்வத்தின்பெருமைநிலையெல்லாம் கண்டேமென்றவாறு.

கூஉ. தவிராதென்றது குறைதலறியாதென்றவாறு.

கூகூ. ஏறு ஏணியென்றது கோக்காலி.

அதனை ஏறுவேணியென்று வெளிப்படுத்த சிறப்பான், இதற்கு 'ஏறு வேணி' என்று பெயராயிற்று.

௯௪. நிறைந்து நெடிதிராவென்றது உண்பார்க்கு வார்த்தலால் நிறைந்து நெடும்பொழுதிராதவென்றவாறு.

(௯௯) நிரம்பகல்பறியாத (௯௪) நிறைந்துநெடிதிராத தசும்பெனப் பெயரெச்சமறையடுக்காக்குக.

௯௫. உண்டெனத் தவாவென்றது உண்ணவுண்ண அக்குடங்களை மேன்மேலும் நிறைத்தலிற் குறையாதவென்றவாறு.

(௧௧) குட்டுவ, (௯௧)தொலையாக்கற்ப, (௯௬) வேந்தே, நின்கலிமகி ழின்கண்ணே (௯௧) நின்னிலை கண்டேமென மாறிக்கூட்டியுரைக்க.

வேந்தேயென்னும்விளி முன்னின்றவிளிகளோடு கூடுதலின் மாறாயிற்று.

இதனாற் சொல்லியது, அவன்செல்வமகிழ்ச்சி கூறியவாறாயிற்று.

(பி - ம்.) ௫. எண்ணுமெய். ௧௨. பனைதிரங்க. ௧௦. சொல்புனனாட்டை. ௧௮. தளிபொழிந்தாங்கு. (௯)

(௪௪.) நிலம்புடைப் பன்னவார்ப் பொடுவிசும்பு துடையூ
வான்றேய் வெல்கொடி தேர்மிசை நுடங்கப்
பெரிய வாயினு மமர்கடந்து பெற்ற



வரிய வென்று தோம்பாது வீசிக்

கலஞ்செலச் சுரத்த லல்லது கவினுங்
களைகென வறியாக் கசடி னெஞ்சத்
தாடுநடை யண்ணனிற் பாடுமகள் காணியர்
காணி லியரோநிற் புகழ்ந்த யாக்கை
முழுவலி துஞ்சு நோய்தபு நோன்றொடை கட்டு
நுண்கொடி யுழிஞை வெல்போ ரறுகை
சேண னாயினுங் கேளென மொழிந்து
புலம்பெயர்ந் தொளித்த களையாப் பூசற்
கரண்கடா வுறீஇ யணங்குநிகழ்ந் தன்ன
மோகூர் மன்னன் முரசங் கொண்டு
நெடுமொழி பணித்தவன் வேம்புமுத றடிந்து
முரசுசெய முரச்சிக் களிறுபல பூட்டி
யொழுகை யுய்த்த கொழுவில் பைந்துணி
வைத்தலை மறந்த துய்த்தலைக் கூகை
கவலை கவற்றுங் குராலம் பறந்தலை
முரசுடைத் தாயத் தரசுபல வோட்டித்
துளங்குநீர் வியலக மாண்டினி தகழிந்த
மன்னர் மறைத்த தாழி
வன்னி மன்றத்து விளங்கிய காடே.

துறை - செந்துறைப்பாடாண்பாட்டு.

வண்ணமும் தூக்கும் அது.

பெயர் - (கூ) நோய்தபுநோன்றேடை.

(க) ஆர்ப்பொடு (கூ) அமர்கடந்தெனக் கூட்டுக.

இ. கலமென்றது, தான் அணிந்த ஆபரணங்களை.

அ. நிற்புகழ்ந்த யாக்கையென்றது நின்னை எல்லாவீரரும் சொல விப் புகழ்தற்குக்காரணமாகிய யாக்கையென்றவாறு.

(அ) யாக்கையாகிய (கூ) நோய்தபு நோன்றொடையென்க.

யாக்கையை இங்ஙனம் சிறப்பித்துக் கூறினமையான், இதற்கு 'நோய்தபுநோன்றேடை' என்றுபெயராயிற்று.

க0. அறுகையென்பான்

மோகூர்மன்னனுக்குப்பகையாய்ச் சேர னுக்கு நட்பாயிருப்பானோர் குறுநிலமன்னன்.

கக, சேணனுயினும் கேளெனமொழிந்தென்றது

அக்கோ நீசெய்

## கூஅ பதிற்றுப் பத்து.

இன்றவலிக்கு உதவிசெய்தற்குச் சேயனுயினும் எனக்கு அவன்தான் நட்

பெனச்சொல்லி யென்றவாறு.

கஉ. கிளையாப்பூசல் - ஒருவரால் மாற்றவொண்ணுத வருத்தம்.

௧ ௬. அரண்கள் தா உறீஇயென்றது மாற்றார் அரண்களை அழித்

தற்றொழிலேத் தன்பாலே உறுவித்தென்றவாறு.

௧ ௯. முரசுசெய முரச்சியென்றது அவ்வேம்பினை முரசாகச்செய்

யும்படி முற்றுவித்தென்றவாறு.

முற்றுவித்தலாவது ஒழுகையேற்றலாம்படி துண்டங்களாகத் தறிப்

பித்தல். களிறென்றது மோகூர்மன்னன்களிற்றினை. களிறுபலபூட்டியென் [வள்ளு]றது அவனேறும் யானைகளை அவனை அவமதித்துச் சாட்டிற்குக் கடாவோ

பாதியாகப் பூட்டியென்றவாறு.

பூட்டியென்றதற்கு 'வாலிழை கழித்த நறும்பல் பெண்டிர், பல்லிருங்

கூந்தன் முரச்சியாற், குஞ்சர வொழுகை பூட்டி' என இதன்பதிகத்து வந்த

மையால், அம்மகளிர் கூந்தன்மயிர்க்கயிற்றாற் பூட்டியெனக்கொள்க.

(௧௭) ஒழுகையுய்த்த (௭) ஆடுகடையண்ணலென மாறிக்கூட்டுக.

௧அ. கூகையையென இரண்டாவதுவிரிக்க.

௧௭-௧௯. பைந்துணிகள்வைத்த இடமறந்த கூகையை அதன்பெ

டையாகிய குரால் கவற்றுமென்க.

வைத்தலை - விகாரம். கவலென்னும்பெயரைத்
தாவென்பதுபோல
வருத்தமென்றுரைக்க. கவலைகவற்றல் - வருத்தல்.
பறந்தலையென்றது,
இகோட்டிற் பிணஞ்சுமிடத்தை.
உக. வன்னிமன்றமென்றது அக்காட்டில்
வன்னிமரத்தையுடைய
இடத்தினை. அதுதான்
பிணத்தொடுசென்றோரெல்லாருமிருந்து மன்று
போறலின், மன்றெனப்பட்டது.
உக. விளங்கியகாடென்றது
தன்தொழிலில்விளங்கியகாடென்ற
வாறு.
(கஎ) ஒழுகையுய்த்த (எ) ஆடுநடையண்ணல், நின் (கூ)
நோய்தபு
நோன்றொடையினை (எ) நிற்பாடுமகள் காண்பாளாக ; (உக) காடு
(அ)காணு
தொழிவதாகவென மாறிக்கூட்டி வினைமுடிவுசெய்க.
இதனாற்சொல்லியது, அவனை நீ நெடுங்காலம்
வாழ்கவென வாழ்த்
தியவாறாயிற்று.
(பி - ம்.) க க. சேணுனும். க அ.
வைத்துத்தலைமறந்த. (ச)

(சுரு.) பொலம்பூந் தும்பைப் பொறிகிளர் தூணிப்
புற்றடங் கரவி னொடுங்கிய வம்பி

## ஐந்தாம் பத்து.

நொசிவுடை வில்லி னொசியா நெஞ்சிற்
களிறெறிந்து முரிந்த கதுவா யெஃகின்
விழுமியோர் துவன்றிய வகன்க ணாட்பி
னெழுமுடி மார்பி னெய்திய சேரல்
குண்டுக ணகழிய மதில்பல கடந்து
பண்டும் பண்டுந்தா முள்ளழித் துண்ட
நாடுகெழு தாயத்து நனந்தலை யருப்பத்துக்
கதவங் காக்குங் கணையெழு வன்ன
நிலம்பெறு திணிதோ ளுயர வோச்சிப்
பிணம்பிறங் கழுவத்துத் துணங்கை யாடிச்
சோறுவே றென்னா வூன்றுவை யடிசி
லோடாப் பீட ருள்வழி யிறுத்து
முள்ளிடு பறியா வேணித் தெவ்வர்
சிலைவிசை யடக்கிய மூரி வெண்டோ

லனைய பண்பிற் றானை மன்ன
ரினியா ருளரோநின் முன்னு மில்லை
மழைகொளக் குறையாது புனல்புக நிறையாது
விலங்குவளி கடவுந் துளங்கிருங் கமஞ்சூல்
வயங்குமணி யிமைப்பின்வேல் விடுபு
முழங்குதிரைப் பனிக்கடன் மறுத்திசி னோரே.

இதுவுமது.

பெயர் - (கரு) ஊன்றுவையடிசில்.

(எ) மதில்பலகடந்து (அ) உள்ளழித்துண்ட (கூ) அருப்பத்துப் (கஉ) பிணம்பிறங்கழுவத்துத் (கக) தோளோச்சிப் (அ) பண்டும்பண்டும் (கஉ) துணங்கையாடியென மாறிக்கூட்டுக.

கூ. சோறுவேறென்னா அடிசிலென்றது அரசனுக்கு அடுசோற்றில் இச்சோறு வேறென்றுசொல்லப்படாத அடிசிலென்றவாறு.

இவ்வடைச்சிறப்பானே, இதற்கு '**ஊன்றுவையடிசில்**' என்று பெயராயிற்று.

கசு - கஎ. தோல் அனைய பண்பென்றது தான் அம்புபடில் தளராது பிறர்க்கு அரணமாகும் தோற்கடகுபோன்ற பண்பென்றவாறு.

(கக) குறையாது நிறையாதென்னுமெச்சங்களைக் (உ0) கடவுமென்னும் வினையொடுமுடித்து அதனைக் கடவப்படுமெனவுரைக்க.

உக. மணியிமைப்புப்போலுமின்னுக்கு மணியிமைப்பென்பதுபெய ராயிற்று. வேலிடுபென்றது வேலை ஏற்றி நடப்பித்தென்றவாறு.

உஉ. கடன்மறுத்தலென்றது, கடவிற்புக்கு ஒருவினைசெய்தற்கு அரிதென்பதனை மறுத்தலை.

(கூ) சேரல், (உஉ) கடன்மறுத்திசினோராகிய (கஎ) தானைமன்னர் (கஅ) இனி யாருளரோ, நின்முன்னுமில்லையெனக் கூட்டி வினைமுடிவு செய்க.

இதனாற்சொல்லியது, அவன்வென்றிச்சிறப்புக் கூறியவாறாயிற்று. ()

(ரு கூ.) இழையர் குழையர் நறுந்தண் மாலையர்
சுடர்நிமி ரவிர்தொடி செறித்த முன்கைத்
திறல்விடு திருமணி யிலங்கு மார்பின்
வண்டுபடு கூந்தன் முடிபுனை மகளிர்
ரு தொடைபடு பேரியாழ் பாலை பண்ணிப்
பணியா மரபி னுழிஞை பாட
வினிதுபுறந் தந்தவர்க் கின்மகிழ் சுரத்தலிற்
சுரம்பல கடவுங் கரைவாய்ப் பருதி
யூர்பாட் டெண்ணில் பைந்தலை துமியப்

பல்செருக் கடந்த கொல்களிற் றியானைக்
கோடுநரல் பௌவங் கலங்க வேலிட்
டுடைதிரைப் பரப்பிற் படுகட லோட்டிய
வெல்புகழ்க் குட்டுவற் கண்டோர்
செல்குவ மென்னார் பாடுபு பெயர்ந்தே.

இதுவுமது.

பெயர் - (அ) கரைவாய்ப்பருதி.

(க) இழையர் குழையர் மாலையராகிய (உ) மகளிரெனக் கூட்டுக.

௬. பிற ஒளியிற் றிறலுடைமையான், இவ்வொளிக்கு ஆகுபெய ரால் திறலென்றுபெயராயிற்று.

எ. இன்மகிழ்சுரத்தல் - இனியமகிழ்ச்சியைச் சுரத்தல். இதனாற்பயன் முற்கூறிய புறந்தருதலாகிய கொடையோடே இவர்களை மயக்கிய முகனமர்தலுமுடையனென்றவாறு.

அ. சுரம்பலவென்றது பகைவரொடு பொருங்களத்தில் தேர் செலுத்தற்கு அரிதாம்படி படையொடுவிலங்கும் அரியஇடங்கள் பலவற் றினுமென்றவாறு.



பருதியென்றது வட்டம்; அதனையுடைமையால், தேருருளை

பருதி

யெனப்பட்டது.

௯. ஊர்பாட்டு என்னில் பைந்தலை துமியவென்றது பைந்தலையைத் துமித்தற்கென்று சேனை வலியச்செலுத்துவதன்றி அப்பருதி தான் ஊர்கின்றபாடுதன்னிலே யானைசெய்கின்றபோர்க்கு அஞ்சி ஓடிமடிந்தாருடைய அளவிறந்த பைந்தலைதுமியவென்றவாறு.

இவ்வாறு பின்வந்த அடைச்சிறப்பான், இதற்கு 'களவாய்ப்பரதீ' என்று பெயராயிற்று.

௧௦. கடலோட்டியவென்றது தன்னுள்வாழ்வார்க்கு அரணாகிய கடல்வலியை அழித்தவென்றவாறு.

௧௩-௧௪. குட்டுவற்பாடிக்கண்டோர்பெயர்ந்து செல்குவமென்னா ரென மாறிக்கூட்டுக.

(௪) மகளிர் (௫) உழிஞைபாட (௭) மகிழ்சுரத்தலிற் (௧௩) குட்டுவற் (௧௪) பாடிக் (௧௩) கண்டோர் (௧௪) பெயர்ந்துசெல்குவ மென்னார்; நிற்க வெனக்கருதுவரென மாறிக்கூட்டி வினைமுடிவுசெய்க.

இதனாற்சொல்லியது, அவன்கொடைச்சிறப்புக் கூறியவாறாயிற்று.()

(௪௭.) அட்டா னானே குட்டுவ னடுதொறும்
பெற்றா னாரே பரிசிலர் களிறே
வரைமிசை யிழிதரு மருவியின் மாடத்து
வளிமுனை யவிர்வருங் கொடிநுடங்கு தெருவிற்

௫ சொரிசுடர் கவரு நெய்வழி புராலிற்
பாண்டில் விளக்குப் பரூஉச்சுட ரழல
நன்னுதல் விறலிய ராடுந்
தொன்னகர் வரைப்பினவ னுரையா னவே.

இதுவுமது.

பெயர் - (எ) நன்னுதல்விறலியர்.

(ச) தெருவின் (அ) தொன்னகரெனக் கூட்டுக.

௫. சொரி சுடர் கவரும் நெய்யென்றது நெய்யைச் சொரியும் உள் ளுப்புடையுண்டாயிருக்கின்ற திரிக்குழாய்தான் ஏற்றுக்கொண்ட நெய் யென்றவாறு.

சுடரென்றது திரிக்குழாய்க்கு ஆகுபெயர்.

௬. பாண்டில்விளக்கு - கால்விளக்கு.

௭. நன்னுதல்விறலியரென்றது தமது ஆடல்பாடற்கேற்ப நூலுட் சொல்லப்பட்ட அழகையுமுடையாரென்றவாறு.

## ௪௨ பதிற்றுப் பத்து.

அவ்வழகினை நுதன்மேலிட்டுக் கூறியவாற்றான், இதற்கு ' நன்னு தல்விறலியர் ' என்று பெயராயிற்று.

அ. தொன்னகர் - அரசுடைய பழையநகரிகள்.

(௫) நெய்வழிபு உராலிற் (௬) சுடரழல (எ) ஆடுமென்றதனாற் சொல்லியது, அந்நகரிகளது செல்வமுடைமை.

(க) குட்டுவன் அட்டு ஆனான்; அடுதொறும் (உ) பரிசிலர் களிறு பெற்று ஆனார்; (அ) தொன்னகர் வரைப்புக்களில் அவன்

உளா ஆறு வெனக்கூட்டி வினைமுடிவுசெய்க.

இதனாற்சொல்லியது, அவன் கொடையினையும் அக்கொடைக்கு வருவாயாகிய பகைவரைக்கோறலையும் உடன்கூறியவாறாயிற்று. (எ)

(சஅ.) பைம்பொற் றாமரை பாணர்ச் சூட்டி
யொண்ணுதல் விறலியர்க் காரம் பூட்டிக்
கெடலரும் பல்புகழ் நிலைஇ நீர்புக்குக்
கடலொ டுழந்த பனித்துறைப் பரதவ
வாண்டுநீர்ப் பெற்ற தார மீண்டியவர்
கொள்ளாப் பாடற் கெளிதினி னீயுங்
கல்லா வாய்மைய னிவனெனத் தத்தங்
கைவ லிளையர் நேர்கை நிரைப்ப
வணங்கிய சாயல் வணங்கா வாண்மை
முனைசுடு கனையெரி யெரித்தலிற் பெரிது
மிதழ்கவி னழிந்த மாலையொடு சாந்துபுலர்
பல்பொறி மார்பநின் பெயர்வா ழியரோ
நின்மலைப் பிறந்து நின்கடல் மண்டு
மலிபுன னிகழ்தருந் தீநீர் விழவிற்

கடு பொழில்வதி வேனிற் பேரெழில் வாழ்க்கை
மேவரு சுற்றமோ டுண்டினிது நுகருந்
தீம்புன லாய மாடுங்
காஞ்சியம் பெருந்துறை மணலினும் பலவே.

துறை - இயன்மொழிவாழ்த்து.

வண்ணமும் தூக்கும் அது.

பெயர் - (கடு) பேரெழில்வாழ்க்கை.

௬. நிலைஇயென்றது நிலைப்பித்தென்னும் பிறவினை.

## ஐந்தாம் பத்து.

௪௬

௪. கடலொடுழந்தவென்னும் ஒடு வேறுவினையொடு. 'பரதவ' என்றதனாற்சொல்லியது, அக் கடலின் உழத்தற்றொழிலொப்புமைபற்றி அக்கடற்றுறைவாழும் நுளையற்குப்பெயராகிய பரதவனென்னும்பெயரான் இழித்துக்கூறினான்போலக் குறிப்பான் உயர்த்து வென்றிகூறினானாகக் கொள்க.

இ - கூ. தாரத்தையெனவிரித்து (கூ) ஈயுமென்பதனொடுமுடித்து, ஈயுமென்னும்பெயரெச்சத்தினைக் (எ) கல்லாவாய்மையனென்னும் காரணப் பெயரொடுமுடித்து அப்பெயரை இக்கவிகூறுகின்றான் பிறர்கூற்றினைக் கொண்டுகூறுதற்கண்வந்த எனவொடுபுணர்த்துக் கடலுட்போர்செய்து அரிதிற்பெற்றபொருளை எளிதாக

மனங்கொள்ளாப்பாடலையுடைய தரம் போதாதார்க்குக்கொடுக்கும் பேதை இவனென இழித்துக் கூறற் கேற்பக் கைவலிளையர் அடைவே தத்தம் கையைச் சுட்டிநிலாக்கும்படி இரவல ரிடத்து வணங்கியமென்மையெனவுரைக்க. ஆண்டு நீர்ப்போந்துபெற்ற தாரத்தையென்றான், இக்கவிகூறுகின்றான் ; அவ்வுருபிற்குமுடிபாகிய ஈயு மென்றதுகூறுகின்றார் கைவலிளையர். அக்கைவலிளையர் கூறிற்றாக இக்கவி கூறுகின்றானுக்குக் கொண்டுகூட்டாகப் புகுந்தமையான், அவ்விரண்டாவதற்கு அவ்வீயுமென்னும்வினை முடிபாமெனக்கொள்க. இதற்குப்பிறவாறுங் கூறுப.

எ. கல்லாவாய்மையனென்றது கல்லாததன்மையை உண்மையாகவுடையனென்றவாறு.

கக. மாலையொடென்னும் ஒடு வேறுவினையொடு.

கக - கஉ. சாந்துபுலர்மார்பவெனக் கூட்டுக.

கசு. மலிபுனலையுடைமையின், யாறு மலிபுனலெனப்பட்டது. நிகழ்தருந்தீநீரென்றது அவ்வியாறுகளிலே புதிதாகவருகின்ற இனியபுதுநீரென்றவாறு.

க௭. பொழில் வதி வேனிற் பேரெழில் வாழ்க்கையென்றது வேனிற்காலத்து மனையில்வைகாது பொழில்களிலேவதியும் பெரிய செல்வ அழகையுடைய இல்வாழ்க்கையென்றவாறு.

வேனிற்பொழில்வதியென்க.

(க௭) வாழ்க்கையையுடைய (கஎ) ஆயமெனக்கூட்டுக.

இச்சிறப்பானே, இதற்கு 'பேரேழில்வாழ்க்கை' என்று பெயராயிற்று.

இனிப் பொழில் வயவேனிலென்பது பாடமாயின், பொழில்வயப்படு வத்தான பொருளுண்டாகிய வேனிலெனவுரைக்க.

௧௦

## எசு பதிற்றுப் பத்து.

௧௬. இனிதுநுகருமென்றது சுற்றத்தோடு உண்டலேயன்றிச் செல்வமுடையார் அச்செல்வத்தாற் கொள்ளும் பயன்களெல்லாம் கொள்ளுமென்றவாறு.

௧எ. புனலாயம் - புனலாடற்குவந்த திரள்.

(௮) பரதவ, (௯) வணங்கிய சாயலையும் வணங்கா ஆண்மையினையு முடைய (௧௧) சாந்துபுலர் (௧௨) மார்ப, நின்பெயர் (௧௬) பெருந்துறை மணலினும் பல (௧௨) வாழியரெனக்கூட்டி வினைமுடிவுசெய்க.

இதனாற்சொல்லியது, அவனை நீடுவாழ்கவென வாழ்த்தியவாறாயிற்று.

(௬) (௫௧.) யாமுஞ் சேறுக நீயிரும் வம்மின்
றுயலுங் கோதைத் துளங்கியல் விறலியர்
கொளைவல் வாழ்க்கைநங் கிளையினி துணீஇயர்

களிறுபரந் தியலக் கடுமா தாங்க
வொளிறுகொடி நுடங்கத் தேர்திரிந்து கொட்ப
வெஃகுதூரந் தெழுதருங் கைகவர் கடுந்தார்
வெல்போர் வேந்தரும் வேளிரு மொன்றுமொழிந்து
மொய்வளஞ் செருக்கி மொசிந்துவரு மோகூர் மொ
வலம்படு குழூஉநிலை யதிர மண்டி
நெய்த்தோர் தொட்ட செங்கை மறவர்
நிறம்படு குருதி நிலம்படர்ந் தோடி
மழைநாட் புனலி னவற்பரந் தொழுகப்
படுபிணம் பிறங்கப் பாழ்பல செய்து
படுகண் முரச நடுவட் சிலைப்ப
வளனற நிகழ்ந்து வாழுநர் பலர்படக்
கருஞ்சினை விறல்வேம் பறுத்த
பெருஞ்சினக் குட்டுவற் கண்டனம் வரற்கே.

துறை - விறலியாற்றுப்படை.

வண்ணமும் தூக்கும் அது.

பெயர் - (௧௦) செங்கைமறவர்.

௪. கடுமா தாங்கவென்றது கால்கடியகுதிரைமேலாட்கள் வேண்டிய அளவுகளிலே செலவை விலக்கிச்செலுத்தவென்றவாறு.

௫. திரிந்துகொட்பவென்றது மறிந்துதிரியவென்றவாறு.

௬. கைகவர்கடுந்தாரென்றது மாற்றார்படையில் வகுத்துநிறுத்தின கைகளைச் சென்றுகவரும் கடிய தூசிப்படையென்றவாறு.

கடுந்தாரையுடைய (௭) வேந்தரெனக்கூட்டுக.

௯. மொய்வளஞ்செருக்கியென்றது வலியாகியசெல்வத்தானே மயங்கியென்றவாறு.

மொய்யென்பது ஈண்டு வலி.

௧0. நெய்த்தோர் தொட்ட செங்கை மறவரென்றது பகைவருடலில் தாங்கள்எறிந்த வேல்முதலியகருவிகளைப் பறிக்கின்றகாலத்து அவருடைய உடலுகுகுருதியை அளைந்துசிவந்த கையையுடைய மறவரென்றவாறு.

இச்சிறப்பானே, இதற்கு, '**செங்கைமறவர்**' என்று பெயராயிற்று.

(௧0) மறவரது (௧௧) குருதியெனக்கூட்டுக.

(௬) குழூஉநிலை அதிரமண்டிக் (௧௧) குருதி (௧௨) ஒழுகப் (௧௩) பிணம்பிறங்கப் பாழ்பலசெய்து (௧௪) முரசம்நடுவட்சிலைப்ப (௧௫) வளனற நிகழ வாழுநர் பலர்பட (௧௬) விறல்வேர்பறுத்துவெனமுடிக்க.

௧௫. வளனறநிகழ்ந்தென்றது செல்வமானது அறுதிப்படியாகக் கொள்ளைநிகழவென்றவாறு.

நிகழவெனத்திரிக்க.

இனிவளனறவெனவும் நிகழ்ந்துவாழுநரெனவும் அறுத்து

நிகழ்தலை வாழ்வார்மேலேற்றி நிகழ்ந்துவாழ்தலென்றலுமாம்.

ஆண்டு நிகழ்தல் - விளக்கம்.

(கஎ) குட்டுவற்கண்டனம்வரற்கு (க) யாமும் சேறுகம்; (கூ) நும் கிளை இனிது உணீஇயர்; (உ) விறலியர், (க) நீயிரும் வம்மினெனக்கூட்டி வினைமுடிவுசெய்க.

இதனாற்சொல்லியது, அவன் வரையாவீகை கூறியவாறாயிற்று. (ரு)

(ருய.) மாமலை முழக்கின் மான்கணம் பனிப்பக்
கான்மயங்கு கதழுறை யாலியொடு சிதறிக்
கரும்பமல் கழனிய நாடுவளம் பொழிய
வளங்கெழு சிறப்பி னுலகம் புரைஇச்
செங்குணக் கொழுகுங் கலுழி மலிர்நிறைக்
காவிரி யன்றியும் பூவிரி புனலொரு
மூன்றுடன் கூடிய கூட லனையை
கொல்களிற், றுரவுத்திரை பிறழ வவ்வில் பிசிரப்
புரைதோல் வரைப்பி னெஃகுமீ னவிர்வர
விரவுப்பணை முழங்கொலி வெரீஇய வேந்தர்க்



காண மாகிய வெருவரு புனற்றார்

கன்மிசை யவ்வுங் கடலவும் பிறவு
மருப்ப மமைஇய வமர்கடந் திருத்த
வாண்மலி மருங்கி லுடைகப் படுத்து
நல்லிசை நனந்தலை யிரிய வொன்னா
ருருப்பற நிரப்பினை யாதலிற் சாந்துபுலர்பு
வண்ண நீவி வகைவனப் புற்ற
வரிஞிமி றிமிரு மார்புபிணி மகளிர்
விரிமென் கூந்தன் மெல்லணை வதிந்து
கொல்பிணி திருகிய மார்புகவர் முயக்கத்துப்
பொழுதுகொண் மரபின் மென்பிணி யவிழ
வெவ்வன்பல கழியுமோ பெரும பன்னாட்
பகைவெம் மையிற் பாசறை மரீஇப்
பாடரி தியைந்த சிறுதுயி லியலாது
கோடுமுழங் கிமிழிசை யெடுப்பும்
பீடுகெழு செல்வ மரீஇய கண்ணே.

துறை - வஞ்சித்துறைப் பாடாண்பாட்டு.
வண்ணம் - ஒழுகுவண்ணமும் சொற்சீர்வண்ணமும்.
தூக்கு - செந்தூக்கு.
பெயர் - (கக) வெருவருபுனற்றார்.

(க) மாமலைக்கண்ணே (உ) உறைசிதறியெனக்கூட்டி அதனைச் சிதற வெனத் திரிக்க.

க. உலகம் புரைஇயென்றது உலகத்தைப்

புரந்தென்றவாறு.

எ. மூன்றுடன் கூடிய கூடலென்றது அக்காவிரிதானும் ஆன்பொருநையும் * குடவனாறுமென இம்மூன்றும்சேரக்கூடிய கூட்டமென்றவாறு.

(கூ) காவிரி அணையையாவதேயன்றி (எ)மூன்றுடன்கூடிய கூட்டத் தனையை யெனக்கொள்க.

அ. உரவுத்திரைபிறழவென்றது வலியதிரைகள் தம்மில் மாறுபட்டுப் புடைபெயரவென்றவாறு.

அவ்வில் பிசிரவென்றது அவ்விற்கள் அத்திரைக்குப்பிசிராக வென்றவாறு.

பிசிரவென்றது பெயரடியாகப் பிறந்தவினை.

---

* குடவனென்றாற் போல்வதோர் யாறுமெனவும் பிரதிபேதமுண்டு.



(அ) பிறழவென்றது முதலாகநின்ற செயவெனெச்சங்களை (கக)நிரப்பினையென்னும் பிறவினையோடு முடிக்க.

கo. பணையாகிய முழங்கொலியென இருபெயரொட்டு.

(கo) ஒலியையுடைய (கக) புனலெனக் கூட்டுக.

கo. வெரீஇய வேந்தரென்றது தம்பகையை வெருவி

இவன்றன் னுடன் நட்பாகிய வேந்தரென்க.

கக. வெருவரு புனற்ருரென்றது தன்னை அடைத்தார் வெருவரத் தக்க புனற்ருரென்றவாறு.

இச்சிறப்பானே, இதற்கு 'வேருவருபுனற்றர்' என்றுபெயராயிற்று.

புனற்ருரென்றதனைத் தார்ப்புனலென்றவாருகக்கொள்க.

கரு. உருப்பென்றதனைச் சினத்தீயென்றவாருகக்கொள்க.

ஆதலினென ஏதுப்பொருட்கணின்ற ஐந்தாவதற்கு யான் நின்னை ஒன்றுகேட்கின்றேனென்று ஒருசொல்வருவிக்க.

(கசு) சாந்துபுலர (கஎ) வண்ணநீவவெனத்திரிக்க.

கஅ. மார்புபிணி மகளிரென்றது மார்பாற்பிணிக்கப்பட்டமகளி ரென்றவாறு.

கசு. வதிந்தென்னுமெச்சத்தினைப் (உக) பொழுதுகொளென்னும் வினையொடு முடிக்க.

(உ0) முயக்கத்துப் (உக) பொழுதுகொண்மரபின் மென்பிணியென்றது முயக்கத்திலே இராப்பொழுதைப் பயன்கொண்ட முறைமையினை யுடைய மெல்லிய உறக்கமென்றவாறு.

மென்பிணியென்றது புணர்ச்சியவதிக்கண் அப்புணர்ச்சியலையலான் வந்த சிறுதுயிலை; கண்ணைப் பூவென்னுநினைவினனய்ப் பிணியவிழவெனப் பூத்தொழிலாற்கூறினனென்க.

உஉ. நாள்பல எவன்கழியுமோவென நாளென்பது வருவிக்க.

பின்னின்ற பன்னளென்பதனைப் (உங)

பாசறைமரீஇயென்பத ஞேடுகூட்டுக. மரீஇயென்பதனை மருவவெனத்திரித்து மருவுகையாலென்க.

உச. பாடரிதியைந்த சிறுதுயிலென்றது இராப்பொழுதெல்லாம் பகைவரை வெல்கைக்கு உளத்திற்சென்ற சூழ்ச்சிமுடிவிலே அரிதாகப் படுதலியைந்த சிறுதுயிலென்றவாறு.

(உச) சிறுதுயிலையுடைய (உக) கண்ணெனக்கூட்டுக.

(உச) இயலாது (உரு) இசையெடுப்புமெனக்கூட்டுக.

உரு. இமிழிசையென்றது இமிழிசையையுடைய இயமரங்களை.

கோடு-சங்கு. முழங்கென்றது அவ்வியமரங்களுக்கு இடையிடையே முழங்குகின்றவென்றவாறு.

## எ அ பதிற்றுப் பத்து.

உக. பீடுகெழுசெல்வமென்றது படைச்செல்வம்; பீடு - வலி.

மரீஇயகண்ணென்றது அப்படைமுகத்திலே நாள்தோறும் அமர்ந்தும் துயிலெழுந்தும் உலவிப் பழகின கண்ணென்றவாறு.

(எ) நீகூடலனையை;(உஉ) பெரும, (கக) தார்ப்புனலே (கரு) ஒன்னார் (கக) உருப்பறநிரப்பினையாகையாலே, யான் நின்னை ஒன்று கேட்கின்றேன்; (உக)பீடுகெழுசெல்வம் மரீஇயகண் (உ0) முயக்கத்துப் (உக) பொழுதுகொண்மரபின் மென்பிணியவிழ (உஉ) நாள்பல நினக்கு எவன் கழியுமோவெனக்கூட்டி வினைமுடிவுசெய்க.

இதனைச்சொல்லியது, அவன்காமவேட்கையிற்
போர்வேட்கை மிகுத்துக்கூறியவாறாயிற்று.

(கக) தார்ப்புனலை (கரு) ஒன்னார் (கசு)
உருப்பறநிரப்பினையென
எடுத்துச்செலவினைமேலிட்டுக்கூறினமையால், துறை
வஞ்சித்துறைப்பாடாணாயிற்று.

அ. 'கொல்களிறு' என்பது கூன்.

(சo)

இதன்பதிகத்துக் கடவுட்பத்தினியென்றது, கண்ணகியை.
இடும்பிலென்றது இடும்பாதவனத்தை. புறம் - அவ்விடம்.
வாலிழைகழித்தபெண்டிரென்றது, அப்பழையன் பெண்டிரை.

கூந்தன்முரற்சியென்றது, அவர்கூந்தலை அரிந்துதிரித்த கயிற்றினை.

குஞ்சரவொழுகைபூட்டியது அப்பழையன் வேம்பினை ஏற்றிக்கொண்டுபோதற்கு.

குடிக்குரியோரென்றது அரசிற்குரியாரை.

(பதிகம்.)

வடவ ருட்கும் வான்றோய் வெல்கொடிக்
குடவர் கோமா னெடுஞ்சேர லாதற்குச்
சோழன் மணக்கிள்ளி யீன்ற மகன்
கடவுட் பத்தினிக் கற்கோள் வேண்டிக்
கானவில் கானங் கணையிற் போகி
யாரிய வண்ணலை வீட்டிப் பேரிசை

யின்ப லருவிக் கங்கை மண்ணி

யினந்தெரி பல்லான் கன்றொடு கொண்டு
மாறா வல்வி லிடும்பிற் புறத்திறுத்
துறுபுலி யன்ன வயவர் வீழச்

சிறுகுர னெய்தல் வியலூர் நூறி

யக்கரை நண்ணிக் கொடுகூ ரெறிந்து

## ஐந்தாம் பத்து.

௪௬

பழையன் காக்குங் கருஞ்சினை வேம்பின்
முரணை முழுமுத றுமியப் பண்ணி
வாலிழை கழித்த நறும்பல் பெண்டிர்
பல்லிருங் கூந்தன் முரற்சியாற் — கூயிறு
குஞ்சர வொழுகை பூட்டி வெந்திற
லாராச் செருவிற் சோழர்குடிக் குரியோ
ரொன்பதின்மர் வீழ வாயிற்புறத் திறுத்து
நிலைச் செருவி னாற்றலை யறுத்துக்
கெடலருந் தானையொடு
கடல்பிறக்கோட்டிய செங்குட்டுவனைக்

கர்ணமமைந்தகாசறு செய்யுட் பரணர் பாடினார் பத்துப்பாட்டு; அவைதாம்: சுடர்வீ வேங்கை, தசும்புதுளங்கிருக்கை, ஏறாவேணி, நோய்தபுநோன்றொடை, ஊன்றுவையடிசில், கலாவாய்ப்பருதி, நன்னுதல்விறலியர், பேரெழில்வாழ்க்கை, செங்கைமறவர், வெருவருபுனற்றார். இவை பாட்டின்பதிகம்.

பாடிப்பெற்றபரிசில்: உம்பற்காட்டுவாரியையும் தன்மகன் குட்டுவன்சேரலையுங் கொடுத்தான் அக்கோ.

கடல்பிறக்கோட்டிய செங்குட்டுவன் ஐம்பத்தையாண்டு வீற்றிருந்தான்.

ஐந்தாம்பத்து முற்றிற்று.



## ஆறாம்பத்து.



(ருக.) துளங்குநீர் வியலகங் கலங்கக் கால்பொர

விளங்கிரும் புணரி யுருமென முழங்குங்
கடல்சேர் கானற் குடபுல முன்னிக்
கூவற் றுழந்த தடந்தா ணாரை
குவியிணர் ஞாழன் மாச்சினைச் சேக்கும்
வண்டிறை கொண்ட தண்கடற் பரப்பி
னடும்பம லடைகரை யலவ னாடிய
வடுவடு நுண்ணயி ரூதை யுளற்றுந்
தூவிரும் போந்தைப் பொழிலணிப் பொலிதந்
தியலின ளொல்கின ளாடு மடமகள்
வெறியுறு நுடக்கம் போலத் தோன்றிப்
பெருமலை வயின்வயின் விலங்கு மருமணி
யரவழுங்கும் பெருந்தெய்வத்து
வளைஞரலும் பனிப்பௌவத்துக்
குணகுட கடலோ டாயிடை மணந்த
பந்த ரந்தரம் வேய்ந்து
வண்பிணி யவிழ்ந்த கண்போ னெய்த
னனையுறு நறவி னாடுடன் கமழச்
சுடர்நுதன் மடநோக்கின்
வாணகை யிலங்கெயிற்

றமிழ்துபொதி துவர்வா யசைநடை விறலியர்
பாடல் சான்று நீடினை யுறைதலின்
வெள்வே லண்ணன் மெல்லியன் போன்மென
வுள்ளுவர் கொல்லோநின் னுணரா தோரே
௨௯ மழைதவழும் பெருங்குன்றத்துச்
செயிருடைய வரவெறிந்து
கடுஞ்சினத்த மிடறபுக்கும்
பெருஞ்சினப்புய லேறனைய
தாங்குநர், தடக்கை யானைத் தொடிக்கோடு
துமிக்கு

## ஆறும் பத்து. 

௩௦ மெஃகுடை வலத்தர்நின் படைவழி வாழ்நர்
மறங்கெழு போர்நதை வெண்டோடு புனைந்து
நிறம்பெயர் கண்ணிப் பருந்தா றளப்பத்
தூக்கணை கிழித்த மாக்கட் டண்ணுமை
கைவ லிளையர் கையலை யழுங்க
௩௫ மாற்றருஞ் சீற்றத்து மாயிருங் கூற்றம்
வலைவிரித் தன்ன நோக்கலை
கடியையா னெடுந்தகை செருவகத் தானே.

துறை - வஞ்சித்துறைப்பாடாண்பாட்டு.

வண்ணம் - ஒழுகுவண்ணமும் சொற்சீர்வண்ணமும்.

தூக்கு - செந்தூக்கும் வஞ்சித்தூக்கும்.

பெயர் - (அ) வடுவடுநுண்ணயிர்.

௪. குடபுலமென்றது தன் நகரிக்கு மேல்பாலாம்.

(௫) மாச்சினைச்சேக்கும் (௯) பொழில், (௬) வண்டு இறைகொண்ட (௯) பொழில், (௭) அடைகரைப் (௯) பொழிலெனக்கூட்டுக.

௮. வடுவையடுதல் - வடுவைமாய்த்தல். ஊதை உளுற்றுதல் - அவ் வடுமாயும்படி நுண்ணிய அயிரை முகந்து தூவுதலிலே முயல்கை. அயிர் - நுண்மணல்.

வடுவைமாய்க்கும் நுண்ணயிரொனற்பாலதனை வடுவடு நுண்ணயி ரென்று கூறியசிறப்பானே, இதற்கு 'வடுவடுநுண்ணயிர்' என்று பெயரா யிற்று.

௯. பொழிற்கண் ஒப்பனையாற் பொலிவுபெற்றென்றவாறு.

௧௦. இயலுதல் - உலாவுதல். ஒல்குதல் - அசைதல்.

௧௧. வெறியுறுநுடக்கம் - இயல்பாக நுடங்கலன்றித் தெய்வமேறிய விகாரத்தால் நுடங்குதல்.

௧௩. அரவழங்குதல் - அரவாடுதல்.

௧௧ - ௧௩. வெறியுறுநுடக்கம்போல அரவழங்குமெனக் கூட்டுக.

(௧௩) அரவழங்கும் (௧௨) பெருமலைப் (௧௩) பெருந்தெய்வமென மாறிக்கூட்டுக.

கஉ. பெருமலை - இமயம்.

(கரு) குண குடகடலெனக் கிழக்கும் மேற்கும் எல்லை பின்கூறு கின்றமையான், (கச) வளைநரலும் பனிப்பௌவமென்றது தென்னெல்லை யாம்.

கக

## அஉ பதிற்றுப் பத்து.

(கூ) தெய்வத்துப் (கச) பௌவத்து என்னும்அத்துக்கள் ஈண்டுச் சாரியைப்பொருண்மையைச் செய்யாமையின், அசைநிலையெனப்படும்.

கரு. ஓடு - எண்ணொடு. ஆயிடையென்றது அவற்றின்நடுவென்றவாறு.

(கூ) பெருந்தெய்வம் (கச) பனிப்பௌவம் (கரு) குணகடல் குடகடலாகிய அவ்வெனக் கூட்டுக.

கரு. அவ்வென்னும் சுட்டுமுதல்வகாரவீற்றுப்பெயர் ஆயிடை யென முடிந்தது.

கரு - கசு. ஆயிடைமணந்த பந்தரென்றது ஆயிடையிலுள்ள அரசரும் பிறரும் சேவித்தற்குவந்துபொருந்தின பந்தரென்றவாறு.

ஆயிடையென்றது ஆயிடையிலுள்ளாரை.

கரு. பந்தரந்தரமென்றது பந்தரின் உள்வெளியை. வேய்தல் - வேய்ந்தாற்போல(க்க)நெய்தன்மாலைகளை நாற்றுதல். வேயவெனத் திரிக்க.

கஅ. நரவிநெடுவென ஓடுவிரிக்க.

உஉ. பாடல்சான்றென்பதனைச் சாலவெனத் திரிக்க.

உகூ. மெல்லியனென்றது ஐம்புலன்களிடத்தும் மனநெகிழ்ச்சியுடையனென்றவாறு.

(உள) கடுஞ்சினத்த (உகூ) அரவென மாறிக்கூட்டுக.

கூ0. படைவழிவாழ்நரென்றது படையிடமாகவாழும் படையாளரை.

(கூக) மறங்கெழு (கூஉ) கண்ணியெனக்கூட்டுக.

கூஉ. நிறம்பெயர்தல் - உதிரத்தால் நிறம்பெயர்தல். ஊறளத்தல் - உறுதற்கு ஆராய்தல்.

(கூச) கையலையழுங்கவென்னும் எழுவாயையும் பயனிலையையும் ஒருசொல்நீர்மைப்படுத்தித் (கூகூ) தண்ணுமையென்னுமெழுவாய்க்குப் பயனிலையாக்குக.

கூரு. நோக்கென்றது மாற்றார்படையைத் தப்பாமல் ஒன்றாகக் கொல்லக்கருதின நோக்கென்றவாறு.

(கூஉ) பருந்துறளப்பக் (கூச) கையலையழுங்கவெனநின்றசெயவெனெச்சங்களை (கூரு) நோக்கலையென்னும் முற்றுவினைக்குறிப்பொடுமுடிக்க.

நீ (கூ) குடபுலமுன்னிப் (கூ) போர்தைப்

பொழிலணிப்பொலிதந்து (கஎ)நெய்தல் (கஅ)நறவிஞெடுகெமழ (உக)விறலியரது (உஉ) பாடல்சாலப் புறத்துவினையின்மையின் விஞேதத்திலே நீடியுறைதலாலே, நீ அவ்வாறுநீடியதறியாது (உங). அண்ணல் மெல்லியன்போன்மென (உச) நின்னேஉணராதோர் உள்ளுவர்களோ; நீதான் (உரு) அரவோடொக்கு

## ஆறும் பத்து. அங

நின்பகைவரைக் கடுக அழிக்கவேண்டுநிலைமையில் அவ்வரவினைக் கடுக வழிக்கும் (உஅ) உருமேற்றினையொப்பை; அவ்வாறு விரையச்செய்யு நிலை மைக்கண் நினக்கேற்ப (க ௦) நின்படைவழிவாழ்நரும் காலாண்மேற்செல் லாது (உக) தாங்குநர் யானைக்கோடுதுமிக்கும் (௩ ௦) எஃகுடைவலத்தரா யிருப்பர்; அவ்வாறு நீ அழியாது மாறுபாடாற்றிப் பொருதழிக்கும்வழி (௩ உ) நின்முடிக்கண்ணியை உதிரம்தெறித்தலால் நிறம்பெயர்தலிற் பருந்து உறு தற்களப்ப நின்முன்னர்வழங்கும் (௩ ௩) மாக்கட்டண்ணுமை நின்னெதிர் நின்று மாற்ருரெய்தலையுடையஅம்பு கண்கிழித்தலால் (௩ச) ஒலியொழியக் (௩ரு) கூற்றம் (௩௬) வலைவிரித்தாற்போலக் களத்தில் எதிர்ந்த மாற்ருர் படையையெ ல்லாம் ஒன்ருகக்கொல்லக் கருதி நோக்கின நோக்கினை யுடையை; (௩எ) நெடுந்தகாய், இவ்வாறு செருவகத்துக் கடியையென வினைமுடிவுசெய்க.

இதனுற்சொல்லியது, அவன்விஞேதத்துமென்மையும்

செருவகத் துக்கடுமையும் உடன்கூறியவாறாயிற்று.

உகூ. தாங்குநர் தடக்கையானைத்

தொடிக்கோடு துமிக்குமென்று எ,கி ரூன்றினர்மேற்சேறல் கூறினமையான், இஃது எடுத்துச்செலவின்மேற் ருய் வஞ்சித்துறைப்பாடாணுயிற்று.

(க கூ ) ' அர வழங்கும்' என்பதுமுதலாக இரண்டுகுறளடியும், (கசு) 'பந்த ரந்தரம் வேய்ந்து' என ஒருசிந்தடியும், (க சு) 'சுடர்நுதல்' என்பது முதலாக இரண்டு குறளடியும், (உறு) 'மழைதவழும்' என்பதுமுதலாக நாலு குறளடியும் வந்தமையான், வஞ்சித்தூக்குமாயிற்று.

(உகூ) 'தாங்குநர்' என்பது கூன்.

(பி - ம்.) கஉ. விலங்குமட்டுமணி. கூடு. மாவருங்கூற்றம்.

கரு. அரவுவழங்கும். கூஎ. கடியைநெடுந்தகை
கூகூ. தூகணைகிழித்த. செருவத்தானே. (க)

(ருஉ.) கோடிநுடங்கு நிலைய கொல்களிறு மிடைந்து
வடிமணி நெடுந்தேர் வேறுபுலம் பரப்பி
யருங்கலந் தரீஇயர் நீர்மிசை நிவக்கும்
பெருங்கலி வங்கந் திசைதிரிந் தாங்கு
ரு மையணிந் தெழுதரு மாயிரும் பஃறோன்
மெய்புதை யரண மெண்ணு தெஃகுசுமந்து பூ....
முன்சமத் தெழுதரும் வன்க ணாடவர்
தொலையாத் தும்பை தெவ்வழி விளங்க

வியர்கிலே யுலக மெய்தினர் பலர்பட

## ௮௯ பதிற்றுப் பத்து.

நல்லமர்க் கடந்தநின் செல்லுறழ் தடக்கை
யிரப்போர்க்குக் கவித லல்லதை யிரைஇய
மலர்பறி யாவெனக் கேட்டிகு மினியே
சுடரும் பாண்டிற் றிருநாறு விளக்கத்து
முழாவிமிழ் துணங்கைக்குத் தழூஉப்புணை யாகச்
சிலைப்புவல் லேற்றிற் றலைக்கை தந்துநீ
நளிந்தனை வருத லுடன்றன ளாகி
யுயலுங் கோதை யூரலந் தித்தி
யீரிதழ் மழைக்கட் பேரிய லரிவை
யொள்ளித ழவிழகங் கடுக்குஞ் சீறடிப்
பல்சில கிண்கிணி சிறுபர டலைப்பக்
கொல்புனற் றளிரி னடுங்குவ ணின்றுநின்
னெறிய ரோக்கிய சிறுசெங் குவளை
யீயென விரப்பவு மொல்லா ணீயெமக்
கியாரை யோவெனப் பெயர்வோள் கையதை
கதுமென வுருத்த நோக்கமொ டதுநீ

பாஅல் வல்லா யாயினே பாஅல்
யாங்குவல் லினையோ வாழ்கநின் கண்ணி
யகலிரு விசும்பிற் பகலிடந் தரீஇயர்
தெறுகதிர் திகழ்தரு முருகெழு ஞாயிற்
௩௦ றுருபுகிளர் வண்ணங் கொண்ட
வான்றோய் வெண்குடை வேந்தர்தம் மெயிலே.

துறை - தானைநிலை.
வண்ணம் - ஒழுகுவண்ணம்.
தூக்கு - செந்தூக்கு.
பெயர் - (உஉ) சிறுசெங்குவளை.

(௪) வங்கம் திசைதிரிந்தாங்குக் (௧) கொல்களிறுமிடைந்தென மாறிக் கூட்டுக.

௧௧. திருநாறுவிளக்கென்றது செல்வமுடைமையெல்லாம் தோன்றும்விளக்கு.

௧௬. நளிதல் - தன்னைச் சேவிக்குமகளிரொடு குரவையாடிச்செறிதல்.

## ஆறாம் பத்து. அடு

௧௭. ஊரலந்தித்தி - ஊரலையுடைய தித்தி; அம்முச் சாரியை.

௧௮. ஈரிதழ் - குளிர்ந்த இமை.

கசு. அவிழகமென்றது அவிழ்ந்தபூவினை.

உஉ. தான் அவனை எறிதற்குஓக்கிய சிறியதொருசெங்குவளையெனச் சிறுமையால் அவள்மென்மைகூறியசிறப்பான், இதற்கு, '**சிறுசெங்குவளை**' என்று பெயராயிற்று.

(உக) இரப்பவென்னும் செயவெனெச்சத்தினைக் (உச) கையதை யென்னும் முற்றுவினைக்குறிப்பொடுமுடிக்க.

(உஉ) சிறுசெங்குவளை (உச) பெயர்வோள்கையதையென முற்றாக அறுத்து (உரு) அதுவெனப் பின்சுட்டிற்றாக்குக.

உஅ. பகலிடம் - பகற்பொழுது.

௩0. உருபுகிளர்வண்ணம் - நிறம்விளங்கினதன்மை.

(௩0) வண்ணங்கொண்ட (௩க) வேந்தரெனக்கூட்டி ஞாயிறுபோலக் கோபித்து எதிர்நின்றவேந்தரென உரைக்க.

(க0) நல்லமர்க்கடந்த நின்றடக்கை (கக) இரப்போர்க்குக் கவித லல்லதை இறைஇய (கஉ) மலர்பறியாவெனக்கேட்டிகும் ; இனி, (கச) துணங்கைக்குத் (கரு) தலைக்கைதந்துநீ (கசு) நளிந்தனைவருதல் உடன்றனளாகி (கஅ) நின்னரிவை (உக) நின் (உஉ) எறியர்ஓக்கிய சிறுசெங்குவளையானது (உரு) நீ (உசு) ஈயென்று இழிந்தோன்கூற்றான்இரப்பவும் நினக்குஈந்து போகாது நின்இரப்பிற்கு ஒல்லாளாய் நீ எமக்கு (உச) யாதொன்றுபெயர் வோள்கையதாயிருந்தது; அவ்வாறு இரந்துநீபெறாது (உரு) அவளை உருத்த நோக்கமொடு அதை அவள்பானின்றும் (உசு) பகுத்துக்கொள்ளமாட்டாயாயினை ; அவ்வாறு அது பகுக்கமாட்டாதநீ (௩க) வேந்தர்களெயிலைப் (உசு) பகுத்துக்கோடல் (உஎ) யாங்குவல்லையாயினை ; நின்கண்ணிவாழ்க

வெனமாறி வினைமுடிவுசெய்க.

(உசு) பாஅல் (உஎ) யாங்குவல்லுநையோவென்றதன்முன் (கக) எயிலென்பது கூட்டவேண்டுதலின், மாறாயிற்று.

இதனாற்சொல்லியது, அவன் கைவண்மையொடும் வென்றியொடும் படுத்து அவன் காமவின்பச்சிறப்புக் கூறியவாறாயிற்று.

இப்பாட்டு துணங்கையாடுதல்காரணமாகப்பிறந்த ஊடற்பொருட் டாகையாற் குரவைநிலையென்றவாறாயிற்று.

(பி - ம்.) சு. என்றது. உ௦. பல்செங். கஅ. பேரிலரிவை. உஉ. எறியரோச்சிய. உ௦. பல்செல். உஎ. வல்லுநையோ, (உ)

## அசு பதிற்றுப் பத்து.

(ருசு.) வென்றுகலந் தரீஇயர் வேண்டுபுலத் திறுத்தவர்
வாடா யாணர் நாடுதிறை கொடுப்ப
நல்கினை யாகுமதி யெம்மென் றருளிக்
கல்பிறங்கு வைப்பிற் கடறரை யாத்தநின்
ரு றொல்புகழ் மூதூர்ச் செல்குவை யாயிற்
செம்பொறிச் சிலம்பொ டணித்தழை தூங்கு
மெந்திரத் தகைப்பி னம்புடை வாயிற்
கோள்வன் முதலைய குண்டுகண் ணகழி
வானுற வோங்கிய வளைந்துசெய் புரிசை

பொருநத் தெவ்வர் முனைகெட விலங்கி
நின்னிற் றந்த மன்னெயி லல்லது
முன்னும் பின்னுநின் முன்னோ ரோம்பிய
வெயின்முகப் படுத்தல் யாவது வளையினும்
பிறிதாறு சென்மதி சினங்கெழு குருசி
லெழூஉப்புறந் தரீஇப் பொன்பிணிப் பலகைக்
குழூஉநிலைப் புதவிற் கதவுமெய் காணிற்
றேம்பாய் கடாத்தொடு காழ்கை நீவி
வேங்கை வென்ற பொறிகிளர் புகர்நுதல்
லேந்துகை சுருட்டித் தோட்டி நீவி
மேம்படு வெல்கொடி நுடங்கத்
தாங்க லாகா வாங்குநின் களிறே.

**துறை - சேந்துறைப்பாடாண்பாட்டு.**

**வண்ணமும் தூக்கும் அது.**

**பெயர் - (அ) துஞ்சேண்ணகழி.**

க. அவரென்றது அவ்வாறு இறக்கும்படி நின்னொடு எதிர்ந்த அரசரென்றவாறு.

உ. நாடுஇறைகொடுப்பவென்றது நாட்டைத் இறைகொடுப்ப வென்றவாறு.

இறைதரவென்றதற்குத் இறைகொடுப்பவென்றது இடவழுவமைதி.

(௩) நல்கினையாகுமதி எம்மென்று (உ)

இறைகொடுப்பவெனக் கூட்டுக.

௪. ஞவப்பு - இடம். கடற்றையென இரண்டாவதுவிரிக்க,

## ஆறும் பத்து. அஎ

௬. சிலம்பும் தழையும்(௬) புரிசைக்கண் தங்கினவென்றது ஈண்டுப் பொருவீருளீரேல் நும்காலிற்கழலினையும் அரையிற் போர்க்குரிய உடை யினையுமொழித்து இச்சிலம்பினையும் தழையினையும் அணிமினென அவ ளைப் பெண்பாலாக இகழ்ந்தவாறென்க.

இனி, அவற்றை அம்மதிலில்வாழும் வெற்றிமடந்தைக்கு அணி யென்பாருமுளர்.

அ. கோள்வன்முதலையவென்றுமுன்வந்த அடைச்சிறப்பான், இத ற்கு 'துஞ்சுகேண்ணகழி' என்று பெயராயிற்று.

௬. வளைந்துசெய்புரிசையென்பதனை வளையச்செய் புரிசையெனத் திரித்துக் காலவழுவமைதியாகக் கொள்க.

(௬) வளைந்துசெய்புரிசையாகிய (கக) நின்னிற்றந்தமன்னெயிலென இருபெயரொட்டு.

கக. நின்னிற்றந்த மன்னெயிலென்றது நின்னாற்கொண்டு பிறர்க்குக் கொடுக்கப்பட்ட மன்னெயிலென்றவாறு.

கொடுத்தவென்பதற்குத் தந்தவென்பது இடவழுவமைதி. கொடு த்தவெனவே கொண்டுகொடுத்தவெனக் கோடலென்பது போந்தபொரு ளாய் விளங்கிற்று. தரப்பட்டவென்பதனைத் தந்தவெனச் செயப்படுபொரு ளைச் செய்ததுபோலச்

சொல்விற்றாக்குக. மன்னெயிலல்லதென்புழி மன்னெயிற்கண்ணென ஏழாவது விரித்து அதனைப் பின்வருகின்ற (கக) எயின் முகப்படுத்தலென்பதிடமாகப் படுத்தலென்பதோர்சொல்வருவித்து அத னொடுமுடிக்க.

கஉ. முன்னும்பின்னுமென்றது முன்னோர் தாங்கள் இறப்பதற்கு முன்னும் இறந்ததற்குப்பின்னுமென்றவாறு.

பின்னோம்புதலாவது முன்னோர் தமக்குப்பின்னும் இவ்வரசாள்வா ரும் நம் மைப்போல இவ்வாறு ஓம்புகவென நியமித்துவைத்தல்.

கக. யாவதென்றது அஃது என்னகாரியம், நினக்குத் தகுவதொன் றன்றென்றவாறு.

கசு. குழூஉநிலைப்புதவென்றது பலநிலமாகச்செய்த கோபுரவாயி லென்றவாறு.

கஎ. தேமென்றது தேனீ. கடாம் - மதில்கண் டழிப் போர்வேட் கையாற்பிறக்கும் மதம்.

(க) நீ வேண்டுபுலத்திறுத்து அவர் (உ) திறைகொடுப்ப (ங) அருளி (ச) நின் (ரு) மூதூர்ச்செல்குவையாயின், (கச) குருசில், (கங) வினையினும் (கச) பிறிதாறுசெல்; செல்லுதற்கு யாதுகாரணமெனின், (கசு) புதவிற்கதவு மெய்காணின், (உக) ஆங்கு நின்களிறு தாங்கலாகா ; தாங்கவேண்டுவேதேல், [illegible] பதிற்றுப் பத்து.

(கக) நின்னிற்றந்த எயின்முகத்துப் படுத்துவதல்லது (கஉ) நின்முன்னோ ரோம்பிய (கங) எயின்முகத்துப்படுத்தல் யாவதென மாறிக்கூட்டி வினை முடிவுசெய்க.

(ரு) 'செல்குவையாயின்' என்பதன்பின் (கச) 'பிறிதாறுசென்மதி' என்பதனையும், (உக) 'தாங்க லாகா வாங்குநின் களிறு' என்பதன்பின் (கூ) 'எயின்முகப்படுத்தல்யாவது' என்பதனையும் கூட்டவேண்டுதலின், மாறாயிற்று.

இதனாற்சொல்லியது, அடைந்தவர்க்கு அருளலொடுபடுத்து அவன் வென்றிச்சிறப்புக் கூறியவாறாயிற்று.

(பி - ம்.) ௪. கடறனையார்த்த. ௧௭. காழகநீவி.
௬. செம்பொற்சிலம்பு. (கூ)

(ருச.) வள்ளியை யென்றலிற் காண்குவந் திசினே
யுள்ளிய துமுடித்தி வாழ்கநின் கண்ணி
வீங்கிறைத் தடைஇய வமைமருள் பணைத்தோ
ளேந்தெழின் மழைக்கண் வனைந்துவர லிளமுலைப்
பூந்துகி லல்குற் றேம்பாய் [illegible]ன்
மின்னிழை விறலியர் [illegible]ன்மறம் பாட
விரவலர் புன்[illegible] டீர நாடொறு
முனை[illegible]ன்கல[illegible]ரவில வீசி
[illegible]யை யாது[illegible] மாறே யெனையதூஉ
முயர்[illegible]யுலகத்துச் செல்லா திவணின்
[illegible]றில மருங்கி னெடிதுமன் னியரோ
நிலந்தப விடூஉ மேணிப் புலம்படர்ந்து
படுகண் முரச நடுவட் சிலைப்பத்

தேர்மர வலத்தர் நாமஞ் செய்ம்மா
கறு ரேவல் வியங்கொண் டிளையரொ டெழுதரு
மொல்லார் யானை காணி
னில்லாத் தானை யிறைகிழ வோயே.

துறை - காட்சிவாழ்த்து.
வண்ணமும் தூக்கும் அது.
பெயர் - (கள) நில்லாத்தானை.

க. வள்ளியனென்பதற்கு வள்ளியையென்றது இடவழுவமைதி.

உ. உள்ளியதுமுடித்தியென்றது யான் நினைத்துவந்த காரியத்தை முடியென்றவாறு.

## ஆறும் பத்து.

அ/க்க

முடித்தியென்றது ஈண்டுமுன்னிலையேவல்வினை.

ரு. தடைஇய அமை - பெருத்தமூங்கில்.

(சா) நின்மறம்பாட (அ) வீசியெனக்கூட்டி, நின்மறம்பாடாநிற்க அதனைக் கேட்டிருந்து வீசியெனவுரைக்க.

(அ) வீசியென்னும்வினையெச்சத்தினை (கூ) ஆகலென்னும்தொழிற் பெயரொடு முடிக்க.

கூ. அனையையாகன்மாறேயென்றது அவ்வீசுதற்கேற்ற

அத்தன்மை யையுடையையாகையானென்றவாறு.

மாறென்பது

ஆனென்னும்உருபின்பொருள்படுவதோரிடைச்சொல்.

அத்தன்மையாவது இன்முகமும் இன்சொல்லுமுதலாயின.

எனைய தூஉமென்றது சிறிதுகாலமுமென்றவாறு; உம்மை

நெடுங் காலமேயன்றிச் சிறிதுகாலமுமென எச்சவும்மை.

கஉ. நிலந்தப இடேஉம் ஏணிப்புலமென்றது

நிலவகலங்குறைபட இட்ட எல்லையையுடைய பாசறையென்றவாறு.

என்றது மாற்றூர்பாசறையை.

(கக) முரசம் நடுவட் (கஉ) படர்ந்து (கக) சிலைப்பவெனக்

கூட்டி. முரசம் பாசறைநடுவே தான் நின்று தன்னொலி பாச

றையெங்கும் படர்ந்து கொண்டு படையை

ஏவியொலிப்பவெனவுரைக்க.

கச. தோமரம் - தண்டாயுதம். வலத்தரென்றது

வினையெச்ச வினைக்குறிப்புமுற்று.

(கச) நாமஞ்செய்ம்மார் (கரு) இளையரொடெழூதரும் (கசு)

ஒல்லா ரெனக்கூட்டுக.

கரு. ஏவல்வியங்கொண்டென்றது இளையரை முன்பு

போர்க்குக் கையும் அணியும்வகுப்புழி ஏவித் தாமும் ஏவல்களைச்

செய்துகொண்டென்ற

வாறு.

ஏவலையுடைய வியமென இரண்டாவதுவிரிக்க. வியம் -

ஏவல்.

(கசு) யானைகாணின் (கஎ) நில்லாத்தானையென்றது காலாள்முதலா யினவற்றைத் தரமல்லவென்றுகழித்துநின்று யானைகாணின் நில்லாது செல்லும் தானையென்றவாறு.

இச்சிறப்பானே, இதற்கு 'நில்லாத்தானை' என்று பெயராயிற்று.

கஎ. இறைகிழவோயென்றது இறைவனுதற்றன்மையையுடையா யென்றவாறு.

(கஎ) இறைகிழவோய், நின்னை (க)வள்ளியனென்று யாவரும் கூறுத லானே நின்னைக் காண்பேன்வந்தேன்; (உ) யான் உள்ளியதனை நீமுடிப்பா யாகவேண்டும்; நின்கண்ணிவாழ்வதாக; (சு) விறலியர் நின்மறம்பாட (எ)

கஉ

கூ0 பதிற்றுப் பத்து.

இரவலர்புன்கண்டீரும்படி (அ) நன்கலங்களை வளைவிலவீசி (கூ) அத்தன் மையையாகையாலே, என்போலும் இரவலரது ஆக்கத்தின்பொருட்டுச் சிறிதுகாலமும் (க0) இவ்வுலகத்திலேநின்று உயர்நிலையுலகத்திற்செல்லாதே (கக) இவ்விருநிலமருங்கிலே நெடுங்காலம் நிலைபெறுவாயாகவெனக் கூட்டி வினைமுடிவுசெய்க.

இதனாற்சொல்லியது, அவன் கொடைச்சிறப்பும் தன்குறையுங்கூறி வாழ்த்தியவாறாயிற்று.

(பி - ம்.) ௧. வீங்கறை. ௮. வரைவிலை.

(௪) (௫௫.) ஆன்றோள் கணவ சான்றோர் புரவல
நின்னயந்து வந்தனெ னடுபோர்க் கொற்றவ
இன்னிசைப் புணரி யிரங்கும் பௌவத்து
நன்கல வெறுக்கை துஞ்சும் பந்தர்க்
கமழுந் தாழைக் கானலம் பெருந்துறைத்
தண்கடற் படப்பை நன்னாட்டுப் பொருந
செவ்வூன் றோன்றா வெண்டுவை முதிரை
வாலூன் வல்சி மழவர் மெய்ம்மறை ; பதிற்-21.
குடவர் கோவே கொடித்தே ரண்ணல்
வாரா ராயினு மிரவலர் வேண்டித்
தேரிற் றந்தவர்க் கார்பத னல்கு
நகைசால் வாய்மொழி யிசைசா றோன்றல்
வேண்டுவ வளவையுள் யாண்டுபல கழியப்
பெய்துபுறந் தந்து பொங்க லாடி
விண்டுச் சேர்ந்த வெண்மழை போலச்
சென்றா லியரோ பெரும வல்கலு செல்க
நனந்தலை வேந்தர் தாரழிந் தலற
நீடுவரை யடுக்கத்த நாடுகைக் கொண்டு
பொருது சினந்தணிந்த செருப்புக லாண்மைத்
தாங்குநர்த் தகைத்த வொள்வா

ளோங்க துள்ளத்துக் குருசினின் றளே.

துறை - சேர்துறைப்பாடாண்பாட்டு.

வண்ணமும் தூக்கும் அது.

பெயர் - (ச) துஞ்சும்பந்தர்.



(க) பௌவத்து (ச) நன்கலவெறுக்கையென்றது பௌவத்திலே வந்த நன்கலமாகிய செல்வமென்றவாறு.

ச. பந்தர் - பண்டசாலைகள்.

நன்கலவெறுக்கை துஞ்சுமென்றசிறப்பானே, இதற்கு 'துஞ்சும் பந்தர்' என்று பெயராயிற்று.

எ. செவ்வூன்றோன்று வெண்டுவையென்றது அரைத்துக்கரைத்த மையால் தன்னிற்புக்க செவ்வூன்தோன்றுத வெள்ளிய துவையென்றவாறு.

முதிரையென்றது அவரை துவரைமுதலாயினவற்றை.

அ. வாலூனென்றது வெண்ணிண ஊனென்றவாறு.

வல்சிமழவரென்றது தம் செல்வச்செருக்கானே சோறுண்பது பெரி தன்றி முன்பு எண்ணப்பட்டவற்றையே உணவாகவுடைய வீரரென்றவாறு.

க0. இரவலரையென்னும் இரண்டாவது விகாரத்தால் தொக்கது ; இரவலரைவேண்டியென்றது தன்னாட்டு இரவலரின்மையின், அவரைப் பெறவிரும்பியென்றவாறு.

கக. தேரிற்றங்தென்றது அவ்விரவலருக்கு அவருள்வழித் தேரைப் போகவிட்டு அதிலே அவர்களை வரப்பண்ணியென்றவாறு.

தேரானென உருபுவிரிக்க ; தேரானத் தேர்ச்சியாக்கி, அவ்விர வலரை அவருள்ளவிடத்தில் தேடிஅழைத்தென்றுமாம்.

க ச. பொங்கலாடியென்றது எஃகின பஞ்சுபோல வெளுத்துப் பொங்கியெழுதலைச் செய்தென்றவாறு.

(கரு) வெண்மழைபோலாச் (கசு) சென்றுலியரென்றது அம்மழை பெய்துபுறந்தருங் கூற்றையொத்து அது பெய்துவெண்மழையாகக் கழியுங் கூற்றை ஒவ்வாது ஒழிகவென்றவாறு.

கஅ. நீடுவரையடுக்கமென விரிக்க ; அடுக்கம் - ஈண்டு அடுக்குதல்.

(கசு)

அல்கலும்(கஅ)நாடுகைக்கொண்டு(கஎ)வேந்தர் தாரழிந்துஅல றப் (க கூ) பொருது சினந்தணிந்த செருப்புகலாண்மையென மாறிக்கூட்டுக.

(க கூ) ஆண்மையினையும் (உ0) வாளினையும் (உக) உள்ளத்தினையு முடைய குருசிலென்க.

கரு. மழையை அவன்றன்னோடு உவமியாது அவன்(உக)நாளோடு உவமித்தது, அவனோடு அவன் நாளுக்குள்ள ஒற்றுமைபற்றியென்க.

(க) ஆன்றோள்கணவ, சான்றோர்புரவல, (உ) நின்னயந்து வந்த

னென் ; கொற்றவ, (௬) பொருந, (அ) மழவர்மெய்ம்மறை, (கூ) கோவே,

அண்ணல், (கஉ) தோன்றல், (கஙா) பெரும, (உக) குருசில், நின்னுள் (கரு)
வெண்மழைபோலாச் (கசு) சென்றுலியரோவென மாறிக்கூட்டி வினை
முடிவுசெய்க.

## கூஉ பதிற்றுப் பத்து.

பெரும, குருசிலென்னும் விளிகள் முன்னின்றவிளிகளோடு கூட்ட வேண்டுதலின், மாறாயிற்று.

இதனாற் சொல்லியது, அவன் உலகுபுரத்தலும் தன்குறையுங்கூறி வாழ்த்தியவாறாயிற்று.

(பி - ம்.) கரு. மழைபோலச். கசு. பொருதுமுரண்செருக்கிய.

கஅ. நெடுவரை. (ரு)

(ருசு.) விழவுவீற் றிருந்த வியலு ளாங்கட்
கோடியர் முழவின் முன்ன ராடல்
வல்லா னல்லன் வாழ்கவவன் கண்ணி
வலம்படு முரசந் துவைப்ப வாளுயர்த்
ரு இலங்கும் பூணன் பொலங்கொடி யுழிஞையன்
மடம்பெரு மையி னுடன்றுமேல் வந்த
வேந்துமெய்ம் மறந்த வாழ்ச்சி

வீர்துகு போர்க்களத் தாடுங் கோவே.

துறை - ஒள்வாளமலே.

வண்ணமும் தூக்கும் அது.

பெயர்- (எ) வேந்துமேய்ம்மறந்த வாழ்ச்சி.

ரு. பூணன் உழிஞையனென்பன வினைக்குறிப்புமுற்று.

எ. வேந்துமெய்ம்மறந்த வாழ்ச்சியென்றது மாற்றுவேந்தர் அஞ்சித் தங்கள் மெய்யைமறந்த வாழ்வென்றவாறு.

வாழ்ச்சி, மெய்ம்மறத்தல் காரணமாக அதன் காரியமாய் வந்ததாக

லான், மெய்ம்மறந்தவென்னும் பெயரெச்சம் நிலைமுதற்பெயர் ஆறுமன்றிக் காரியப்பெயரென வேறோர்பெயர்கொண்டதெனப்படும். வாழ்வு-வெற்றிச்

செல்வம்.

இச்சிறப்பானே, இதற்கு 'வேந்துமேய்ம்மறந்த வாழ்ச்சி' என்று பெயராயிற்று.

(எ) வாழ்ச்சிக் (ஃ) களமெனக் கூட்டுக.

(௪) முரசம் துவைப்ப வாளுயர்த்து (ரு) இலங்கும் பூணனுய்ப் பொலங்கொடி உழிஞையனுய்ப் (௬) போர்க்களத்து ஆடும்கோ (க) விய அளாங்கட் (உ) கோடியர்முழவின்முன்னர் ஆடல் (௩) வல்லானல்லன்; அவன்கண்ணி வாழ்கவென மாறிக்கூட்டி வினைமுடிவுசெய்க.

'வல்லானல்லன்' என்பதன்முன் கோவென்பது கூட்டவேண்டுத லின், மாறுயிற்று.

இதனாற் சொல்லியது, அவன் வென்றிச்சிறப்புக்
கூறியவாறாயிற்று.

## ஆறாம் பத்து. 

(ருஎ.) ஓடாப் பூட்கை மறவர் மிடறப
விரும்பனம் புடையலொடு வான்கழல் சிவப்பக்
குருதி பனிற்றும் புலவுக்களத் தோனே
துணங்கை யாடிய வலம்படு கோமான்
மெல்லிய வகுந்திற் சீறடி யொதுங்கிச்
செல்லா மோதில் சில்வளை விறலி
பாணர் கையது பணிதொடை நரம்பின்
விரல்கவர் பேரியாழ் பாலை பண்ணிக்
குரல்புணர் ரின்னிசைத் தழிஞ்சி பாடி
யிளந்துணைப் புதல்வர் நல்வளம் பயந்த
வளங்கெழு குடைச்சூ லடங்கிய கொள்கை
யான்ற வறிவிற் றோன்றிய நல்லிசை
யொண்ணுதன் மகளிர் துனித்த கண்ணினு
மிரவலர் புன்க ணஞ்சும்
புரவெதிர் கொள்வனைக் கண்டனம் வரற்கே.

துறை - விறலியாற்றுப்படை.

வண்ணமும் தூக்கும் அது.

பெயர் - (௬) சில்வளைவிறலி.

(௧) மறவர்மிடறபக் (௩) களத்தோனெனக் கூட்டுக.

௩. பனிற்றுதல் - தூவுதல்; பனிற்றுவது புண்பட்டவீரருடலெனக்கொள்க. களமென்றது ஈண்டுக் களத்தையணைந்த பாசறையினை.

௫. வருத்து - வழி.

௬. சில்வளைவிறலியென்றது பல்வளையிடுவது பெதும்பைப் பருவத்தாகலின், அஃதன்றிச் சில்வளையிடும் பருவத்தாளென அவள் ஆடல் முதலிய துறைக்குரியளாதல் கூறியவாறு.

இச்சிறப்பானே, இதற்கு 'சில்வளைவிறலி' என்று பெயராயிற்று.

௭. விரல்கவர்யாழென்றதனாற்பயன் வாசித்துக் கைவந்த யாழென்றவாறு.

௯. தழிஞ்சி - தழிஞ்சியென்னுந் துறைப்பொருண்மேல் தந்தபாடல். தழிஞ்சியைக் குரல்புணரின்னிசையிலே பாடியெனக்கொள்க.

௧௦. புதல்வராகிய நல்வளமென இருபெயரொட்டு.

௧௧. குடைச்சூல் - சிலம்பு.

(௬) சில்வளைவிறலி, (௧௫) புரவெதிர்கொள்வனைத் (௯) தழிஞ்சிபாடிக் (௧௫) கண்டனம்வரற்குச் (௬) செல்லாமோ; (௧௫) அப்புரவெதிர்கொள் வனுகிய (௪) வலம்படுகோமான் இதுபொழுது தான் அவ்வெதிர்கோடற் கேற்ப வருவாயினையுடைய (௯) புலவுக்களத்தோன்காணென மாறிக்கூட்டி வினைமுடிவுசெய்க.

(௧௫) வரற்குச் (௬) செல்லாமோவெனக் கூட்டவேண்டுதலின், மாறாயிற்று.

இதனாற்சொல்லியது, அவன்வென்றிச்சிறப்போடு அவன்கொடைச்சிறப்பும் உடன்கூறியவாறாயிற்று.

(பி - ம்.) ௯. புலக்களத்தோனே. ௧௯. துணித்த. ௧௧. குடச்சூல்.

(எ) (ரூபு.) ஆடுக விறலியர் பாடுக பரிசிலர்
வெண்டோட் டசைத்த வொண்பூங் குவளையர்
வாண்முகம் பொறித்த மாண்வரி யாக்கையர்
செல்லுறழ் மறவர்தங் கொல்படைத் தரீஇய
௫ ரின்றினிது நுகர்ந்தன மாயி னாளை
மண்புனை யிஞ்சி மதில்கடந் தல்ல
துண்குவ மல்லேம் புகர்வெனக் கூறிக்
கண்ணி கண்ணிய வயவர் பெருமகன்
பொய்படு பறியா வயங்குசெந் நாவின்

னெயிலெறி வல்வி லேவிளங்கு தடக்கை
யேந்தெழி லாகத்துச் சான்றோர் மெய்ம்மறை
வான வரம்ப னென்ப கானத்துக்
கறங்கிசைச் சிதடி பொரியரைப் பொருந்திய
சிறியிலை வேலம் பெரிய தோன்றும்
புன்புலம் வித்தும் வன்கை வினைஞர்
சீருடைப் பல்பக டொலிப்பப் பூட்டி
நாஞ்சி லாடிய கொழுவழி மருங்கி
லலங்குகதிர்த் திருமணி பெறூஉ
மகன்கண் வைப்பி னாடுகிழ வோனே.

துறை - செந்துறைப்பாடாண் பாட்டு.

வண்ணமும் தூக்கும் அது.

பெயர் - (௧௦) ஏவிளங்குதடக்கை.

## ஆறாம் பத்து. ௬௫

௨. வெண்டோடு - பனந்தோடு ; தோட்டின்கண்ணென விரிக்க. அசைத்தல் - தங்குவித்தல்.

௩. வாண்முகம் - வாள்வாய்.

(௨) குவளையரென்றது வினையெச்சவினைக்குறிப்புமுற்று; அதனைக் (எ) கூறியென்பதனொடுமுடிக்க.

(௩) யாக்கையராகிய (௪) மறவரென இருபெயரொட்டு.

அ. கண்ணிகண்ணுதல் - தாங்கள்சூடிய போர்க்கண்ணிக்கு ஏற்ப வினைசெயக்கருதுதல்.

க 0. எயிலெறிவல்விலென்றது விற்படையினை. ஏவிளங்குதடக்கை யென்றது ஏத்தொழிலுக்குள்ள கூறுபாடெல்லாம்விளங்கிய தடக்கையென்றவாறு.

இச்சிறப்பானே, இதற்கு **'ஏவிளங்குதடக்கை'** என்று பெயராயிற்று.

க ச. பெரியதோன்றுமென்றது பெருகத்தோன்றுமென்றவாறு.

கரு. பல்பகட்டையெனவிரித்துப் பகட்டை அவை ஓலிப்பப்பூட்டி யெனக்கொள்க.

(கரு) பூட்டித் (கஅ) திருமணிபெறூஉமென முடிக்க.

(அ) வயவர்பெருமகன், (க க)சான்றோர்மெய்ம்மறையாகிய (கஉ)வானவரம்பனைப் (கரு) புன்புலம்வித்தும்வன்கைவினைஞர் தம்(கஎ)கொழூவழி மருங்கில் (கஅ) திருமணிபெறும் (கசு) நாடுகிழவோன் (கஉ) என்று சொல்லுவார்கள் ; அவன் அவ்வாறு செல்வக்குறையிலனுதலான், அத்தரத்திற்கேற்ப நமக்கு வேண்டுவனதருதலிற் குறையுடையனல்லன் ; வந்தமைக்கேற்ப (க) விறலியராயுள்ளீர், ஆடலைக் குறையறச் செலுத்துமின் ; பரிசிலராயுள்ளீர், நீயிரும் நும்கவிகளைப்பாடிக் கைவரப்பண்ணுமினென்று மாறிக்கூட்டி வினைமுடிவுசெய்க.

(கஉ) வானவரம்பன் (கசு) நாடுகிழவோனெனக் கூட்டவேண்டுதலின், மாறாயிற்று.

இதனாற்சொல்லியது, அவனுட்டுச்செல்வமும் அதற்கேற்ற

அவன் கொடையும் கூறியவாறாயிற்று.

ஆடுக பாடுகவென்றதற்கு அவன்பாற்சென்று ஆடுக பாடுகவெனக் கூறாது இவ்வாறுகூறியதன்கருத்து, ஆற்றுப்படையென்னாது செந்துறைப் பாடாணென்று கிடந்தமையானெனக்கொள்க.

(பி - ம்.) எ. புகவென. கக. மேமறை.
கூ. படுவறியா. கஎ. மருங்கின். (அ)

(ருகூ.) பகனீ டாகா திரவுப்பொழுது பெருகி
மாசி நின்ற மாகூர் திங்கட்

கூஞ

## பதிற்றுப் பத்து.

பனிச்சுரம் படரும் பாண்மக னுவப்பப்
புல்லிருள் விடியப் புலம்புசே ணகலப்
பாயிரு ணீங்கப் பல்கதிர் பரப்பி
ஞாயிறு குணமுதற் றோன்றி யாஅங்
கிரவன் மாக்கள் சிறுகுடி பெருக
வுலகந் தாங்கிய மேம்படு கற்பின்
வில்லோர் மெய்ம்மறை வீற்றிருங் கொற்றத்துச்
செல்வர் செல்வ சேர்ந்தோர்க் கரண
மறியா தெதிர்ந்து துப்பிற் குறையுற்றுப்
பணிந்துதிறை தருபநின் பகைவ ராயிற்

சினஞ்செலத் தணியுமோ வாழ்கநின் கண்ணி
பல்வேறு வகைய நனந்தலை யீண்டிய
கரு மலையவுங் கடலவும் பண்ணியம் பகுக்கு
மாறுமுட் டுறாஅ தறம்புரிந் தொழுகு
நாடல் சான்ற துப்பிற் பனைத்தோட்
பாடுசா னன்கலந் தரூஉ
நாடுபுறந் தருத னினக்குமார் கடனே.

இதுவுமது.

பெயர் - (உ) மாகூர்திங்கள்.

(க) நீடாகாது பெருகியெனநின்ற பகலிரவென்னும் சினைமேல் வினையெச்சம் (உ) மாசிநின்றவென்னும் தம்முதலது வினையொடுமுடிந்தன.

உ. மாசியென்றது மாசித்தன்மையை. இனி, அவ்வெச்சங்களைத் திரிப்பினுமமையும். மா கூர்தல் - மாக்கள் குளிராலே உடல்வளைதல்.

இச்சிறப்பானே, இதற்கு 'மாகூர்திங்கள்' என்று பெயராயிற்று.

திங்கள் - மாதம்.

ச. புலம்பு - உலகத்து உயிர்கள் புலம்பு.

கக. சினஞ்செலத் தணியுமோவென்றது நின்பாற்சினமானது நின் பால்நின்றும் கையறப்போம்படி சிறுகத் தணிவுபிறக்குமோவென்றவாறு.

இனி, உம்மும் ஓவும் அசையாக்கித்

தணியென்பதனை முன்னிலைவினை யாக்கி உரைப்பாருமுளர்.

கச. நனந்தலையென்றது பரமண்டலங்களை.

(கச) ஈண்டிய (கரு) பண்ணியமென்றது,
அம்மண்டலங்களில் தன் பகைவர்பாலீண்டிய பண்டங்களை.

## ஆறாம் பத்து.



கரு. மலையவும் கடலவுமாகியவென ஒருசொல் வருவிக்க.

கரு - கசு. பகுக்கும் ஆறென்றது அப்பண்ணியங்களைப் பலர்க்கும் பகுத்துக்கொடுக்கும் நெறியென்றவாறு.

கசு. முட்டுறுமலெனத் திரிக்க. அறம்புரிதல் - நாடுகாவலாகிய அறத்தில் மேவுதல்.

கஎ - கஅ. தோட்கலனென்றது தோளிற்கேற்ற கலமென்றவாறு; தோட்குத் தருமென்றுமாம்.

கக. மார் - அசை.

(கூ)

வில்லோர்மெய்ம்மறை, (கo)செல்வ, சேர்ந்தோர்க்கரணம், (கஎ) நின்தோட்கேற்ற (கஅ)நன்கலங்களைத் திறைதரும் (கக)நாடுகளைப் புறந்தருதல் நின்கடனாயிருக்குமாகலான், (கஉ)நின்பகைவர் (கக) அறியாது எதிர்ந்து துப்பிற்குறையுற்றுப் (கஉ)பணிந்து திறைதருவராயின், (கரு)சினஞ்செலத் தணியுமோ: நின்கண்ணி வாழ்கவென மாறிக்கூட்டி வினைமுடிவுசெய்க.

(௧௯) 'காடுபுறந்தருநல் நினக்குமார்கடன்' என்பதன்பின் (௧௬) 'சினஞ்செலத்தணியுமோ' என்பதைக்கூட்டவேண்டுதலின், மாறாயிற்று.

இதனாற்சொல்லியது, அவன்வென்றிச்சிறப்புக் கூறியவாறாயிற்று.

(பி - ம்.) ௧. பகனீடா திரவு.

(௪) (௯0.) கோலவினை மேவற்றுத் தானை தானே
யிகல்வினை மேவலன் றண்டாது வீசுஞ்
செல்லா மோதில் பாண்மகள் காணியர்
மிஞிறுபுற மூசவுந் தீஞ்சுவை திரியா
தரம்போழ் கல்லா மரம்படு தீங்கனி
யஞ்சே றமைந்த முண்டை விளைபழ
மாறுசென் மாக்கட் கோய்தகை தடுக்கு
மறாஅ விளையு ளறாஅ யாணர்த்
தொடைமடி களைந்த சிலையுடை மறவர்
பொங்குபிசிர்ப் புணரி மங்குலொடு மயங்கி
வருங்கட லூதையிற் பனிக்குந்
துவ்வா நறவின் சாயினத் தானே.

துறை - விறலியாற்றுப்படை.
வண்ணமும் தூக்கும் அது.
பெயர் - (ரு) மரம்படுதீங்கனி.

௪. மிஞிறு புறமூசவும் தீஞ்சுவைதிரியாமை;

அப்பழத்தின்புறத்து வன்மையால்.

கந.

## கூஅ பதிற்றுப் பத்து.

ரு. அரம்போழ்கல்லாவென்றது புறத்துவன்மையால் அரிவாளும் போழமாட்டாவென்றவாறு. 'அரம்போழ்கல்லா மரம்படுதீங்கனி' என்றது புறக்காழனவாகிய பனைமுதலியவற்றின் தீங்கனியைநீக்குதற்கு.

இச்சிறப்பானும் முன்னும்பின்னும்வந்த அடைச்சிறப்பானும் இதற்கு '**மரம்படுதீங்கனி**' என்று பெயராயிற்று.

அ. மூண்டைவிளைபழம் - முட்டைகள் போலும் விளைபழம்; முட்டையென்றது மெலிந்தது.

(ரு) மரம்படுதீங்கனியாகிய (அ) முட்டைவிளைபழமென இருபெயரொட்டு.

(எ) ஓய்தகைதடுக்கும் (கஉ) துவ்வாநறவெனக் கூட்டுக.

௯. அறாஅ யாணரென்றது, இடையறாத கடல்வருவாய்முதலாய செல்வங்களை.

கூ. தொடைமடி - அம்புதொடுத்தெய்தலின் மடிதல்.

க0. புணரியொடு மங்குலொடு என ஒடுவை இரண்டிடத்தும் கொள்க. மயங்கவெனத்திரிக்க ; மயங்குவது (கக) வருகின்ற ஊதையெனக் கொள்க.

(கூ) மறவர் (கக) கடலூதையிற்பனிக்கும் (கஉ) நறவெனக் கூட்டி, ஆண்டுவாழுமறவர் கடலூதையால்மட்டும் நடுங்கும்

நறவென்க.

கஉ. நறவு - ஓரூர்; துவ்வாநறவு - வெளிப்படை.

அவன்றான், இப்பொழுது (கஉ) துவ்வாநறவின் சாயினத்தான்; இனித் (க) தானை கொலைவினை மேவற்று; ஆகலால் தான் (உ) இகல்வினை மேவலன்; இன்னபொழுது இன்னவிடத்து எழுமெனத்தெரியாது; (கூ) பாண்மகளே, நாம் அவனைக் காணியர் செல்லாமோ; செல்லின், (உ) தண் டாது வீசுமெனக்கூட்டி வினைமுடிவுசெய்க.

இதனாற்சொல்லியது, அவன்கொடைச்சிறப்பொடு வென்றிச்சிறப் பும் கூறியவாறாயிற்று.

(கO)

இதன் பதிகத்துத் தண்டாரணியமென்றது ஆரியநாட்டிலே உள்ள தோர் நாடு. கபிலையென்றது குராற்பசு.

## (பதிகம்.)

குடக்கோ நெடுஞ்சேர லாதற்கு வேளா
ஆவிக் கோமான் றேவி யீன்றமகன்
றண்டா ரணியத்துக் கோட்பட்ட வருடையைத்
தொண்டியுட் டந்து கொடுப்பித்துப் பார்ப்பார்க்குக்
கபிலையொடு குடநாட் டோரூ ரீத்து

ஆறாம் பத்து. 

வான வரம்பனெனப் பேரினிது விளக்கி
வேந்தனை மழவரைச் செருவிற் சுருக்கி
மன்னரை யோட்டிக்
குழவிகொள் வாரிற் குடிபுறந் தந்து
நாடல் சான்ற நயனுடை நெஞ்சி
னாடுகோட் பாட்டுச் சேரலாதனை
யாத்த செய்யு ளடங்கிய கொள்கைக்
காக்கைபாடினியார் நச்செள்ளையார் பாடினார்
பத்துப்பாட்டு.

(பி - ம்:) கோட்பட்டவாறுடை. நச்சளையார்.

அவைதாம்: வடுவடு நுண்ணயிர், சிறுசெங்குவளை, குண்டுகண் ணகழி, நில்லாத்தானை, துஞ்சும்பந்தர், வேந்துமெய்ம்மறந்தவாழ்ச்சி, சில்வளைவிறலி, ஏவிளங்குதடக்கை, மாகூர்திங்கள், மரம்படுதீங்கனி. இவைபாட்டின்பதிகம்.

பாடிப்பெற்றபரிசில்: கலனணிகவென்று அவர்க்கு ஒன்பதுகாப் பொன்னும் நூறாயிரங்காணமுங்கொடுத்துத் தன்பக்கத்துக் கொண்டான் அக்கோ.

ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் முப்பத்தெட்டியாண்டு வீற்றிருந் தான்.

(பி - ம்.) ஆடுகோட்பாடுசேரலாதன்.

ஆறாம்பத்து முற்றிற்று.



## ஏழாம்பத்து.



(௬௧.) பலாஅம் பழுத்த பசும்புண் ணரியல்
வாடை தூக்கு நாடுகெழு பெருவிற
லோவத் தன்ன வினைபுனை நல்லிற்
பாவை யன்ன நல்லோள் கணவன்
பொன்னி னன்ன பூவிற் சிறியிலைப்
புன்கா லுன்னத்துப் பகைவ னெங்கோ
புலர்ந்த சாந்திற் புலரா வீகை
மலர்ந்த மார்பின் மாவண் பாரி
முழவுமண் புலர விரவல ரினைய
வாராச் சேட்புலம் படர்ந்தோ னளிக்கென
விரக்கு வாரே னெஞ்சிக் கூறே
னீத்த திரங்கா னீத்தொறு மகிழா

னீத்தொறு பாவலர் னிபனென நவலுதின்
னல்லிசை தரவந் திசினே யொள்வா
கரு ளூரவுக் களிற்றுப் புலாஅம் பாசறை
நிலவி னன்ன வெள்வேல் பாடினி
முழவிற் போக்கிய வெண்கை
விழவி னன்னநின் கலிமகி ழானே.

துறை - காட்சிவாழ்த்து.

வண்ணம் - ஒழுகுவண்ணம்.

தூக்கு - செந்தூக்கு.

பெயர் - (கரு) புலாஅம்பாசறை.

க. பலாஅம் பழுத்த - பலாப்பழுத்தவென்னும் பகரவொற்றுமெலிந் தது. பசும்புண்ணென்றது, புண்பட்டவாய்போலப் பழுத்துவிழுந்த பழத் தினை. அரியலென்றது, அப்பழத்தினின்றும் பிரிந்து அரித்துவிழுகின்ற தேனை.

கo. படர்ந்தோனென்றது முற்று. அளிக்கெனவென்றது நீ எம்மை அளிப்பாயாகவெனச் சொல்லியென்றவாறு.

கக. இரக்கென்றது, தன்மைவினை. எஞ்சிக் கூறேனென்றது உண் மையின் எல்லையைக்கடந்து பொய்யே புகழ்ந்துசொல்லேனென்றவாறு.

௧௨. ஈத்ததற்கெனநான்காவதுவிரிக்க. ஈத்தொறுமகிழானென்றது ஈயுந்தோறெல்லாம் தான் அயலாயிருத்தலல்லது ஈயாநின்றேமென்று ஒரு மகிழ்ச்சியுடையனல்லனென்றவாறு.

௧௩. நுவலுமென்றதற்கு உலகம்நுவலுமென வருவிக்க.

௧௫. புலாஅம்பாசறையென்றது வீரரெல்லாரும் போர்செய்து புண்பட்டமிகுதியாற் புலால்நாறுகின்ற பாசறையென்றவாறு.

இச்சிறப்பானே, இதற்கு '**புலாஅம்பாசறை**' என்று பெயராயிற்று.

௧௬. வேலேயென இரண்டாவதுவிரித்துப்பாடினியிற் பாடுதலொடு முடிக்க.

௧௭. வெண்கையென்றது பொருள்களை அவிநயிக்கும் தொழிற்கை யல்லாத, வெறுமனே தாளத்திற்கு இசைவிடும் எழிற்கையினை.

௧௮. கலிமகிழென்றது கலிமகிழையுடைய ஓலக்கத்தை.

யான் (௮) பாரி (௧0) சோட்புலம்பாடர்க்கோன் ; நீ அளிக்கவெனச் சொல்லி (௧௧) இரக்கென்றுவந்து இல ... புகழ்ந்துசொல்லுகின்றேனுமல் லேன் ; அஃதன்றி உண்மைமொழியைப் புகழ்ந்துசொல்லுகின்றேனுமல் லேன் : (௧௨) ஈத்ததற்குஇரங்காமை முதலாகிய அப்பாரிகுணங்கள் நின் பாலுமுளவாக (௧௩) உலகஞ்செ

ால் லும் நின் (க) புகழை நின்பாலே தரவந்தேன்; (கஎ) நின்பாசறையின் கவிப்பிற்றின்கண்ணேயென வினை முடிவுசெய்க.

இதனாற்சொல்லியது, அவன்வென்றிச்சிறப்பொடுபடுத்து அவன் கொடைச்சிறப்புக் கூறியவாறாயிற்று.

(பி - ம்.) உ. தூக்கும். கூ. எங்கோன். கஉ. ஈதொறு.

(க)

(கூஉ.) இழையணிந் தெழுதரும் பல்களிற்றுத் தொழுதியொடு
மழையென மருளு மாயிரும் பஃறோல்
64 வெஃகுபடை யறுத்த கொய்சுவற் புரவியொடு
மைந்துடை யாரெயில் புடைபட வளைஇ
வந்துபுறத் திறுக்கும் பசும்பிசி ரொள்ளழன்
ஞாயிறு பல்கிய மாயமொடு சுடர்திகழ்
பொல்லா மயலொடு பாடிமிழ் புழிதரு
மடங்கல் வண்ணங் கொண்ட கடுந்திறற்
றுப்புத்துறை போகிய கொற்ற வேந்தே
புனல்பொரு கிடங்கின் வரைபோ லிஞ்சி
யுணங்குடைத் தடக்கையர் தோட்டி செப்பிப்
பணிந்துதிறை தருபநின் பகைவ ராயிற்

புல்லுடை வியன்புலம் பல்லா பரப்பி
வள லுடைச் செறுவின் விளைந்தவை யுதிர்ந்த

கடு களனறு குப்பை காஞ்சிச் சேர்த்தி
யரிய லார்கை வன்கை வினைஞ

ரருவி யாம்பன் மலைந்த சென்னிய
ராடுசிறை வரிவண் டோப்பும்
பாடல் சான்றவவ ரகன்றலை நாடே.

துறை - செந்துறைப்பாடாண்பாட்டு.
வண்ணமும் தூக்கும் அது.
பெயர் - (கo) வளைபோலிஞ்சி.

உ. பலேரொலொடுவென்னும் ஒடு - விகாரத்தால் தொக்கதாக்கி விரிக்க.

௩. புறத்திறுக்குமென்றதற்கு நின் தானை புறத்திறுக்குமென வருவிக்க.

(ரு) ஞாயிறுபல்கிய மாயமொடு (எ) உழிதரு (அ) மடங்கலெனக் கூட்டி, உலகம் கடல்கொண்டுகிடந்தகாலத்து அக்கடல்நீரெல்லாம்வற்ற எறித்தற்குத் தோன்றும் ஆதித்தர் பலவான மாயத்தோடேகூடி அந்நீர்வற் றும்படி திரிதரு வடவைத்தீயென்றுரைக்க.

மாயம்போறலான் மாயமெனப்பட்டது.

(சு) சுடர்திகழ்பு (எ) ஒல்லா மயலொடு பாடிமிழ்பு உழிதரு (அ) மடங்கலென்றது சுடர்திகழ்ந்து உயிர்கட்குப் பொறுக்கமுடியாத மயக்கத்தைச் செய்தலோடே ஒலித்துத் திரிதரும்

மடங்கலென்பவாறு.

(ரு) ஒள்ளழல் (அ) மடங்கல்வண்ணம் கொண்டவெனக்கூட்டி, ஒள்ளழலானது மடங்கலாகிய அழலின்வண்ணத்தைக்கொள்கைக்குக் காரணமாய்நின்றவெனவுரைக்க.

இனி (ரு) ஞாயிறுபலவாதலே அவன்பகைவர்நாட்டில் உற்பாதமாகத் தோன்றும் ஆதித்தர்பலராக்கி, (அ) மடங்கலென்றதனைக் கூற்றமாக்கி, சுடர்திகழ்பு என்றதனைத் திகழவெனத்திரித்து, ஒள்ளழலானது ஞாயிறு பல்கிய மாயமொடு சுடர்திகழ மடங்கல்வண்ணங்கொண்டவேந்தேயென உரைப்பாருமுளர்.

கக. தடக்கையராகிய (கஉ) நின் பகைவரென மாறிக்கூட்டுக.

(க0) வரைபோல் இஞ்சியை அரணகவுடையராயிருந்தே (கஉ) திறைதருபவெனச்சொன்ன சிறப்பானே, இதற்கு ' வரைபோலிஞ்சி' என்று பெயராயிற்று.



(கஉ) திறைதருபவாயின், (கங) நாடு பாடல்சான்றவெனக்கூட்டுக; (கங) சான்றவென்றது முற்று.

கச. விளங்கென்றதனை விளையவெனத்திரிக்க.

கரு. களனறுகுப்பையென்றது களத்திற்

கடாவிடுதற்றேழிலற்ற தூற்றுப்பொலியை.

(கக)பரப்பியென்னும்

வினையெச்சத்தினைச்(கரு)சேர்த்தியென்னும் வினையொடுமுடித்து, அதனை (கஅ) வரிவண்டோப்புமென்னும் வினையொடு முடிக்க.

கஅ - கசு. வண்டோப்புநாடென மாறிக்கூட்டுக.

(சு) கொற்றவேந்தே, (கஉ) நின்பகைவர் (கக) தோட்டிசேப்பிப் (கஉ) பணிந்துதிறைதருபவராயின், (கசு) அவரகன்றலைநாடு பாடல்சான்றவெனமாறிக்கூட்டி வினைமுடிவுசெய்க.

இதனாற் சொல்லியது, அவன்வென்றிச்சிறப்புக் கூறியவாறாயிற்று.

(பி - ம்.) சு. மல்கிய. கக. கொட்டிசெப்பி.

எ. எழுதரு. கஉ. பகைஞு (உ)

(கூரு.) பார்ப்பார்க் கல்லது பணிபறி யலையே

பணியா வுள்ளமொ டணிவரக் கெழீஇ

நட்டோர்க் கல்லது கண்ணஞ் சலையே

வணங்குசிலை பொருதநின் மணங்கம ழகலம்

ரு மகளிர்க் கல்லது மலர்ப்பறி யலையே

நிலந்திறம் பெயருங் காலை யாயினுங்

கிளந்த சொன்னீ பொய்ப்பறி யலையே

சிறியிலை யுழிஞைத் தெரியல் சூடிக்

கொண்டி மிகைபடத் தண்டமிழ் செறித்துக்
குன்று நிலைதளர்க்கு முருமிற் சீறி
யொருமுற் றிருவ ரோட்டிய வொள்வாட்
செருமிகு தானை வெல்போ ரோயே
யாடுபெற் றழிந்த மள்ளர் மாறி
நீகண் டனையே மென்றனர் நீயு
நுந்நகங் கொண்டினும் வென்றோ யதனாற்
செல்வக் கோவே சேரலர் மருக
காறிரை யெடுத்த முழங்குகுரல் வேலி
நனந்தலை யுலகஞ் செய்தநன் றுண்டெனின் (2)

## க0அ பதிற்றுப் பத்து.

அடையடுப் பறியா வருவி யாம்ப
லாயிர வெள்ள வூழி
வாழி யாத வாழிய பலவே.

இதுவும் அது.

பெயர் - (கக) அருவியாம்பல்.

உ. பணியாவுள்ளமென்றது நட்பு நின்றநிலையன ஒருகாலும

தாழ்வு படாத உள்ளமென்றவாறு.

(உ) கெழீஇயென்னுமெச்சத்தினை (௯) நட்டலென்னும் தொழி லொடுமுடிக்க.

(ச) அகலம் (ந) மகளிர்க்கல்லது மலர்ப்பறியாலையென்றது நின்னொடு பொருவாரின்மையின் நின் அகலத்தை நின்மகளிர்போகத்துக்கிடமாகவல்லது மலர்வித்தலை அறியாயென, "மகளிர் மலைத்த லல்லது மள் ளர், மலைத்தல் போகிய சிலைத்தார் மார்ப" (புறநானூறு, கப) என்றதுபோலக் கொள்க.

அ. சிறியவிலையென்றது கடைக்குறை.

௯. தமிழ்செறித்தென்றது மாற்றாரது தமிழ்ப்படையையெல்லாம் இடையறப்படுத்தியென்றவாறு.

கக. ஒருமுற்று - ஒருவளைப்பு. இருவர் - சோழனும் பாண்டியனும்; இருவரையென்னுமுருபு விகாரத்தால் தொக்கது.

கஉ. ஆடு பெற்று அழிந்த மள்ளரென்றது முன்பு பிறரொடு பொருது வென்றிபெற்றுப் பின் நினக்கு அழிந்தமள்ளரென்றவாறு.

மாறியென்றது நின்னொடுபகைமாறி யென்றவாறு.

கஎ. நீ கண்டனையேமென்றது இன்றுமுதல் நின்னாலே படைக்கப் பட்டாற் போல்வேமென்றவாறு.

கக. அருவியாம்பலென்றது வீஅறியா ஆம்பலென்றவாறு.

வீயென்பதுகுறுகிற்று; அருவி - பண்புத்தொகை.

'அடையடுப்பறியாவருவியாம்பல்' எனக்கூறிய இச்சிறப்பானே, இதற்கு 'அருவியாம்பல்' என்று பெயராயிற்று.

(உக) பல (கக) ஆம்பலெனமாறிக்கூட்டுக.

(எ) நீ (க)பார்ப்பார்க்கல்லது பணிபறியலை; (கூ)நட்டோர்க்கல்லது கண்ணஞ்சலை; (ச) நின்அகலம் (ரு) மகளிர்க்கல்லது மலர்ப்பறியலை; (எ) ளெந்தசொற் பொய்ப்பு அறியலை; இவை நின்னியல்பு; இவையேயன்றி (கஉ) வெல்போரோய், முன் பிறர்பால் (கக)வெற்றிபெற்று நினக்குஅழிந்த மன்னர் நின்னொடு பகைமாறி (கச) நீகண்டனையேமென்று தாழ்வுகூற,



அதற்கு ஏற்ப நீயும் நின்பெருமையும் கண்ணோட்டமுமாகிய (கரு) நுய் நுகங் கொண்டு இன்னும் வென்றிகூர்ந்தனை; நின்குணங்கள் இவ்வாறாகிய அத னுனே (கசு) செல்வக்கோவே, சேரலர்மருகனே, (உக) வாழியாதனே, (கஅ) உலகஞ்செய்த நன்றுண்டெனிற் (உக) பல (க கூ) ஆம்பலாகிய (உo) ஆயிரவெள்ளவூழி (உக) வாழ்கவென மாறிக்கூட்டி வினைமுடிவுசெய்க.

(உக) 'வாழியாத' என்னும்விளி (கசு) 'செல்வக்கோவே' என்பது முதலாய விளிகளின்பின்னிற்கவேண்டுதலின், மாறாயிற்று.

இதனுற்சொல்லியது, அவன்பலகுணங்களையும் ஒருங்குகூறி

வாழ்த் தியவாறுயிற்று.

(பி - ம்.) ரு. பலைப்பு. கரு.
அ. கொண்டனை.
நுங்நுங்கொண்டினும் } வென்றோயே. }

௧௦. குன்றினிலை. ௧௪. கடையெடுப்பறியா. (கூ
)

(கூச.) வலம்படு முரசின் வாய்வாட் கொற்றத்துப்
பொலம்பூண் வேந்தர் பலர்தி லம்ம
வறங்கரைந்து வயங்கிய நாவிற் பிறங்கிய
வுரைசால் வேள்வி முடித்த கேள்வி
யந்தண ரருங்கல மேற்ப நீர்பட்
டிருஞ்சே றாடிய மணன்மலி முற்றத்துக்
களிறுநிலை முணைஇய தாரருந் தகைப்பிற்
புறஞ்சிறை வயிரியர்க் காணின் வல்லே
யெஃகுபடை யறுத்த கொய்சுவற் புரவி
யலங்கும் பாண்டி லிழையணிந் தீமென
வாணுக் கொள்கையை யாதலி னவ்வயின்
மாயிரு விசும்பிற் பன்மீ னொளிகெட
ஞாயிறு தோன்றி யாங்கு மாற்று
ருறுமுரண் சிதைத்தநின் னோன்றாள் வாழ்த்திக்

காண்கு வந்திசிற் கழறொடி யண்ணன்
மைபடு மலர்க்கழி மலர்ந்த நெய்த
லிதழ்வனப் புற்ற தோற்றமொ டுயர்ந்த
மழையினும் பெரும்பயம் பொழிதி யதனாற்
பசியுடை யொக்கலை யொரீஇய
விசைமேந் தோன்றனின் பாசறை யானே.

கச

க0௬ **பதிற்றுப் பத்து.**

**துறை - காட்சிவாழ்த்து.**

**வண்ணமும் தூக்கும் அது.**

**பெயர் - (௪) உரைசால்வேள்வி.**

௨. பலர்நில்லென்புழி, நில் - ஒழியிசை.

௬. உரைசால்வேள்வியென்றது யாகங்கள் எல்லாவற்றினும் பெரியவும் அரியவுமாக உரையமைந்த வேள்வியென்றவாறு.

இச்சிறப்பானே, இதற்கு **'உரைசால்வேள்வி'** என்று பெயராயிற்று.

எ. களிறு நிலைமுணவுதற்குக்காரணம் (௯) இருஞ்சேறுடுதல்.

தாரருந்தகைப்பென்றது ஒழுங்குபாட்டையுடைய ஆண்டுவாழ்வார்க் கல்லது பிறர்புகுதற்கரிய மாளிகைக்கட்டணமென்றவாறு.

தார் - ஒழுங்கு. புகைப்பு - கட்டணம்.

அ. புறஞ்சிறை - அதன்சிறைப்புறம்.

கூ. எஃகுபடை - கூரியபடை.

க0. பாண்டில் - தேர்பூணும் எருதுகள்.

அ-க0. புறஞ்சிறை வயிரியர்க் காணின்ஈமென்றது நம்மை அவர்கள் காணவேண்டுவதில்லை; நம் மாளிகைமதிற்புறத்து நீயிர்காணினும் கொடுமி னென்றவாறு.

ஈமென்றது அவ்வீகைத்துறைக்குக் கடவாளை.

கக. அவ்வயி னென்றது நின் னூரிடத்தென்றவாறு.

(கU) ஈமென (கக) அவ்வயின் ஆனுக்கொள் கையையாதலினென மாறிக்கூட்டுக.

(கக) ஆதலினென்பதனை (கஅ) மழையினும் பெரும்பயம்பொழிதி யென்பதனோடுகூட்டி, நின் னூரிடத்து அவ்வயின் ஆனுக்கொள்கையை யாய்ப் போந்தபடியாலே ஈண்டு நின்பாசறையிடத்து மழையினும் பெரும் பயம்பொழியாநின்றாயெனவுரைக்க.

க ௩. ஞாயிறுதோன்றியாங்கு மாற்றார் (க ௪) உறுமுரண்சிதைத்த வென முடிக்க.

(க௫) நெய்தல் (க௬) இதழ்வனப்புற்றதோற்றமொடு (கஅ) பயம்பொ ழிதியெனக்கூட்டி, இவன்றன் நிறம் கருமையாக்கி அந்நிறத்தோற்றத்தானும் மழையோடுவமமாக்கியுரைக்க.

க௯. பசியுடையொக்கலை அப்பசியையொருவியவெனப் பசி வருவிக்க.

உலகத்து (உ) வேந்தர்பலருளர்; அவராற் பெறுபயன் என்

7 (எ) தகைப்பிற் (அ) புறஞ்சிறைவயிரியர்க்காணின் (கo) ஈமெென(கக) அவ்வயின் ஆறுக்கொள்கையையாதலின், (கஅ) மழையினும் பெரும்பயம்பொழிதி ; அதனுல்(கரு) அண்ணல்,(உo) தோன்றல்,(கசு) பகியுடையொக்கலொரீஇய



(உo) பாசறையானே (கச) நின் கோன்முள்வாழ்த்திக் (கரு) காண்கு வந்தி சினென மாறிக்கூட்டி வினைமுடிவுசெய்க.

(கஅ) 'அதனுல்' என்பதன்பின் (கரு) 'அண்ணல்' (உo) 'தோன்றல்' என்னும் விளிகள் நிற்கவேண்டுதலின், மாறுயிற்று.

இதனுற்சொல்லியது, அவன்கொடைச்சிறப்பினை வென்றிச்சிறப் பொடுபடுத்துக் கூறியவாறுயிற்று.

ஏ - டு. ஈயவென்றதுபாடமாயின், உரைசாலென்றது கூறும். 'உரைசால், வேள்வி முடித்த கேள்வி யந்தண, ருங்கல மேற்ப வீயசீர் பட்டு' என்று பாடமாகவேண்டும்,

(பி - ம்.) கக. தோன்றியன்ன. கசு. நோக்கமொடு.

(எ)

(சுரு.) எறிபிணை மிடறிய செம்மறுக் குளம்பிற்
பரியுடை நன்மா விரியுளை சூட்டி
மலைத்த தெவ்வர் மறந்தபக் கடந்த
காஞ்சி சான்ற வயவர் பெரும
ரு வில்லோர் மெய்ம்மறை சேர்ந்தோர் செல்வ

பூணணிந் தெழிலிய வணைந்துவர லிளமுலை

மாண்வரி யல்குன் மலர்ந்த நோக்கின்
வேய்புரை பெழிலிய விளங்கிறைப் பணைத்தோட்
காமர் கடவுளு மாளுங் கற்பிற்
சேணாறு நறுநுதற் சேயிழை கணவ
பாணர் புரவல பரிசிலர் வெறுக்கை
பூணணிந்து விளங்கிய புகழ்சால் மார்பநின்
னாண்மகி ழிருக்கை யினிதுகண் டிகுமே
தீந்தொடை நரம்பின் பாலை வல்லோன்
பையு ளுறுப்பிற் பண்ணுப் பெயர்த்தாங்குச்
சேறுசெய் மாரியி னளிக்குநின்
சாறுபடு திருவி னனைமகி ழானே.

துறை - பரிசிற்றுறைப்பாடாண்பாட்டு.

வண்ணமும் தூக்கும் அது.

பெயர் - (௫) நாண்மகிழிருக்கை.

(உ) விரியுளைகுட்டியென்றதனாற்பயன் மாவிற்குப் போர்வேட்கை பிறத்தல்.

(உ) குட்டிக் (க) கடந்தவெனமுடிக்க.

௭. காஞ்சி சான்ற வயவரென்றது நிலையாமை எப்பொழுதும் உள்ளத்திற் கொண்டிருத்தலமைந்த வீரரென்றவாறு.

௯. வணங்குவரலென்பது ஒருவாய்பாட்டு விகற்பம்.

௧௩. அவன் ஓலக்க இருக்கையின்செல்வத்தை நாண்மகிழிருக்கை யெனக் கூறிய சொற்சிறப்பானே, இதற்கு **'நாண்மகிழிருக்கை'** என்று பெயராயிற்று.

௧௪. இந்தொடை - பாலைக்கோவைகளாகிய வீக்குநிலை.

(௧௫) பையுளுறுப்பிற் பண்ணுப்பெயர்த்தாங்கு(௧௬)அளிக்கும் (௧௭) நனையெனக்கூட்டி எல்லாப்பண்களிலும் வருத்தத்தைச்செய்யும் உறுப்பினை யுடைய பாலைப்பண்கள்பலவற்றையும் ஓரோவொன்றாகப் பெயர்த்துவாசிக்குமாறுபோலே ஒன்றையொன்று ஒவ்வாத இன்பத்தை உண்டவர்க்குக்கொடுக்கும் பலதிறத்து மதுவெனவுரைக்க.

௧௭. நனையென்றது ஈண்டு மதுவிற்கெல்லாம் பொதுப்பெயராய் நின்றது.

௧௮. பாரியினென்னும் உவமம் மதுக்களில் ஓரோவொன்றைக் கொடுக்கும் மிகுதிக்கு உவமம்.

௧௯. சாறுபடுதிருவினென்ற உவமம் அம்மதுக்களைப் பாணர்பண்ணுங்காலத்து அலங்காரமாகக் கூட்டும் பூவும் விரையுமுதலாய பொருள்களுக்கு உவமம். சாறென்றது விழாவின்றன்மையை; மகிழென்றது மகிழ்ச்சியையுடைய ஓலக்கவிருப்பினை.

(௮) வயவர்பெரும, (௯) வில்லோர்மெய்ம்மறை, சேர்ந்தோர் செல்வ, (௧௦) சேயிழை கணவ, (௧௧) பாணர்புரவல,

பரிசிலர்வெறுக்கை, (கஉ) புகழ்சான்மார்ப, நின் (க௬) நாண்மகிழிருக்கையின்சிறப்பெல்லாம் (கஎ) நின்நாண்மகிழின்கண்ணே (க௬) இனிதுகண்டேமெனக்கூட்டி வினைமுடிவு செய்க.

இதனாற்சொல்லியது, அவன் ஓலக்கவினோதத்தொடுபடுத்து அவன் செல்வச்சிறப்புக் கூறியவாறாயிற்று.

(௫)

(௬௬.) வாங்கிரு மருப்பிற் றீந்தொடை பழுனிய
விடனுடைப் பேரியாழ் பாலை பண்ணிப்
படர்ந்தனை செல்லு முதுவா யிரவல
விடியிசை முரசமொ டொன்றுமொழிந் தொன்னார்
வேலுடைக் குழூஉச்சமர் ததைய நூறிக்
கொன்றுபுறம் பெற்ற பிணம்பயி லழுவத்துத்
தொன்றுதிறை தந்த களிற்றொடு நெல்லி



னம்பண வளவை விரிந்துறை போகிய
வார்பத னல்கு மென்ப கறுத்தோ
ருறுமுரண் டாங்கிய தாருந் ததைப்பி
னொண்மழைக் குழூஉச்சிமை கடுக்குந் தோன்றற்
றோன்மிசைத் தெழுதரும் விரிந்திலங் கெஃகிற்
றார்புரிந் தன்ன வாளுடை விழவிற்

போர்படு மள்ளர் போர்தொடு தொடுத்த
கறு கடவுள் வாகைத் துய்வீ யேய்ப்பப்
பூத்த முல்லைப் புதல்சூழ் பறவை
கடத்திடைப் பிடவின் றொடைக்குலைச் சேக்கும்
வான்பளிங்கு விரைஇய செம்பரன் முரம்பி
னிலங்குகதிர்த் திருமணி பெறூஉ
மகன்கண் வைப்பி னாடுகிழ வோனே.

துறை - சேதுறைப்பாடாண்பாட்டு.

வண்ணமும் தூக்கும் அது.

பெயர் - (கசு) புதல்சூழ்பறவை.

௩. படர்ந்தனையென்றது வினையெச்சமுற்று; படர்தல் - நினைவு.

௪. ஒன்றுமொழிதல் - வஞ்சினங்கூறல்.

(௫) ஒன்றுமொழிந்து (௬) கொன்றுபுறம்பெற்றவெனக் கூட்டி, ஒன்றுமொழிதலும் கொன்றுபுறம்பெறுதலும் ஒன்னாரதன்றி இவன் தொழி லாகவுரைக்க.

(௭) ஒன்னாது (௫) குழூவெனக்கூட்டி, கொன்றதும் புறம்பெற்றதும் அக்குழூவையேயாகவுரைக்க.

௯. திறைதந்தவென்றதற்கு அவன்ஒன்னார் திறையாகத்தந்தவென வருவித்துரைக்க.

௰. அம்பணம் - மரக்கால். உறைபோதல் - உறையிடமுடியாதொழிதல். அளவைவிரியவெனத் திரிக்க.

(௭) செல்லின் (௯) ஆர்பதமென இருபெயரொட்டு.

௧0. தாரருந்தகைப்பு - ஒழுங்குடைய மாற்றாரான்குலைத்தற்கரிய படைவகுப்பு.

௧௧. நாண்மழை - பருவமழை.

௧௨. தோலொடுவென ஓடு விரிக்க.

௧௩. தார்புரிந்தன்ன வாள் - பூமாலைகள் அசைந்தாற்போல நுடங்குகின்ற வாள்.

## ௯0 பதிற்றுப் பத்து.

(௧0) தகைப்பினையும் (௧௨) எஃகினையுமுடைய (௧௩) போரெனக் கூட்டுக.

௧௫. கடவுள்வாகை - வெற்றிமடந்தையாகிய கடவுள்வாழும்

வாகை.

௧௪ - ௧௬. கிழித்துக் குறுகநறுக்கி வாகையோடு இடைவைத்துத் தொடுத்த பனங்குருத்து முல்லைமுகைக்கொப்பாகவும் வாகைவீ அம்முல்லை யைச்சூழ்ந்த வண்டிற்கொப்பாகவும் உவமங்கொள்ளவைத்த சிறப்பானே, இதற்கு '**புதல்சூழ்பறவை**' என்று பெயராயிற்று.

௧௯. திருமணிபெறுவார் அந்நாட்டாராகக்கொள்க.

அவனை (௯) நினைத்துச்செல்லு முதுவாயிரவலனே, நின்னினைவிற் கேற்ப (௨0) நாடுகிழவோன்

தனக்குப்போரின்மையான் வென்றுகொடைப் பதின்றி (௯) நன்னார் (௬) பிணம்பயிலழுவத்துத் (௭) திறையாகத்தந்த களிற்றொடு நன்னாட்டுவிளைந்தவெல்லாகிய (௮) உணவினைக் கொடாநின்றானென்று எல்லாரும் சொல்லுவார்கள்; ஆதலால், அவன்பால் ஏகெனக் கூட்டி வினைமுடிவுசெய்க.

இதனாற்சொல்லியது, அவன்வென்றிச்சிறப்புடன்படுத்துக் கொடைச்சிறப்புக் கூறியவாறாயிற்று.

'படர்ந்தனைசெல்லும்' என்று பாணன் தன்னில் நினைவனகூறினமையால், துறை பாணாற்றுப்படையன்றிச் செந்துறைப்பாடாணாயிற்று.

(பி - ம்.) உ. யாழ்ப்பாலை. க. கடறுழந்துசெல்லும். (௯)

(௬௭.) கோடுமணம் பட்ட நெடுமொழி யொக்கலொடு
பந்தர்ப் பெயரிய பேரிசை மூதூர்க்
கடனறி மரபிற் கைவல் பாண
தெண்கடன் முத்தமொடு நன்கலம் பெறுகுவை
கொல்படை தெரிய வெல்கொடி நுடங்க
வயங்குகதிர் வயிரொடு வலம்புரி யார்ப்பப்
பல்களிற் றினநிரை புலம்பெயர்ந் தியல்வர
வமர்க்க ணமைந்த வவிர்நிணப் பரப்பிற்
குழூஉச்சிறை யெருவை குருதி யாரத்

தலைதுமிந் தெஞ்சிய வாண்மலி யூபமொ
டுருவில் பேய்மகள் கவலை கவற்ற
நாடுட னடுங்கப் பலசெருக் கொன்று



நாறிணர்க் கொன்றை வெண்போழ்க் கண்ணியர்
வாண்முகம் பொறித்த மாண்வரி யாக்கையர்
நெறிபடு மருப்பி னிருங்கண் மூரியொடு
வளைதலை மாத்த தாழ்கரும் பாசக
ரெஃகா டேணங் கடுப்பமெய் சிதைந்து
சாந்தெழின் மறைத்த சான்றோர் பெருமகன்
மலர்ந்த காந்தண் மாறா தூதிய
கடும்பறைத் தும்பி சூர்நசைத் தாஅய்ப்
பறைபண் ணழியும் பாடுசா னெடுவரைக்
கல்லுயர் நேரிப் பொருநன்
செல்வக் கோமாற் பாடினை செலினே.

துறை - பாணாற்றுப்படை.
வண்ணமும் தூக்கும் அது.
பெயர் - (கரு) வெண்போழ்க்கண்ணி.

(க) கொடுமணமென்றது ஓரூர்.

உ. பந்தர்ப்பெயரிய - பந்தரென்னும் பெயரைப்பெற்ற.

ரு. சொட்டையாளர் படைதெரியவென
ஒருசொல்வருவிக்க.

ரு. வெல்கொடி நுடங்கவென்றது மாற்றாரெதிரே
அவர்கண்டு
நடுங்கும்படி பண்டுவென்ற கொடி நுடங்கவென்றவாறு.

எ. களிறு இனநிரை புலம்பெயர்ந்து இயல்வரவென்றது
களிற்றின
நிரை களத்திலே போர்வேட்டுப் புடைபெயர்ந்து
திரியவென்றவாறு.

(ரு) கொல்படைதெரியவென்பதுமுதல் (எ)
இயல்வரவென்பதீறாக
நின்ற வினையெச்சங்கான்கினையும் நிகழ்காலப்பொருட்டாக்கிச் (கஉ)
செருக் கொன்றென்னும் வினையொடுமுடிக்க.

(அ) குருதியாரப் (கக) பேய்மகள் கவலைகவற்ற (கஉ)
நாடடன்நடுங்க வெனநின்ற வினையெச்சங்கள்மூன்றினையும்
ஆரும்படி கவலைகவற்றும்படி
நாடடன்நடுங்கும்படியென எதிர்காலப்பொருட்டாக்கிக் (கஉ)
கொன்றென் னும் வினையொடுமுடிக்க.

அ. அமர்க்கண் அமைந்த பரப்பென்றது
அமர்செய்யுமிடத்திற்கு இடம்போந்த பரப்பென்றவாறு.

கo. ஆண்மலியூபமென்றது ஆண்மைமிக்க
யூபமென்றவாறு.

கக. கவலைகவற்றவென்றது கண்டார்க்கு வருத்தத்தைச்செய்யும் படியென்றவாறு.

## ககஉ பதிற்றுப் பத்து.

கஉ. கொன்றென்னும்வினையெச்சத்தினை (கஎ) மெய்சிதைந்தென்னும் வினையொடு மாறிக்கூட்டுக.

கங. தொடுத்தற்குரிய பூவல்லாத பனங்குருத்தினைத் தொடுக்கப் படும் கொன்றையொடு தொடுத்ததுபற்றி, 'நாறிணர்க் கொன்றை வெண் போழ்க் கண்ணி' எனக்கூறிய அடைச்சிறப்பானே, இதற்கு **'வெண்போழ்க் கண்ணி'** என்று பெயராயிற்று.

கஎ. மெய்சிதைந்தென்று உடலுருவப்பட்ட மை ந்திழைசொன்னமை யால், (கச) வாள் முகம் பொறித்த மாண் வரி யாக்கையரென்பதற்கு வாள் முகத்திலேபொறித்த மாண்வரியையுடைய யாக்கையரென முகத்தில் வடு வாக்கியுரைக்க.

கரு. இருங்கண் ஞாளியென்றது பெரிய உடலிடத்தை யுடைய எரு தென்றவாறு.

(கங) கண்ணியர் (கச) மாண்வரியாக்கையராகிய (கஉ) சான்றோர் பெருமகனென மாறிக்கூட்டுக.

(கஎ) மெய்சிதைந்து (கஅ) சாந்து எழில் மறைத்தவென்றது மெய் யானது சிதைந்து அச்சிதைந்தவடுக்களானே பூசினசாந்தின் அழகை மறை

த்தவென்றவாறு.

௧௯. மாறுதுவஊதிய வென்றது இது சூரினுடையதென்று அறிந்துப் நீங்காது ஊதியவென்றவாறு.

௨௦. சூர் நசை சத்தாயென்றதனைச் சூர் நசைத்தாகவெனத் திரித்து, காந்தள் சூரானது நச்சுதலையுடைத்தாகலானேயென வுரைக்க.

(௩) கைவல்பாண, (௧) நெடுமொழியொக்கலொடு நீ (௧௪) சான்றோர் பெருமகன், (௨௨) கோரிப்பொருநனாகிய (௨௩) செல்வக்கோமானைப் பாடிச் செல்லின், (௨) பந்தர்ப்பெயரியபேரூர்த் (௪) தெண்கடன்முத்தமொடு (௧) கொடுமணம்பட்ட (௫) நன்கலம் பெறுகுவையென மாறிக்கூட்டி வினை முடிவுசெய்க.

இதனாற்சொல்லியது, அவன்கொடைச்சிறப்புக் கூறியவாறாயிற்று.

(பெ - ம்.) ௫. தொல்படை. ௯௮. தாழிரும்பாசுகர்.

௧௫. படலசெருக்கடந்து. ௧௭. எஃகானேம்.

(எ)

(கூஅ.) காஃகடிப் பாகக் கடலொலித் தாங்கு ப தி ந் - 69

வேறுபுலத் திறுத்த கட்டூர் நாப்பட் பாசறை

கடுஞ்சிலை கடவுந் தழங்குகுரன் முரச

மகலிரு விசும்பி னாகந் ததிர

இ வெவ்வரி நிலைஇய வெயிலெறிந் தல்ல

துண்ணு தடக்கிய பொழுதுபல கழிய
நெஞ்சுபுக லூக்கத்தர் மெய்தயங் குயக்கத்
தின்னு ருறையுட் டாம்பெறி னல்லது
வேந்தூர் யானை வெண்கோடு கொண்டு
கட்கொடி நுடங்கு மாவணம் புக்குட
னருங்க ணுடைமை தீர்ந்தபின் மகிழ்சிறந்து
நாம மறியா வேம வாழ்க்கை
வடபுல வாழ்நரிற் பெரிதமர்ந் தல்கலு
மின்னகை மேய பல்லுறை பெறுபகொல்
பாய லின்மையிற் பாசிழை ஞெகிழ
நெடும ணிஞ்சி நீணகர் வரைப்பி
னோவுறழ் நெடுஞ்சுவர் நாள்பல வெழுதிச்
செவ்விரல் சிவந்த வவ்வரிக் குடைச்சூ
லணங்கெழி லரிவையர்ப் பிணிக்கு
மணங்கமழ் மார்பநின் றாணிழ லோரே.

துறை - செந்துறைப்பாடாண்பாட்டு.
வண்ணமும் தூக்கும் அது.
பெயர் - (கஉ) ஏமவாழ்க்கை.

(க) கால்கடிப்பாகக் கடலொலித்தாங்கு (ங) முரசம் (ச) அதிரவெனக்கூட்டுக.

(ரு) எயிலெறிந்தென்ற எச்சத்திற்கு (சா) உண்ணாதென்றது இடமாக உண்டலென ஒருதொழிற்பெயர் வருவித்துமுடிக்க.

(சா) உண்ணாதென்றதனை உண்ணாமலெனத் திரித்து அதனை அடுக்கியவென்னும் வினையொடுமுடித்துக் கழியவென்றதனைக் கழியாநிற்கவென்னும்பொருளதாக்கி அதனைப் (அ) பெறினென்னும் வினையொடுமுடிக்க.

எ. ஊக்கத்தரென்றது வினையெச்சம்.

கக. கள் நொடைமை - கள்விலை.

கஉ. நாமம் அறியா ஏம வாழ்க்கையென்றது துன்பம் இடைவிரவின இன்பமன்றி இடையறாத இன்பமேயாய்ச் சேறலான வாழ்க்கை யென்றவாறு.

இச்சிறப்பானே, இதற்கு 'ஏமவாழ்க்கை' என்று பெயராயிற்று.

கங. வடபுலம் - போகபூமியாகிய உத்தரகுரு.

கச. இன்னகை - இனிய இன்பம்.

கரு



(கச) இன்னகை (கரு) அல்கலும் (கசா) மேயவெனக்கூட்டுக.

கச. பல்லுறை - பலநாளுறைதல்.

(கடு) பாசிலைழஞெகிழ (கஎ) நாள்பலவெழுதியென முடிக்க.

(கக) அரிவையர்ப்பிணிக்கும் (உ௦) மணங்கமழ்மார்ப, நின்தாணிழ லோர் (சு) உண்ணாது அடுக்கிய பொழுதுபலகழிய (அ) இன்னுர் உறையுள் தாம் பெறினன்றி (கச) இன்னகை (கரு) அல்கலும் (கச) மேய பல்லுறை பெறுபகொல்? பெறுர்; அவர் அவ்வாறு அதுபெறினன்றி நின் மார்பாற் பிணிக்கப்பட்ட அரிவையரும் இன்னகை அல்கலுமேய பல்லுறைபெறு வதேதெனக்கூட்டி வினைமுடிவுசெய்க.

இதனுற் சொல்லியது, காமவேட்கையின் ஓடாத அவன்வென்றி வேட்கைச்சிறப்புக் கூறியவாருயிற்று.

(பி - ம்.) கஅ. குடச்சூல்.

(அ) (கூக.) மலையுறழ் யானை வான்றோய் வெல்கொடி
வரைமிசை யருவியின் வயின்வயி னுடங்கக்
கடல்போ ருனைக் கடுங்குரன் முரசங்
காலுறு கடலிற் கடிய வுரற
ரு வெறிந்துசிதைந்த வா
ளிலைதெரிந்த வேல்
பாய்ந்தாய்ந்த மா
வாய்ந்துதெரிந்த புகன்மறவரொடு
படுபிணம் பிறங்க நூறிப் பகைவர்

கெடுகுடி பயிற்றிய கொற்ற வேந்தே
நின்போ, லசைவில் கொள்கைய ராகலி னசையா
தாண்டோர் மன்றவிம் மண்கெழு ஞால
நிலம்பயம் பொழியச் சுடர்சினந் தணியப்
பயங்கெழு வெள்ளி யாகிய நிற்ப
விசும்புமெய் யகலப் பெயல்புர வெதிர
நால்வேறு நனந்தலை யோ ராங்கு நந்த
விலங்குகதிர்த் திகிரி முந்திசி னோரே.

துறை - வஞ்சித்துறைப்பாடாண்பாட்டு.
வண்ணம் - ஒழுகுவண்ணமும் சொற்சீர்வண்ணமும்.
தூக்கு - செந்தூக்கும் வஞ்சித்தூக்கும்.
பெயர் - (கஉ) மண்கெழுஞாலம்.



(உ) நுடங்கவெனவும், (ச) உரறவெனவுநின்ற வினையெச்சங்களை (கூ) நூறியென்னும்வினையொடுமுடிக்க.

(அ) புகன்மறவரொடென்னும் ஒடுவை (ரு)வாளொடு (சு) வேலொடு (எ) மாவொடுவென எங்குங்கூட்டுக.

வாள், வேல், மாவெனநின்றமூன்றும் ஆகுபெயர்.

கூ. நூறியென்பது ஈண்டுக்கொன்றென்னும் பொருண்மைத்து.

கூ - க0. பகைவர்கெடுகுடி பயிற்றியவென்றது

படுபிணம்பிறங் கப்பகைவரை நூறிய பின் அப்பகைவருடைய
கெட்டுப்போனகுடிமக்களை அவர்நாட்டிலே பயின்று
வாழ்வாராகப்பண்ணியவென்றவாறு. இனிப் பகைவருடைய
பண்ணினவென்றுமாம்.
கெட்டகுடிகளை வேற்றுநாட்டிலே பயிலப்

(கஉ) மன்றவென்பதனை (கக) அசைவில்கொள்கையராகலினென்பதனொடு கூட்டுக.

கஉ. பொன்ஞாலமன்றி இம்மண்ஞாலமுழுதும் ஆண்டாரென்பது தோன்ற மண்கெழுஞாலமென்ற இச்சிறப்பானே, இதற்கு'மண்கெழுஞாலம்'
என்று பெயராயிற்று.

கரு. நிலம் பயம் பொழியவென்றது சிலர் அரசுசெய்யுங்காலங்
களில் மழையும் நீரும் குறைவின்றியிருந்தும் எவ்விளைவும் சுருங்கவிளையுங்
காலமும் உளவாம் ; அவ்வாறன்றி நிலம் பயனைப்பொழிந்தாற்போல மிக
விளையவென்றவாறு.

சுடர் சினம்தணியவென்றது திங்கள் மும்மாரியும் பெய்து மழை
இடையறாதுவருகின்றமையின் சுடர் சினந்தணிந்தாற்போன்று தோற்ற

வென்றவாறு.

கச. வெள்ளியென்றது வறிதுவடக்கிறைஞ்சிய சீர்சால்வெள்ளி

(பதிற்றுப்பத்து, உச) என்றவாறு.

பயம்கெழு ஆகியம் நிற்கவென்றது அவ்வெள்ளி மழைக்குஉடலான மற்றைநாள்கோள்களுக்குச்செல்கின்றநல்லநாட்களிலே நிற்கவென்றவாறு.

கரு. விசும்பு மெய் ஆகலவென்றது அம்மழையில்லாமைக்கு உற்பா தமாகிய தூமத்தோற்றமின்மையான், ஆகாயவெளி தன்வடிவு பண்டையில் அகன்றாற்போலத் தோன்றவென்றவாறு.

பெயல் புரவு எதிரவென்றது மழை இவ்வுலகினை யானேபுரப்பே னென்று ஏறட்டுக்கொண்டாற்போல நிற்பவென்றவாறு.

கசு. நால்வேறு கணந்தலை ஓராங்கு நந்தவென்றது நாலுதிசையும் ஒன்றுபோலே பகையின்றிவிளங்கவென்றவாறு.

(க0) கொற்றவேந்தே, (கஎ) இலங்குகதிர்த்திகிரியினையுடைய நின் முன்னோர் (கஉ) நிச்சயமாக (கக) நின்னைப்போல் அசைவில்லாத மேற்

கோலேயுடையராகையாலே, (கஉ) இம்மண்ஞாலத்தினை (கசு) நிலம் பயம் பொழிதன்முதலாக (கரு) நால்வேறுநனந்தலே ஓராங்குநந்தவென்பதீறுக எண்ணப்பட்ட நின்புகழெல்லாம்உளவாக (கக) அசைவின்றி (கஉ) ஆண் டோராவார்; அவரல்லார் இம்மண்ஞாலத்தின் ஒரோவிடங்களே ஆளுவ தல்லது முழுதும் ஆளுதல் கூடாதன்றேயெனக்கூட்டி வினைமுடிவுசெய்க.

கக. 'ஆண்டோரசையாது' என்பதுபாடமாக்கி அதற்கேற்ப உரைப் பாருமுளர்.

இதனாற் சொல்லியது, அவன் ஆள்வினைச்சிறப்பினை அவன் குடி வரலாற்ரெடுபடுத்துச் சொல்லியவாருயிற்று.

(நி) 'எறிந்துசிதைந்த' என்பதுமுதலாக (எ) 'மறவரொடு' என்பதீருக நான்கடி வஞ்சியடியாய்வந்தமையான், வஞ்சித்தூக்குமாயிற்று. அவற் றுள், முன்னின்றமூன்றடிகளின் ஈற்றுச்சீர்கள் அசைச்சீர்களாகவும் மற்றை யடியின்ஈற்றுச்சீர் பொதுச்சீராகவும் இட்டுக்கொள்க.

(கக) 'நின்போல்' என்பது கூடன்.

(கூ)

(எ௦.) களிறுகடைஇய தாஎ்
மாவுடற்றிய வடிம்பு

சமந்தலைத்த வேல்
கல்லலைத்த தோள்
வில்லலைத்த நல்வலத்து
வண்டிசை கடாவாத் தண்பனம் போந்தைக்
குவிமுகி ழூசி வெண்டோடு கொண்டு
தீஞ்சுனை நீர்மலர் மலைந்து மதஞ்செருக்கி
யுடைநிலை நல்லமர் கடந்து மறங்கெடுத்துக்
கடுஞ்சின வேந்தர் செம்ம றொலைத்த
வலம்படு வான்கழல் வயவர் பெரும
நகையினும் பொய்யா வாய்மைப் பகைவர்
புறஞ்சொற் கேளாப் புரைதீ ரொண்மைப்
பெண்மை சான்று பெருமட நிலைஇக்
கற்பிறை கொண்ட கமழுஞ் சுடர்நுதற்
புரையோள் கணவ பூண்கிளர் மார்ப
தொலையாக் கொள்கைச் சுற்றஞ் சுற்ற
வேள்வியிற் கடவு ளருத்தினை கேள்வி
யுயர்நிலை யுலகத் தையரின் புறுத்தினை



{வணங்கிய சாயல் வணங்கா வாண்மை

யிளக்துணைப் புதல்வரின் முதியர்ப் பேணித்
தொல்கட னிறுத்த வெல்போ ரண்ணன்
மாடோ ருறையு முலகமுங் கேட்ப
விழுமென விழிதரும் பறைக்குர லருவி
உ௫ முழுமுதன் மிசைய கோடுதொறுந் துவன்று
மயிரை நெடுவரை போலத்
தொலையா தாகநீ வாழு நாளே.

துறை - செந்துறைப்பாடாண்பாட்டு.

வண்ணம் - ஒழுகுவண்ணம்.

தூக்கு - செந்தூக்கும் வஞ்சித்தூக்கும்.

பெயர் - (உ௪) பறைக்குரலருவி.

௧. சமம் ததைந்த வேலென்றது மாற்றார் செய்யும் சாங்கள் சிதைதற்குக் காரணமாகிய வேலென்றவாறு.

வேலென்றது வேல்வென்றியினை.

௪. கல்லலைத்தமேதாளென்றது வலியுடைமையாற கலமயலைத்ததோ ளென்றவாறு.

...... ............. . .....................................................
...

......தாகவெனக்கூட்டி வினைமுடிவுசெய்க.

இதனாற்சொல்லியது, அவன்வென்றிகூறிய திறத்தானே அவற்குள்ள சிறப்புக்களைக்கூறிப் பின்னை வாழ்த்தியவாறாயிற்று.

(பி - ம்) ௧. கவண்டிசை. உ௫. நேருயர்நெடுவரை.

இதன்பதிகத்து ஒருதந்தையென்றது பொறையன்பெருந்தேவியின் பிதாவுடையது ஒருபெயர்.

வேள்வி ஆக்கியபொழுதின் அறத்துறைபோகியென்றது யாகம்பண்ணினகாலத்திலே மற்றுள்ள அறத்துறைகளையும் செய்துமுடித்தென்ற வாறு.

மாயவண்ணனை மனனுறப்பெற்றென்றது திருமாலைவழிபட்டு அவனுடையமனம் தன்பாலேஆம்படி பெற்றென்றவாறு.

ஒகந்தூரீத்தென்றது அம்மாயவண்ணனுக்கு ஒகந்தூரென்ற ஓரூரைக்கொடுத்தென்றவாறு.

புரோசுமயக்கியென்றது தன்புரோகிதனிலும் தான் அறநெறியறிந்தென்றவாறு.

சிறுபுறமென்றது சிறுகொடை.

௧௧அ **பதிற்றுப் பத்து.**

**(ப தி க ம்).**

மடியா வுள்ளமொடு மாற்றோர்ப் பிணித்த
நெடுநுண் கேள்வி யந்துவற் கொருதந்தை
யீன்றமகள் பொறையன் பெருந்தேவி யீன்றமக
னுடபதி படுத்து நண்ணு ரோட்டி
வெருவரு தானை கொடுசெருப் பலகடந்
தேத்தல் சான்ற விடனுடை வேள்வி
ஆக்கிய பொழுதி னறத்துறை போகி
மாய வண்ணனை மனனுறப் பெற்றவற்
கோத்திர நெல்லி னொகந்தூ ரீத்துப்
புரோசு மயக்கி

மல்ல லுள்ளமொடு மாசற விளங்கிய

செல்வக்கடுங்கோ வாழியாதனைக் கபிலர்பாடினர் பத்துப் பாட்டு. அவைதாம் : புலாஅம்பாசறை, வடாபோலிஞ்சி, அருவி யாம்பல், உரைசால்வேள்வி, நாண்மகிழிருக்கை, புதல்சூழ்பறவை, வெண்போழ்க்கண்ணி, ஏமவாழ்க்கை, மண்கெழுஞாலம், பறைக்குரலருவி. இவை பாட்டின்பதிகம்.

பாடிப்பெற்றபரிசில்: சிறுபுறமென

நூறாயிரங்காணங்கொடுத்து

நன்றாவென்னுங்குன்றேறிநின்று தன்கண்ணிற்கண்ட நாடெல்லாம் காட்டிக்
கொடுத்தான் அக்கோ.

செல்வக்கடுங்கோவாழியாதன்
இருபத்தையாண்டுவீற்றிருந்தான்.

## ஏழாம்பத்து முற்றிற்று.



# எட்டாம் பத்து.



(எக.) அறாஅ யாண ரகன்கட் செறுவி
னருவி யாம்ப னெய்தலொ டரிந்து
செறுவினை மகளிர் மலிந்த வெக்கைப்
பரூஉப்பக டுதிர்த்த மென்செந் நெல்லி
னம்பண வளவை யுறைகுவித் தாங்குக்
கடுந்தே றுறுகிளை மொசிந்தன துஞ்சுஞ்

செழுங்கூடு கிளைத்த விளந்துணை மகாஅரி
னலந்தனர் பெருமநின் னுடற்றி யோரே
யூரெரி கவர வுருத்தெழுந் துரைஇப்
போர்சுடு கமழ்புகை மாதிர மறைப்ப
மதில்வாய்த், தோன்ற லீயாது தம்பழி யூக்குநர்
குண்டுக ணகழிய குறுந்தாண் ஞாயி
லாரெயிற் றோட்டி வெளவினை யேறொடு
கன்றுடை யாயந் தரீஇப் புகல்சிறந்து
புலவுவில் லிளைய ரங்கை விடுப்ப
மத்துக்கயி றாடா வைகற்பொழுது நினையூஉ
வான்பயம் வாழ்நர் கழுவு டலைமடங்கப்
பதிபா ழாக வேறுபுலம் படர்ந்து
விருந்தின் வாழ்க்கையொடு பெருந்திரு வற்றென
வருஞ்சமத் தருநிலை தாங்கிய புகர்நுதற்
பெருங்களிற் றியானையொ டருங்கலந் தராஅர்
மெய்பனி கூரா வணங்கெனப் பராவலிற்
பலிகொண்டு பெயரும் பாசம் போலத்
திறைகொண்டு பெயர்தி வாழ்கநின் னூழி
யுரவரு மடவரு மறிவுதெரிந் தெண்ணி
யறிந்தனை யருளா யாயின்

யாரிவ ணெடுந்தகை வாழு மோரே.

துறை - செந்துறைப்பாடாண்பாட்டு.

வண்ணம் - ஒழுகுவண்ணமும்

சொற்சீர்வண்ணமும். கடுo பதிற்றுப் பத்து.

தூக்கு - செந்தூக்கு.

பெயர் - (கஉ) குறுந்தாண்ஞாயில்.

உ. அருவியாம்பல் - நீரின் ஆம்பல்; என்றதனாற்பயன்: நீர்க்குறை வற்ற ஆம்பலென்பதாம்; எண்ணின் ஆம்பலை நீக்குதற்கென்பதுமொன்று.

(உ) ஆம்பலொடு நெய்தலொடு (ச) நெல்லை (உ) அரிந்தென்று கொள்க.

(உ) அரிந்து (ச) பகடு உதிர்த்தவெனக்கூட்டிப் பகட்டானென

உருபு விரிக்க.

௩. செறு வினை மகளிர் மலிந்த வெக்கையென்றது உழவர்பெண் மக்கள் விளையாடுதற்கு வயலின்கண் பயிர்கொள்ளாததோரிடமின்மையின், ஆண்டு அவர்கள் மிக்க களமென்றவாறு.

வெக்கை - கடாவிடுங்களம்.

௪. நெல்லிற்கு மென்மை - சோற்றதுமென்மை. செந்நெலென்றது செந்நெலென்னும் சாதியை.

௫. அளவைக்கென நான்காவதுவிரிக்க.

௬. கடுந்தேறு உறுகிளை - கடிதாகத் தெறுதலையுடைய மிக்க குளவி

யினம். மொசிந்தனவென்றது மொய்த்தனவென்னும் வினையெச்சமுற்று.

௯. உருத்து எழுந்து உரைஇ ஊர் எரி கவரவெனக்கூட்டுக.

(௯) ஊரெரிகவரப் (௧௦)போர்சுடுகமழ்புகை மாதிரமறைப்பத் (௧௯) தோட்டிவௌவியென முடிக்க.

௧௧. தோன்றலீயாதென்றது தோன்றாதென்னும் வினையெச்சத் திரிசொல்; தோன்றலீயாமலெனத்திரிக்க.

௧௨. குறுந்தாண் ஞாயிலென்றது இடையிடையே மதிலின் அடியிடங்களைப்பார்க்க அவற்றிற் குறுகிக் குறுகியிருக்கும் படியையுடைய ஞாயிலென்றவாறு.

இவ்வாறு கூறின சாதிப்பண்பானும் படியைத் த ானென்றுகூறினபடி யானும் இதற்கு '**குறுந்தாண்ஞாயில்**' என்று பெயராயிற்று.

௧௩. வௌவினையென்றது வினையெச்சமுற்று.

௧௪. ஆயம்தரீஇயென்றது ஆயங்களை நீ (௧௫) புலவுவில்லிளையர்க்குக் கொடுப்பவென்றவாறு.

தரீஇயென்பதனைத் தரவெனத்திரிக்க.

௧௫. இளையர் அங்கைவிடுப்பவென்றது இளையர் அவ்வாயத்தைத் தங்கள் அங்கையில்நின்றும் பிறர்க்கு விடுப்பவென்றவாறு.

௧௬. கயிறுடாவென்னும் பெயரெச்சமறையை வைகலென்னும் தொழிற்பெயரொடுமுடிக்க. வைகல் - கழிதல். வைகற்பொழுது - இருபெய ரொட்டு.

கஎ. வாழ்நர் - வாழ்பவர்; இடையர். பயத்தானென விரிக்க. கழுவுளாவான் அவ்விடையர்க்குத்தலைவனாய் அக்காலத்துக் குறும்புசெய்தி ருந்தானொருவன். முன்னர் (கக) எயிலென்றது அவன் தனக்குஅரணாகக் கொண்டிருந்த மதிலினை.

கஅ. வேறுபுலம்பதிபாழாகப்படர்ந்தென்றது அக்கழுவுள் தலைம டங்குகையாலே அவனைவிட்டு வேறு திறையிடாக்குறும்பர்நாட்டிலே அந் நாட்டுப்பதி பாழாகச்சென்றென்றவாறு.

(கஅ) படர்ந்து (உ௪) திறைகொண்டுபெயர்தியெனக் கூட்டுக.

கக. விருந்தின்வாழ்க்கை - நாடோறும் புதிதாகத் தாங்கள் தேடுகின்றபொருள். பெருந்திரு - முன்னேதேடிக்கிடந்தபொருள். அற்றெனவென்றது அற்றதெனக்கருதியென்றவாறு. அற்றதென்பது கடைக்குறைந்தது.

உங. பாசம் - பேய்.

உரு. உரவனையும் மடவனையுமென்னும்இரண்டாவது விகாரத்தால் தொக்கது. அறிவு - அவர்களறிவு.

உஎ. வாழுமோரென்புழி, உம்மை - அசைநிலை.

(க கூ) ஆரெயிற்றோட்டிவெளவி அதனையுடைய (கஎ)

கழுவுள் தலைமடங்குகையாலே (கஅ) வேறுபுலம்படர்ந்து அவ்வேறுபுலத்து நினக்கு (உக) யானையொடு அருங்கலந்திறையிடார்தம் (கக) விருந்தின் வாழ்க்கையொடு பெருந்திருவற்றதெனக்கருதித் தங்கள் (உஉ) மெய்ந்நடுக்க மிக்கு நின்னை அணங்கெனக்கருதிப் பலபடப் பரவுதலான், (உங) பேய் தான் பற்றினுருயிரைவெளவாது தனக்கு அவர் பலியிட்டுழி அப்பலி கொண்டுபெயருமாறுபோல நீயும் அவருயிரைவெளவாது (உச) திறை கொண்டுபெயராநின்றாய்; இஃதன்றே இதுபொழுது நீசெய்கின்றது; நின்னை (அ) உடற்றியோர் (௯) கடுந்தேறு உறுகிளை துஞ்சும் (எ) கூடுகிளை த்து இளந்துணைமகாரைப்போலப் (௬) பெருமானே, அலந்தார்கள்; இனிமே ல்உள்ளத்து (உரு) உரவரையும் மடவரையும் அவரவர்அறிவினைத்தெரிந்து எண்ணி (உசு) அவர்களிடத்துச்செய்யும்அருளறிந்து அருளாயாயின், (உஎ) நெடுந்தகாய், இவண்வாழ்பவர்யார்; (உச) நின் ஊழி வாழ்கவெனக் கூட்டி வினைமுடிவுசெய்க.

இதனாற்சொல்லியது, அவன் வென்றிச்சிறப்புக்கூறி அவற்குப் பகைவர்மேல் அருள்பிறப்பித்தவாறாயிற்று.

(பி - ம்.) கூ. செறிவரை. கஅ. வேற்றுப்புலம். கஎ. தலைமயங்க. உஉ. பராவின்.

(க)

கசு

(எஉ.) இகல்பெருமையிற் படைகோ ளஞ்சார்
சூழாது துணித லல்லது வறிதுடன்
காவ லெதிரார் கறுத்தோர் நாடுநின்
முன்றிணை முதல்வர்க் கோம்பின ருறைந்து
மன்பதை காப்ப வறிவுவலி யுறுத்து
நன்றறி யுள்ளத்துச் சான்றோ ரன்னநின்
பண்புநன் கறியார் மடம்பெரு மையிற்
றுஞ்ச லுறாஉம் பகல்புகு மாலை
நிலம்பொறை யொராஅநீர் ஞெமரவந் தீண்டி
யுரவுத்திரை கடுகிய வுருத்தெழு வெள்ளம்
வரையா மாதிரத் திருள்சேர்பு பரந்து
ஞாயிறு பட்ட வகன்றுவரு கூட்டத்
தஞ்சாறு புரையு நின்றொழி லொழித்துப்
பொங்குபிசிர் நுடக்கிய செஞ்சுடர் நிகழ்வின்
மடங்கற் றீயி னனையை
சினங்கெழு குருசினின் னுடற்றிசி னோர்க்கே.

துறை - செந்துறைப்பாடாண்பாட்டு.

வண்ணம் - ஒழுகுவண்ணம்.

தூக்கு - செந்தூக்கு.

பெயர் - (க0) உருத்தெழுவெள்ளம்.

க. இகல் பெருமையின் - இகலானது பெரிதாகையானே ; இக லென்னும் எழுவாய்க்குப் பெருமையை நிலைப்பயனிலையாகக் கொள்க. அஞ் சாரென்றது வினையெச்சமுற்று.

(க) படைகோளைத் (உ) துணிதலெனக் கூட்டுக.

உ - ௩. உடன் காவலெதிராரென்றது பலருந் தம்முட் கூடியும் காக்கமாட்டாரென்றவாறு.

ரு. மன்பதை - மக்கட்பன்மை.

(ரு) அறிவுவலியுறுத்தும் (௬) சான்றோரெனக் கூட்டுக. ஈண்டுச் சான்றோரென்றது மந்திரிகளை.

எ. மடம்பெருமையையும் (க) இகல்பெருமையைப்போல எழுவா யும் பயனிலையுமாகக்கொள்க.

அ. துஞ்சல்-எல்லாவுயிரும்இறந்துபடுதல். பகலென்றது ஊழியை. மாலையென்றது ஊழிமுடிவினை.



௯. ஒராஅ வென்றதனை ஒருவவெனத்திரித்து ஈண்டியென்றதனை யும் ஈண்டவெனத் திரிக்க.

க௦. உருத்தெழுவெள்ளமென்றது பல்லுயிரையும் ஒருங்கு தான் கொல்லுங்கருத்துடையதுபோலக் கோபித்தெழுவெள்ளமென்றவாறு.

இச்சிறப்பானே இதற்கு ' உருத்தெழுவெள்ளம் ' என்று

பெயரா யிற்று.

(க ೦) வெள்ளம் (கக) பரந்தென்றதனைப் பரக்கவெனத்திரித்து அதனை (கச) நுடக்கியவெனநின்ற செய்யியவென்னும் வினையெச்சத்தொடு முடித்து அதனைச் சுடர்நிகழ்வென்னுந் தொழிற்பெயரொடுமுடித்து, வெள் ளம் பரக்கையாலே அவ்வெள்ளத்தை மாய்க்கவேண்டிச் சுடர்நிகழ்தலையுடைத்தான (கரு) தீயெனவுரைக்க.

கச. பிசிரென்றது பிசிருடைய வெள்ளத்தை. நுடக்குதல்-மாய்த் தல்.

(கஉ) ஞாயிறுபட்ட அகன்றுவருகூட்டத்து (கரு) மடங்கற்றீயென மாறிக்கூட்டி, அவ்வெள்ளத்தை மாய்த்தற்கு ஆதித்தர்பன்னிருவரும் தோற் றின பெரியகூட்டத்தையுடைய வடவைத்தீயெனவுரைக்க. ஆதித்தர்கூட் டத்தை இவன் படைத்தலைவர்க்கு உவமமாகக்கொள்க.

(கங) அம் சாறுபுரையு நின்றொழிலொழித்து (கரு) மடங்கற்றீயி னனையையென மாறிக்கூட்டுக. அம் சாறுபுரையுந்தொழிலென்றது அழகிய விழாப்போல எல்லார்க்கும் இன்பத்தைச்செய்யுந் தொழிலென்றவாறு.

(கூ) நின்னொடுகறுத்தோர் (எ) தம் மடம் பெருமையால் (கூ) நின் (௪) முன்குடிமுதல்வர்க்கு(ரு) அறிவுவலியுறுத் துஞ் (௬) சான்றோரையொத்த நின் (எ) சூழ்ச்சிப்பண்புடைமை அறிகின்றிலர் ; நீதான் சூழ்ச்சியுடையையே யன்றிக் (கா) குருசிலே, நின் உடற்றிசினோர்க்குப் போர்செய்யுமிடத்து (கரு) மடங்கற்றீயின் அனையை ; அதனையும் அறிகின்றிலராதலால், அவர் தம்

(க) இகல்பெருமையானே அஞ்சாராய்ப் படைகோளைத் (உ) துணிதலல்லது
(ரு) நாட்டைச் (உ) சிறிதும்உடன் (ரு) காவலெதிர்கொள்ளாரெனக் கூட்டி வினைமுடிவுசெய்க.

இதனாற் சொல்லியது, அவன் சூழ்ச்சியுடைமையும் வென்றிச்சிறப்பும் உடன்கூறியவாறாயிற்று.

(பி - ம்.) ரு. நாடென. அ. துஞ்சலூறும்.
ச. முதல்வரோம்பினர். கச. பிசிருடக்கிய. (உ)

(எரு.) உரவோ ரெண்ணினு மடவோ ரெண்ணினும்
பிறர்க்குநீ வாயி னல்லது நினக்குப்

கஉச பதிற்றுப் பத்து.

பிறருவம மாகா வொருபெரு வேந்தே

........... ......................

...................................
மருதஞ் சான்ற மலர்தலை விளைவயற்
செய்யு ளாரை பொய்யு மகளி
ரிரவும் பகலும் பாசிழை களையார்

குறும்பல் யாணர்க் குரவை யயருங்
காவிரி மண்டிய சேய்விரி வனப்பிற்

புகாஅர்ச் செல்வ பூழியர் மெய்ம்மறை
கழைவிரிந் தெழுதரு மழைதவழ் நெடுங்கோட்டுக்
கொல்லிப் பொருந கொடித்தேர்ப் பொறையநின்
வளனு மாண்மையுங் கைவண் மையு
மாந்த ரளவிறந் தனவெனப் பன்னாள்
யான்சென் றுரைப்பவுந் தேறார் பிறருஞ்
சான்றோ ருரைப்பத் தெளிகுவர் கொல்லென
வாங்குமதி மருளக் காண்குவல்
யாங்குரைப் பேனென வருந்துவல் யானே.

இதுவும்அது.

பெயர் - நிறந்திகழ்பாசிழை.

*[கூந்தலையுடையமகளிர்,ஒண்ணுதல்பொலிந்தமகளிரெனக்கூட்டுக.

நிறந்திகழ்பாசிழையென்றது தன்னின் அழுத்திய மணியினுந் தன் னிறந்திகழும் பசும் பொன்னிழையென்றவாறு.

இச்சிறப்பானே, இதற்கு 'நிறந்திகழ்பாசிழை' என்று பெயராயிற்று.

உயர்திணைமகளிர் நெஞ்சத்துமென உம்மையை மாறிக்கூட்டுக.

தெய்வமென்றது தெய்வத்தன்மையை.

தெய்வந்தரூஉம் ஆன்றோரெனக்கூட்டுக. குலமகளிரா

உயர்திணை மகளிரென்று முன்னேகூறினமையான் ஆன்றோரென்றது பரத்தையரை யாம்; அவர்களை ஆன்றோரென்றது தம் துறைக்குவேண்டுவன அமைந்தா ரென்றவாறு.]

மருதமென்றது மருதநிலத்தன்மையை.

இரவும் பகலும் குரவையயருமெனக்கூட்டுக.

---

* [ ] இவ்விருதலைப் பகரத்திற்குட்பட்ட உரைக்குரியமூலம் ஒரு பிரதியிலும் கிடைக்கவில்லை.



குறும்பல்குரவையென்றது ஒன்று ஆடுமிடத்திற்கு ஒன்று அணிய தாய் அவைதாம் பலவாயிருக்கின்ற குரவையென்றவாறு.

குரவையயரும் புகாரெனவும் காவிரிமண்டிய புகாரெனவுங்கூட்டுக.

உரைப்பவுமென்ற உம்மை தாமே அறியக்கடவதனை யாம் சொல்

லவு மறிகிலரெனச் சிறப்பும்மை. பிறருமென்ற உம்மை அசைநிலை. 'சான்

றோர்........கொல்லென' என்றதன்பின், கருதினென ஒருசொல் வருவித்து அதனைக் காண்குவலென்னும் வினையொடுமுடிக்க.

பெருவேந்தே, புகார்ச்செல்வ, பூழியர்மெய்ம்மறை, கொல்விப் பொருந, பொறைய, நின் பகைவர் நின்வளனும் ஆண்மையும் கைவண்மையும், உலகத்துமக்களளவைக்கடந்தன; அவனொடு மாறுபடுவது நமக்கு உறுதியன்றெனப் பன்னாள் யான் சொல்லவும் தேறிற்றிலர்; தேறாராயினும் உலகத்து மதிப்புடைய சான்றோர் சொல்லத் தாம் தேறுவரோவெனக் கருதின் அவர்சொன்னவிடத்தும் அவர்கள் மதிமருண்டதுவேகாணா நின்றேன்; ஆகலான் நின் பெருமையை அவர்கட்கு யாங்கு உரைப்பேனென வருந்தாநின்றேன் யான். இஃது என்னுறுகுறை; இதனை அறிந்து நீ அவர்பால் அருளவேண்டுமெலென வினைமுடிவுசெய்க.

இதனாற்சொல்லியது, அவன் வென்றிக்கு அடியாகிய செல்வமும் ஆண்மையும் கைவண்மையும் உடன்கூறியவாற்றான் அவன் வென்றிச் சிறப்புக் கூறியவாறாயிற்று.

(பி - ம்.) நீயாயின். சேய்வரி.

ஒப்புமகளிர். யாஞ்சென்று. (௩)

(எச.) கேள்வி கேட்டுப் படிவ மொடியாது
வேள்வி வேட்டனை யுயர்ந்தோ ருவப்ப
சாயறல் கடுக்குந் தாழிருங் கூந்தல்
வேறுபடு திருவி னின்வழி வாழியர்
௫ கொடுமணம் பட்ட வினைமா ணருங்கலம்
பந்தர்ப் பயந்த பலர்புகழ் முத்தம்
வரையக நண்ணிக் குறும்பொறை நாடித்

தெரியுநர் கொண்ட சிரறுடைப் பைம்பொறிக்
கவைமரங் கடுக்குங் கவலைய மருப்பிற்
புள்ளி யிரலைத் தோலூ னுதிர்த்துத்
தீதுகளைந் தெஞ்சிய திகழ்விடு பாண்டிற்
பருதி போகிய புடைகிளை கட்டி
யெஃகுடை யிரும்பி னுள்ளமைத்து வல்லோன்

## கஉகூ பதிற்றுப் பத்து.

சூடுநிலை யுற்றுச் சுடர்விடு தோற்றம்
விசும்பாடு மரபிற் பருந்தூ றளப்ப
நலம்பெறு திருமணி கூட்டு நற்றோ
ளொடுங்கீ ரோதி யொண்ணுதல் கருவி
லெண்ணியன் முற்றி யீரறிவு புரிந்து
சால்புஞ் செம்மையு முளப்படப் பிறவுங்
காவற் கமைந்த வரசுதுறை போகிய
வீறுசால் புதல்வற் பெற்றனை யிவணர்க்
கருங்கட னிறுத்த செருப்புகன் முன்ப
வன்னவை மருண்டனெ னல்லே னின்வயின்
முழுதுணர்ந் தொழுக்கு நரைமூ தாளனை
வண்மையு மாண்பும் வளனு மெச்சமுந்

தெய்வமும் யாவதுந் தவமுடை யோர்க்கென
வேறுபடு நனந்தலைப் பெயரக்
கூறினை பெருமநின் படிமை யானே.

### இதுவும் அது.

### பெயர் - (௧௬) நலம்பெறுதிருமணி.

௧. கேள்விகேட்டல் - யாகம் பண்ணுதற்கு உடலான விதிகேட்டல். படிவம் - யாகம் பண்ணுதற்கு உடலாக முன்புசெலுத்தும் விரதங்கள். ஓடியாதென்பதை ஓடியாமலெனத் திரிக்க.

(௨) வேட்டனையென்றதனை வினையெச்சமுற்றாக்கி அவ்வினையெச் சத்தினை (௨௨) அருங்கடனிறுத்தவென்னும் வினையொடு கூட்டுக.

௨. உயர்ந்தோர் - தேவர்.

௪. வேறுபடுதிருவின் - இவளுக்குக்கூறியகுணங்களால் அவளின் வேறாகிய நின்தேவி யென்றவாறு.

திருவின்என்னும்இன் - அசைநிலை.

(௪) வாழியரென்னும் வினையெச்சத்தினைச் (௧௪) சூடுநிலையுற்றென் னும் வினையொடுமுடிக்க.

எ. வரையென்றது, பெருமலையை.

குறும்பொறையென்றது அதனை அணைந்த சிறுபொற்றைகளை.

௯. தெரியுநர்கோடல் - இலக்கணக்குற்றமற ஆராய்ந்துகோடல். பைம்பொறியென்றது, செவ்விகளையுடைய புள்ளிகளை. மேற் (௧௦) புள்ளி யிரலையென்றதனை அதன்

சாதிப்பெயர் கூறியவாறாகக்கொள்க.



கூ. கவலையவென்னும் அகரம் செய்யுள்விகாரம்.

கக. பாண்டிலென்றது, வட்டமாக அறுத்த தோலினை.

கஉ. பருதிபோகியபுடையென்றது,வட்டமாகப்போன அத்தோலது விளிம்பினை.

(ரு) அருங்கலம் (கூ) முத்தம் (கக) பாண்டிற் (கஉ) புடைகிளைகட்டி யெனக்கூட்டி அருங்கலத்தினையும் முத்தத்தினையும் அத்தோலின்விளிம்பிலே இனமாகக் கட்டியெனவுரைக்க.

கங. எஃகுடை இரும்பின் உள்ளமைத்தென்றது கூர்மையை யுடையகருவிகளால் அத்தோலுட்செய்யும் தொழில்களெல்லாம் செய்த மைத்தென்றவாறு.

அமைத்தென்றதனை அமைப்பவெனத் திரிக்க.

(கங) வல்லோனுலெனவிரித்து வல்லோனுல் நின்தேவி (கச) சூடு தல் நிலையுறுதலாலெனக.

கங. வல்லோன் - யாகம்பண்ணுவிக்கவல்லவன்.

கச. தோற்றமென்றது, தோற்றமுடைய அத்தோலினை.

(சு) திரு (கஎ) ஒண்ணுதல் (கச) தோற்றம் (கரு) பருந்தூ றளப்பச் (கச) சூடுநிலையுற்றுக் (கஎ) கருவில் (உ0) அரசுதுறைபோகிய வெனக்கூட்டி நின்தேவியாகியஒண்ணுதல் அவ்வாறிழைத்ததோலினைப் பருந்தூறளக்கும்படி சூடினமையால், அவள்கருவிலேயிருந்து அரசுதுறை க்குவேண்டுவனவெல்லாம்

குறையற்றவெனவுரைக்க.

கரு. நலம்பெறுதிருமணியென்றது மணியறிவாரால் இதுவே நல்ல தென்று சொல்லப்படுதலையுடைய திருமணியென்றவாறு.

இச்சிறப்பானே, இதற்கு '**நலம்பெறுதிருமணி**' என்று பெயராயிற்று.

கஅ. எண் இயல் முற்றியென்றது திங்கள்நிரம்பியென்றவாறு.

ஈரறிவென்றது இம்மையறிவு மறுமையறிவு; பெரியவறிவெனினும் அமையும்.

உக. பெற்றனையென்றது வினையெச்சமுற்று.

உச. நரைமூதாளனென்றது, புரோகிதனை.

(உச) நரைமூதாளனைக் (உஅ) கூறினையெனக்கூட்டி, அவனைச் சொல்லி ஏவினையென ஒருசொல் வருவித்துமுடிக்க.

உரு. மாண்பென்றது, மாட்சிமையுடைய குணங்களை. எச்சமென்றது, பிள்ளைப்பேற்றினை.

உசு. தெய்வமென்றது, தம்மால் வழிபடுந் தெய்வத்தினை.

## கஉஅ பதிற்றுப் பத்து.

(உகூ) தவமுடையோர்க்கெனச் (உஅ) சொல்லியென்க.
கூறினையென்பது வினையெச்சமுற்று.

உஎ.

வேறுபடுநனந்தலையென்றது, துறந்துபோயிருக்குங்காட்டினை.

பெயர - அந்நனைமூதாளனைக் காட்டிலே பெயரவேண்டி.

(உஉ) செருப்புகன்முன்ப, (உ)வேட்டனையென்றும் (உக)பெற்றனை யென்றும் நீ செய்தயாகங்களாகிய (உங) அன்னவையிற்றிற்கு யான் மருண் டேனல்லேன்; நின்னை நல்வழி (உச) ஒழுகுவித்துநின்ற நனைமூதாளனை (உரு) நின்படிமையானே (உஎ) இல்லறவொழுக்கினைஒழித்துத் துறவற வொழுக்கிலே செல்ல (உஅ) ஒழுகுவித்தனை ; அவ்வாறுசெய்வித்த நின் பேரொழுக்கத்தினையும் பேரறிவினையும் தெரிந்து யான்மருண்டேனென வினைமுடிவுசெய்க.

இதனாற்சொல்லியது, அவன்நல்லொழுக்கமும் அதற்கேற்ற நல் லறிவுடைமையும் கூறியவாறாயிற்று.

(பி - ம்.) ௯. தெரிபுகொண்ட. உரு. வண்மையுமாண்மையும்.

கO. தோலுனெகிரத்து. உஎ. வேறுபுல.
கச. சூடுநிலையுற்ற. உஅ. கூறுவை.
உச. முதிதுணர்ந்தொழுகும்.

(ச)

(எரு.) இரும்புலி கொன்று பெருங்களி றடூஉ

மரும்பொறி வயமா னணையை பல்வேற்
பொலந்தார் யானை யியறேர்ப் பொறைய
வேந்தரும் வேளிரும் பிறருங் கீழ்ப்பணிந்து
நின்வழிப் படாஅ ராயி னெய்மிக்
கறையுறு கரும்பின் றீஞ்சேற் றியாணர்
வருநர் வரையா வளம்வீங் கிருக்கை
வன்புலந் தழீஇ மென்பா றோறு
மரும்பறை விணைஞர் புல்லிகல் படுத்துக்
கள்ளுடை நியமத் தொள்விலை கொடுக்கும்
வெள்வர குழுத கொள்ளுடைக் கரம்பைச்
செந்நெல் வல்சி யறியார் தத்தம்
பாடல் சான்ற வைப்பி
னாடட னுடல் யாவண தவர்க்கே.

இதுவும் அது.

பெயர் - (கூ) தீஞ்சேற்றியாணர்.



ரு - கூ. நெல்மிக்கு அறையுறு கரும்பென்றது நெல்லின்கண்ணே அந்நெல்லைநெருக்கி மிக எழுந்தமையானே அறுக்கலுற்ற கரும்பென்றவாறு.

இனி, அந்நெற்றான் கரும்பின் மிக எழுந்து அதனை நெருக்கினமை யால், அந்நெல்லிற்கு இடமுண்டாக அறுத்த கரும்பெனினுமாம்.

௬. தீஞ்சேறு - இனியபாகு. யாணரென்றது அத்தீஞ்சேற்றது இடையறவின்மையை.

இச்சிறப்பானே, இதற்கு 'தீஞ்சேற்றியாணர்' என்று பெயராயிற்று.

(எ) வளம்வீங்கிருக்கையாகிய (அ) மென்பாலெனக் கூட்டுக.

மென்பால் - மருதம்.

(௯) பொறைய, நீ (க) புலிகொன்று களிறடூஉம் (உ) வயமான் அனையை; அதனால், (௩) வேந்தரும் வேளிரும் பிறரும் நின்னடிக்கீழ்ப்பணிந்து தமக்குரிய (அ) மென்பால்கடோறுமிருந்து முன்பணிந்தவாற்றிற்கேற்ப (௫) நின்வழியொழுகாராயின், அவர்கள் (கக) வெள்வரகுழுதகொள்ளுடைக் கரம்பையாகிய (அ) வன்பாலிலே கெட்டுப்போயிருந்து ஆண்டுவிளைந்த வெள்வரகு உண்பதன்றித் தாம் பண்டுண்ணும் (கஉ) செந்நெல்வல்சி உண்ணக்கிடையாதபடி மிடிபடுகின்றார்; (க௩) தத்தநாட்டினை ஒருங்கு ஆளுதல் அவர்க்கு யாவணதென வினைமுடிவுசெய்க.

இதனாற்சொல்லியது, அவன்வென்றிச்சிறப்புக் கூறியவாறாயிற்று.

(பி - ம்.) அ. தழீஇயமென்பால். கக. கல்லுடைக்கரம்பை.

௩. புலவிகல்படுத்து. கஉ, அறியாருடன. (௫)

(எ௩.) களிறுடைப் பெருஞ்சமந் ததைய வெஃகுயர்த்
தொளிறுவாண் மன்னர் ததைநிலை கொன்று

முரசுகடிப் படைய வருந்துறை போகிப்
பெருங்கட னீந்திய மரம்வலி யுறுக்கும்
பண்ணிய விலைஞர் போலப் புண்ணொரீஇப்
பெருங்கைத் தொழுதியின் வன்றுயர் கழிப்பி
யிரந்தோர் வாழ நல்கி யிரப்போர்க்
கீத றண்டா மாசித றிருக்கை
கண்டனென் செல்கு வந்தனென் கால்கொண்டு
கருவி வானந் தண்டளி சொரிந்தெனப்
பல்விதை யுழவிற் சில்லே ராளர்
பனித்துறைப் பகன்றைப் பாங்குடைத் தெரியல்
கழுவுறு கலிங்கங் கடுப்பச் சூடி





# பதிற்றுப் பத்து.

யிலங்குகதிர்த் திருமணி பெறாஅ
மகன்கண் வைப்பி னூடுகிழ வோர்யே.

இதுவும்அது.

பெயர்-(அ) மாசிதறிருக்கை.

௫. கடல்நீந்தியமரம் - மரக்கலம்.

௮. மாசிதறிருக்கையென்றது பகைவரிடத்துக்

கொள்ளப்பட்ட

மாக்களே வளையாது அளவிறக்கக்கொடுக்கும் பாசறையிருக்கையென்றவாறு.

இச்சிறப்பானே, இதற்கு 'மாசிதறிருக்கை' என்று பெயராயிற்று.

(க0) தண்டளிசொரிந்தென (கக) ஏராளர் (கச) கதிர்த்திருமணி பெறூஉம் (கரு) நாடெனக்கூட்டி, மழைபெய்தலானே ஏராளர் உழுது விளைத்துக்கோடலேயன்றி உழுத இடங்கள்தோறும் ஒளியையுடைய திருமணிகளை எடுத்துக்கொள்ளுநாடென வுரைக்க.

கக. பல் விதை உழவின் சில்லேராளரென்றது பலவிதையுழவாற் பெரியராயிருப்பினும் தம்குலத்தானும் ஒழுக்கத்தானும் சிறிய ஏராளரென்றவாறு.

‡ சின்மையை, சின்னூலென்றதுபோல ஈண்டுச்சிறுமையாகக்கொள்க.

(கஉ) பகன்றைத்தெரியல் (கங) கழுவுறுகலிங்கம் கடுப்பச் சூடித் (கச) திருமணிபெறூஉமெனக் கூட்டி, பகன்றைமாலையைக் கழுவுறுகலிங்க மொப்பச் சூடிக்கொண்டுநின்று திருமணிகளை எடுக்குமெனவுரைக்க.

(கரு) நாடுகிழவோய், (உ) மன்னர் (க) பெருஞ்சமம் ததைய எஃகுயர்த்து (உ) அம்மன்னர்பலர் கூடிச்செறிந்த நிலைமையைக்கொன்று (ங) அருந்துறைபோகிச் (ச) கடலை நீந்தின மரக்கலத்தினை அழிவுசேராது வலியுறுக்கும் (ரு) பண்டவாணிகளைப்போலக் (சு) கைத்தொழுதியின் (ரு) புண்ணை ஒருவுவித்து(சு)வலியதுயளைக்கழித்துப் போரிடத்து வினையிலிருத்

தலே விநோதமாகக்கொண்டு (எ) இரந்தோர்வாழநல்கிப் பின்னும் இரப் போர்க்கு (அ) ஈதலின்மாறாத மாசிதறிருக்கையைக் (கூ) கண்டுபோவேன் வந்தேனெனக்கூட்டி வினைமுடிவுசெய்க.

இதனாற்சொல்லியது, அவன்வென்றிச்சிறப்பும் கொடைச்சிறப்பும் கூறியவாறாயிற்று.

(பி - ம்.) ௩. பண்ணியவினைவர்.

(சா) (எஎ.) எனைப்பெரும் படையனோ சினப்போர்ப் பொறைய
னென்றனி ராயி னாறுசெல் வம்பலிர்
மன்பதை பெயர வரசுகளத் தொழியக்
கொன்றுதோ ளோச்சிய வென்றாடு துணங்கை



௫ மீபிணத் துருண்ட தேயா வாழியிற்
பண்ணமை தேரு மாவு மாக்களு
மெண்ணற் கருமையி னெண்ணின்றோ விலனே
கந்துகோ ளீயாது காழ்பல முருக்கி யு
யுகக்கும் பருந்தி னிலத்துநிழல் சாடிச்
சேண்பரன் முரம்பி னீர்ம்படைக் கொங்க
ராபரந் தன்ன செலவிற்பல்
யானை காண்பலவன் றானை யானே.

துறை - உழிஞையரவம்.

வண்ணமும் தூக்கும் அது.

பெயர் - (ச) வென்றடுதுணங்கை.

௧. மன்பகைபெயரவென்றது படைகெட்டோடவென்றவாறு.

௧-௨. அரசுகளத்தொழியக் கொன்றென்றது அரசனைக் களத்திலே உடலொழிந்துகிடக்கக் கொன்றென்றவாறு.

(௩) கொன்று தோளோச்சிய (௫) பிணமெனக்கூட்டி, முன்பு தம் முடன்பகைத்தவனைக் கொன்று தோளோச்சியாடி இப்பொழுது இவன்களத்திற் பட்டுக்கிடக்கின்றவீரர்பிணமென அவ்வீரர்செய்தியை அவர்பிணத்தின்மேலேற்றிச் சொல்லியவாறாகவுரைக்க.

(௪) வென்றாடுதுணங்கைப் (௫) பிணமென்றது ஊர்களிலேயாடும் துணங்கையன்றிக் களங்களிலே வென்றாடின துணங்கையையுடையபிண மென்றவாறு.

இச்சிறப்பானே, இதற்கு '**வென்றடுதுணங்கை**' என்று பெயராயிற்று.

௫. மீபிணத்தைப் பிணமீயெனக்கொள்க.

௭. எண்ணிற்றேவென்னும் ஓற்று மெலிந்தது.

௮. கந்துகோளீயாதென்றது வினையெச்சவினைத்திரிசொல்.

௯. சாடியென்னும் வினையெச்சத்தினைச் (௧௧) செலவென்னும் தொழிற்பெயரொடுமுடிக்க

(௧௦) ஈர்ம்படை.............................................. ...........

(உ) வம்பலிர், (க) பொறையன் எனைப்பெரும்படையன் (உ) என்ற னிராயின், (கஉ) அவன் தானையிடத்துத் (சு) தேரும் மாவும் மாக்களும் (எ) எண்ணற்கருமையின் எண்ணிற்றிலன்; ஆயின், (கஉ) அவன் தானை யின் யானைதான் எண்ணினையோவெனின், அதுவும் எண்ணினேனல்லேன்; கட்புலனுக்கு வரையறைப்பட்டதுபோல (கக) ஆபரந்தாலொத்த செலவிற்

## கஉ. பதிற்றுப் பத்து.

பல (கஉ) யானையை அவன்றானையானே காண்பலெனக்கூட்டி வினைமுடிவு செய்க.

இதனாற்சொல்லியது, அவன்படைப்பெருமைச்சிறப்புக் கூறியவா றாயிற்று.

இப்பாட்டிற் பொதுப்படப் படையெழுச்சிகூறியதனை உழிஞையர வமென்றது, ஆண்டு அப்படையெழுங்காலத்து நொச்சிமீதிற் போர்குறித் தெழுந்ததை ஒருகாரணத்தான் அறிந்துபோலும்.

(பி - ம்.) ரு. தெய்வயாழின்.

(எ) (எஅ.) வலம்படு முரசி னிலங்குவன விழூஉ
மவ்வெள் ளருவி யுவ்வரை யதுவே
சில்வளை விறலி செல்குவை யாயின்
வள்ளிதழ்த் தாமரை நெய்தலொ டரிந்து

மெல்லியன் மகளி ரொல்குவன ரியலிக்
கிளிகடி மேவலர் புறவுதொறு நுவலப்
பல்பய னிலைஇய கடறுடை வைப்பின்
வெல்போ ராடவர் மறம்புரிந்து காக்கும்
வில்பயி லிறும்பிற் றகடூர் நாறி
பேஎ மன்ற பிறழநோக் கியவ
ரோடுறு கடுமுரண் டுமியச் சென்று
வெம்முனை தபுத்த காலைத் தந்நாட்
டியாடுபரந் தன்ன மாவின்
ஆபரந் தன்ன யானையோன் குன்றே.

துறை - விறலியாற்றுப்படை.
வண்ணமும் தூக்கும் அது.
பெயர் - (௧௦) பிறழநோக்கியவர்.

(௨) அவ்வெள்ளருவி - அழகிய வெள்ளருவி. உவ்வரையென்றது உவ்வெல்லையென்றவாறு. அதுவென்பது அம் மலையென்னுஞ்சுட்டு. வெள்ளருவியையுடைய அதுவெனக்கூட்டுக.

(௫) மகளிர் இயலி (௪) செய்தலொடு தாமரையரிந்து (௬) கிளிகடி மேவலர் புறவுதொறும் நுவலப் (௭) பல்பயன் நிலைஇய கடறெனக்கூட்டி, கிளிகடிமகளிர் நிலவுண்மையானே மருதநிலத்திலேசென்று செய்தலொடு தாமரையரிந்து பின் கிளிகடிதொழிலைமேவுதலையுடையராய்ப் புறவின்புனங்க

டோறும் கிளிகடிபாடலைநுவலப் பல்பயங்களும்நிலைபெற்ற முல்லைநிலமெனவுரைக்க.

(௭) வைப்பிற் (௯) நகடுரெனக்கூட்டுக.

(௮) ஆடவர்காக்கும் (௬) இறும்பெனக்கூட்டுக.

௬. வில்பயிலிறும்பு - படைநிலை.

(௧௦) பிறழநோக்கியவரென்றது தம் சினமிகுதியானே மாற்றார் படைத்தோற்றத்தினை நெறியால் நோக்காது எடுத்தும் படுத்தும் கோட்டியும் பலபடப் பிறழநோக்கும் பகைவராகிய பல்லியமுடையரென்றவாறு.

இச்சிறப்பானே, இதற்குப் '**பிறழநோக்கியவர்**' என்றுபெயராயிற்று.

(௧௬) மாவிளெடுவென ஒடு விரித்து, (௧௨) முனைதபுத்தகாலை மாவிளெடு (௧௪) ஆபரந்தன்ன யானையோனெனவுரைக்க.

(௬) சில்வளைவிறலி, செல்குவையாயின், (௧௭) யானையோன்குன்று (௨) உவ்வெல்லையில் வெள்ளருவியுடைய அதுவெனமாறிக்கூட்டி வினை முடிவுசெய்க.

இதனாற்சொல்லியது, அவன்வென்றிச்சிறப்புக் கூறியவாறாயிற்று.

(**பி - ம்.**) ௭. இதட்டாமரை. ௧௦. பேயமன்ற.

(எகூ.) உயிர்போற் றலையே செருவத் தானே
கொடைபோற் றலையே யிரவலர் நடுவட்
பெரியோர்ப் பேணிச் சிறியோரை யளித்தி
நின்வயிற் பிரிந்த நல்லிசை கனவினும்
பிறர்நசை யறியா வயங்குசெந் நாவிற்
படியோர்த் தேய்த்த வாண்மைத் தொடியோர்
தோளிடைக் குழைந்த கோதை மார்ப
வனைய வளப்பருங் குரையை யதனா
னின்னொடு வாரார் தந்நிலத் தொழிந்து
கொல்களிற் றியானை யெருத்தம் புல்லென
வில்குலை யறுத்துக் கோலின் வாரா
வெல்போர் வேந்தர் முரசுகண் போழ்ந்தவ
ரரசுவா வழைப்பக் கோடறுத் தியற்றிய
வணங்குடை மரபிற் கட்டின்மே லிருந்து
தும்பை சான்ற மெய்தயங் குயக்கத்து
நிறம்படு குருதி புறம்படி னல்லது

மடையெதிர் கொள்ளா வஞ்சுவரு மரபிற்

கடவு ளயிரையி னிலைஇக்
கேடில வாக பெருமநின் புகழே.

**துறை - சேந்துறைப்பாடாண்பாட்டு.**
**வண்ணமும் தூக்கும் அது.**
**பெயர் - (கக) நிறம்படு குருதி.**

(௯) பிரிந்த நின்வயின்நல்லிசையெனக்கூட்டுக.

பிரிதல் - தன்னைவிட்டுத் திக்குவிதிக்குக்களிலே போதல்.

(௬) இசை (௫) அறியாவெனமுற்றாக அறுத்துரைக்க.

க. நின்னொடுவாரார் தந்நிலத்து ஒழிந்தென்றது நின்னைவழிபட்டு நின்னொடு ஒழுகாதிருத்தலேயன்றித் தந்நிலத்திலே வேறுபட்டுநின்றென்ற வாறு.

(க0) யானையெருத்தம்புல்லென (கக) வில்குலையறுத்துக் கோலின் வாரா (கஉ) வேந்தரென்றது முன்பு நின்வழி ஒழுகாது ஒழிந்திருந்தவழிப் பின்பு தாம் களத்து நின்போர்வலிகண்டு இனி நின்வழி ஒழுகுதுமெனச் சொல்லித் தாம் ஏறிய யானையெருத்தம்புல்லென வில்லின் நாணியையறுத்து நின்செங்கோல்வழியொழுகாத வேந்தரென்றவாறு.

கங. அழைத்தல் - வருத்தத்தாற் கதறுதல்.

(கரு) தும்பை சான்ற மெய் தயங்கு உயக்கத்து (கசு) நிறம்படு குருதியென்றது - வீரருடைய தும்பைசூடியதற்கேற்பநின்று பொருதலாற்றலையுடைய உடலானது அசையும்படிவந்த ஒய்வினையுடைய நிறங்களைத் திறந்துவிட்ட குருதியென்றவாறு.

அல்லாதஇடங்களிற் குருதிகொள்ளாமையின், நிறங்களைத் திரக்க ஆண்டு உண்டானகுருதியென்பதாயிற்று.

இச்சிறப்பானே, இதற்கு 'நிறம்படுகுருதி' என்று பெயராயிற்று.

(கூ) கோடறுத்து இயற்றிய (கச) கட்டின்மேலிருந்து (கரு) நிறம் படுகுருதி புறம்படினல்லது (கசு) மடைஎதிர்கொள்ளாக் (கஎ) கடவுளெனக்கூட்டி, அவ்வாறுசெய்ததொருகட்டில் கொடுவந்திட்டதன்மேலிருந்து அவ்வாறுகொடுப்பதொரு பலியுண்டாயினல்லது பலிகொள்ளாக்கடவுளெனவுரைக்க.

(கச) கட்டின்மேலிருந்தல்லது (கரு) குருதிபுறம்படினல்லதென அல்லதென்பதனை இரண்டிடத்தும் கூட்டிக்கொள்க.

கஎ. கடவுளென்றது அவனால் இவ்வாறு வழிபடும் கொற்றவையை. அயிரை - அக்கொற்றவைஉறைவதொருமலை.

## எட்டாம் பத்து.

கசுரு

(எ) கோதைமார்ப, (க) செருவத்து உயிர்போற்றலை; (உ) இரவலர் நடுவண்கொடைபோற்றலை; (ங) பெரியோரைப்பேணிச் சிறியோரைஅளித்தி; (ச) அனையநின்குணங்கள் அளப்பரியை; நீ அவ்வாறொழுகுதலாற் (சு) பிரிந்த நின்வயின்நல்லிசை இனிக் கனவிலும் (ரு) பிறர்நச்சுதலறியா; அவ் வாறு அறியாமையின், (கரு) பெரும, அவ்வாறாகியநின்புகழ் (கஎ) நிலைஇ நின்னிடத்துக்

கேடிலவாகவென மாறிக்கூட்டி வினைமுடிவுசெய்க.

அ. 'அனையவளப்பருங்குரையை' என்றது (௯) 'சிறியோரையளித்தி' என்றதன்பின்னே நிற்கவேண்டுதலின், மாறாயிற்று.

இதனாற்சொல்லியது, அவன்பலகுணங்களும் ஒருங்கு புகழ்ந்து வாழ்த்தியவாறாயிற்று.

(பி - ம்.) ௪. பிறந்த. ௯. வாரார்நின்னிலத்தெளிந்து.

௨. அனையையளப். (௯)

(௨0.) வான்மருப்பிற் களிற்றியானை
யாமலையிற் கணங்கொண்டவ
ரெடுத்தெறிந்த விறன்முரசங்
கார்மழையிற் கடிதுமுழங்கச்
௫ சாந்துபுலர்ந்த வியன்மார்பிற்
றொடிசுடர்வரும் வலிமுன்கைப்
புண்ணுடை யெறுழ்த்தோட் புடையலங் கழற்காற்
பிறக்கடி யொதுங்காப் பூட்கை யொள்வா
ளொடிவி றெவ்வ ரெதிர்நின் றுரைஇ
௧0 யிடுக திறையே புரவெதிர்ந் தோற்கென
வம்புடை வலத்த ருயர்ந்தோர் பரவ
வனையை யாகன் மாறே பகைவர்
கால்கிளர்ந் தன்ன கதழ்பரிப் புரவிக்

கடும்பரி நெடுந்தேர் மீமிசை நுடங்குகொடி
கரு புலவரைத் தோன்றல் யாவது சினப்போர்
நிலவரை நிறீஇய நல்லிசைத்
தொலையாக் கற்பநின் றெம்முனை யானே.

துறை - வஞ்சித்துறைப்பாடாண்பாட்டு.
வண்ணம் - ஒழுகுவண்ணம்.
தூக்கு - செந்தூக்கும் வஞ்சித்தூக்கும்.
பெயர் - (எ) புண்ணுடையெறுழ்த்தோள்.

## பதிற்றுப் பத்து.

உ. கணங்கொள்ளவெனத் திரிக்க. அவரென்றது பகைவரை.

எ. புண்ணுடை எறுழ்த் தோளென்றது எப்பொழுதும் பொருது புண்ணுறாத வலியதோளென்றவாறு.

இச்சிறப்பானே, இதற்குப் 'புண்ணுடையெறுழ்த்தோள்' என்று பெயராயிற்று.

க ௦. புரவெதிர்ந்தோற்கென்றது கொடையேற்றிருக்கின்ற அவனுக்கென்றவாறு.

(கச) கொடி (கரு) தோன்றலென்றதனை எழுவாயும் பயனிலையு மாகக்கொள்க.

(கஎ) நின் தெம்முனைப் (கரு) புலவரையானென மாறிக்கூட்டுக.

(கஎ) தொலையாக்கற்ப, (கக) நின்வீரராகிய உயர்ந்தோர் நின் தெவ்வராகிய (உ) அவருடைய (க) களிற்றியானை (உ) மலையிற் கணங் கொள்ளாநிற்க, (ங) முரசம் (ச) கடிதுமுழங்காநிற்க, அவையிற்றை ஒன் றும் மதியாதே நின்னொடு (௯) ஒடிவில் தெவ்வராகிய அவர் எதிர்நின்று பெயரா (க0) இப்புரவெதிர்ந்தோனுக்குத் திறையையிடுகவெனச் சொல்லி நின்னைப் (கக) பரவும்படி நீ (கஉ) அதற்கேற்ற தன்மையையுடையையான படியாலே (கஎ) நின்தெம்முனைப் (கரு) புலவெல்லையில் நின் (கஉ) பகைவர் (கச) தேர்மிசைக்கொடி (கரு) போகாக்குறித்துத்தோன்றல் யாவ தெனக்கூட்டி வினைமுடிவுசெய்க.

இதனாற் சொல்லியது, அவன் கொடைச்சிறப்பொடு படுத்து வென் றிச் சிறப்புக் கூறியவாறாயிற்று.

(கஎ) தெம்முனைப் (கரு) புலவரைப் (கஉ) பகைவர் (கச) கொடி (கரு) தோன்றல் யாவதென எதிருன் றுவா ரின்மைதோன்றக் கூறிய அத னால், வஞ்சித்துறைப்பாட்டாயிற்று.

முன்னர் ஆறடியும் வஞ்சியடியாய் வந்தமையானே, வஞ்சித்தூக்கு மாயிற்று.

(க0)

இதன்பதிகத்துக் கொல்லிக்கூற்றமென்றது, கொல்லிமலையைச் சூழ்ந்த மலைகளையுடைய நாட்டினை.

நீர்கூர்மீமிசையென்றது, அந்நாட்டு நீர்மிக்க மலையின் உச்சியை.

நொச்சிதந்தென்றது தகடூர்மதிலைக்

கைகொண்டென்றவாறு.

(பதிகம்.)

பொய்யில் செல்வக் கடுங்கோ வுக்கு

வேளாவிக்கோமான் பதுமன் றேவியீன்றமகன்

றொல்லிக் கூற்றத்து நீர்கூர் மீமிசைப்



பல்வேற் றுணை யதிக மானோ
டிருபெரு வேந்தரையு முடனிலை வென்று
முரசுங் குடையுங் கலனுங்கொண்
டுரைசால் சிறப்பி னடுகளம் வேட்டுத்
துகடீர் மகளி ரிரங்கத் துப்பறுத்துத்
தகடூ ரெறிந்து நொச்சிதந் தெய்திய
அருந்திற லொள்ளிசைப் பெருஞ்சேர
லிரும்பொறையை
மறுவில் வாய்மொழி யரிசில்கிழார் பாடினார்
பத்துப்பாட்டு. அவைதாம்: குறுந்தாண்ஞாயில், உருத்தெழு வெள்ளம், நிறந்திகழ் பாசிழை, நலம்பெறு திருமணி, நீஞ்சேற்றியாணர், பாசிதறிருக்கை, வென்றுடுதுணங்கை, பிறழநோக்கியவர், நிறம்படுகுருதி, புண்ணுு

டையெறுழ்த்தோள். இவைபாட்டின்பதிகம்.

பாடிப்பெற்ற பரிசில்: தானும் கோயிலாளும் புறம்போந்துநின்று கோயிலுள்ளவெல்லாம் கொண்மினென்று காணம் ஒன்பதுநூறாயிரத்தொடு அரசுகட்டிற்கொடுப்ப அவர் யான் இரப்ப இதனை ஆள்கவென்று அமைச்சுப்பூண்டார்.

தகடூரெறிந்த பெருஞ்சேரலிரும்பொறை பதினேழியாண்டு வீற்றிருந்தான்.

## எட்டாம்பத்து முற்றிற்று.



கூஅ

# ஒன்பதாம் பத்து.



(அக.) உலகம் புரக்கு முருகெழு சிறப்பின்
வண்ணக் கருவிய வளங்கெழு கமஞ்சூ
லகலிரு விசும்பி னதிர்சினஞ் சிறந்து

கடுஞ்சிலை கழறி விசும்படையூ நிவந்து
காலை யிசைக்கும் பொழுதொடு புலம்புகொளக்
களிறுபாய்ந் தியலக் கடுமா தாங்க விலக்கி
ஒளிறுகொடி நுடங்கத் தேர்திரிந்து கொட்ப
வாசுபுறத் திறுப்பினு மதிர்விலர் திரிந்து
வாயில் கொள்ளா மைந்தினர் வயவர்
பாயிருங் கங்குலும் விழுத்தொடி சுடர்வரத்
தோள்பிணி மீகையர் புகல்சிறந்து நாளு
முடிதல் வேட்கையர் நெடிய மொழியூடக்
கெடாஅ நல்லிசைத் தங்குடி நிறுமா
ரிடாஅ வேணி வியலறைக் கொட்ப அ
நாடடிப் படுத்தலிற் கொள்ளை மாற்றி
யழல்விளை யமைந்த நிழல்விடு கட்டி பொன்
கட்டளை வலிப்பநின் றானை யுதவி
வேறுபுலத் திறுத்த வெல்போ ரண்ணன்
முழவி னமைந்த பெரும்பழ மிசைந்து
சாறயர்ந் தன்ன காரணி யாணர்த்
தூம்பகம் பழுனிய தீம்பிழி மாந்திக்

காந்தளங் கண்ணிச் செழுங்குடிச் செல்வர்
கலிமகிழ் மேவல ரிரவலர்க் கீயுஞ்
சுரும்பார் சோலைப் பெரும்பெயற் கொல்லிப்
பெருவாய் மலரொடு பசும்பிடி மகிழ்ந்து
மின்னுமிழ்ந் தன்ன சுடரிழை யாயத்துத்
தன்னிறங் கரந்த வண்டுபடு துப்பி
னொடுங்கீ ரோதி யொண்ணுத லணிகொளக்
கொடுங்குழைக் கமர்ந்த நோக்கி னயவரப்

## ஒன்பதாம் பத்து.

பெருந்தகைக் கமர்ந்த மென்சொற் றிருமுகத்து
மாணிழை யரிவை காணிய வொருநாட்
பூண்க மாளநின் புரவி நெடுந்தேர்
முனைகை விட்டு முன்னிலைச் செல்லாது
தூவெதிர்ந்து பெறாஅத் தாவின் மள்ளரொடு
தொன்மருங் கறுத்த லஞ்சி யரண்கொண்டு
துஞ்சா வேந்தருந் துஞ்சுக

விருந்து மாக நின்பெருந் தோட்கே.

துறை - முல்லை.
வண்ணம் - ஒழுகுவண்ணம்.
தூக்கு - செந்தூக்கு.
பெயர் - (கரு) நிழல்விடுகட்டி.

உ. கமஞ்சூல் - மேகங்கள்; நிறைந்த சூலுடைமையின், மேகங் கள் கமஞ்சூலெனப்பட்டன.

ச. சிலையொடுகழறியென ஓடு விரிக்க; சிலை - முழங்குதல். கழறல்- இடித்தல். நிவந்து விசும்பு அடையூவென மாறிக்கூட்டுக; விசும்படைதல் - மலையிலேபடிந்தவை எழுந்து விசும்பை அடைதல்.

ரு. காலை இசைக்கும் பொழுதொடு புலம்புகொளவென்றது மேகங் கள் கார்காலத்தை அறிவிக்கின்ற பருவத்தானே வருத்தம் கொள்ளாநிற்கவென்றவாறு.

(ரு) புலம்புகொள (கூ) வயவர் (கச) வியலறைக்கொட்பவென முடிக்க.

கூ. வாயில் கொள்ளா மைந்தினரென்றது தமக்குக் காவலடைத்த இடங்களைச் சென்று கைக்கொள்ளா வலியினையுடையவரென்றவாறு.

ஈண்டு வாயில் - இடம்.

க0. மா இருங்கங்குலென்றது மிகவும் கரிய இராவென்றவாறு.

(கo) கங்குலினும் (கச) கொட்பவென முடிக்க.

கக. தோள் பிணி மீ கையரென்றது குளிராலே தோளைப்பிணித்த அத்தோள்மீது உளவாகிய கைகளையுடையாரென்றவாறு. கஉ. முடிதல்வேட்கையரென்றது தாம் எடுத்துக்கொண்ட போர் முடிதலிலே வேட்கையையுடையாரென்றவாறு.

கரு. நாடு அடிப்படுத்தலிற் கொள்ளை மாற்றியென்றது நாட்டை அடிப்படுத்தினபடியாலே அடிப்படுத்தும் காலத்து உண்டாய்ச்சென்ற கொள்ளையை மாற்றியென்றவாறு.



# பதிற்றுப் பத்து.

கசு. அழல்வினையமைதல் - ஓட்டறுதல்.

இவ்வடைச்சிறப்பானே, இதற்கு 'நிழல்விடுகட்டி' என்று பெய ராயிற்று.

கஎ. கட்டளைவலித்தல் - இன்னார் இன்னதனைப்பெறுகவென்று தரங்களை நிச்சயித்தல். தானைக்குதவியென விரிக்க.

(உo) சாறு அயர்ந்தன்ன (உக) தீம்பிழியென முடித்து விழாக் கொண்டாடினாலொத்த இனிய மதுவெனவுரைக்க.

(உo) காரணி யாணர்த் (உக) தூம்பென்றது கருமையைப்பொருந்தின அழகிய மூங்கிற்குழாயென்றவாறு.

உரு. பெருவாய்மலர் - இருவாட்சி. பசும்பிடி - பச்சிலை.

மகிழ்ந்து - விரும்பிச்சூடியென்றவாறு.

௨௬. மின் உமிழ்ந்தன்ன சுடர் இழையென்றது மேகம் மின்களை உமிழ்ந்தாற்போன்ற சுடர்களையுடைய இழையென்றவாறு.

(௧ ௧) முனை கைவிட்டு முன்னிலைச்செல்லாது (௧௬) துஞ்சாவென முடித்து, நின்னோடு போர்செய்கையைக்கைவிட்டு நின்முன்னேவந்து வழி பட்டுநிற்றலைச் செய்யமாட்டாமையால் துஞ்சாதவெனவுரைக்க.

௩௪. தூ எதிர்ந்து பெறூஅத் தா இல் மள்ளரொடென்றது முன்பு நின்வலியோடெதிர்த்துப் பின் எதிர்க்கப்பெறாத வலியில்லாத மள்ளரொ டென்றவாறு.

(௩௪) மள்ளரொடு (௧௬) துஞ்சாவெனமுடிக்க.

(௧அ) அண்ணல், (௩௧) நின் அரிவைகாணிய (௩௨) நின்தேர் (௩௧) ஒருநாட் (௩௨) புரவிபூண்பதாகவேண்டும்; அதுதான் நின் அரிவைக்கே உடலாகவேண்டுவதில்லை; அதனானே (௧௬) துஞ்சாவேந்தரும் துஞ்சுவார்களாகவேண்டும்; அதுதான் நின் (௧எ) பெருந்தோட்கு விருந்துமாகவேண்டும்; இவ்வாறு இரண்டொருகாரியமாக இதனைச் செய்கவென வினைமுடிவு செய்க.

இதனாற்சொல்லியது, காமவேட்கையிற்செல்லாத அவன் வென்றி வேட்கைச்சிறப்புக் கூறியவாறாயிற்று.

இஃது அவனரிவை கற்புமுல்லையைப்பற்றி வந்தமையால், துறை முல்லையாயிற்று.

(ஸ்ரீ - ம்.) எ. நுடங்கல. ௧௨. புனைவினைநெடுந்தேர்.

௨௨. காந்தட்கண்ணி. ௧ ௪.

தூவின்மள்ளரொடு.

உஎ. வண்டுபடுகதுப்பின்.

(க) (அஉ.) பகைபெரு மையிற் றெய்வஞ் செப்ப
வாரிறை யஞ்சா வெருவரு கட்டேர்ப்



பல்கொடி நுடங்கு முன்பிற் செறுநர்
செல்சமந் தொலைத்த வினைநவில் யானை
கடாஅம் வார்ந்து கடுஞ்சினம் பொத்தி
வண்டுபடு சென்னிய பிடிபுணர்ந் தியல
மறவர் மறல மாப்படை யுறுப்பத்
தேர்கொடி நுடங்கத் தோல்புடை யார்ப்பக்
காடுகை காய்த்திய நீடுநா ளிருக்கை
யின்ன வைகல் பன்னா ளாகப்
பாடிக் காண்கு வந்திசிற் பெரும
பாடுநர், கொளக்கொளக் குறையாச் செல்வத்துச் செற்றோர்
கொலக்கொலக் குறையாத் தானைச் சான்றோர்
வண்மையுஞ் செம்மையுஞ் சால்பு மறனும்
புகன்றுபுகழ்ந் தசையா நல்லிசை
நிலந்தரு திருவி னெடியோய் நின்னே.

துறை - காட்சிவாழ்த்து.
வண்ணம் - ஒழுகுவண்ணமும் சொற்சீர்வண்ணமும்.
தூக்கு - செந்தூக்கு.
பெயர் - (ச) வினைநவில்யானை.

க. பகை பெருமையின் தெய்வம் செப்பவென்றது நின்மனத்து அவரோடு பகைத்தன்மை பெரிதாகையானே நின்பகைவர் நின்னையஞ்சித் தாம்தாம் வழிபடும்தெய்வத்தைத் தத்தமக்குக் காவலென்று சொல்லவென்ற வாறு.

(க) செப்ப (உ) அஞ்சாவென முடிக்க.

உ. ஆர் இறை அஞ்சாக் கட்டூரென்றது வீரர் அரிதாக இறுத்தலை யஞ்சாத பாசறையென்றவாறு.

(௩) பல்கொடி நுடங்கும் (ச) யானையென முடிக்க.

ச. வினை நவில் யானையென்றது முன்பே போர்செய்துபழகின யானையென்றவாறு.

இச்சிறப்பானும், முன்னின்ற அடைச்சிறப்பானும் இதற்கு **'வினை நவில்யானை'** என்று பெயராயிற்று.

(௬) பிடி புணர்ந்து இயலவென்றது (ச) அவ்வினைநவில்யானை (௫) கடாம்வார்ந்து கடுஞ்சினம்பொத்தி அச்சினத்திற்கேற்பப் போர்பெறாமை யிற் பாகர் அதன்சினத்தை அளவுபடுத்தற்குப் பிடியைப்புணர்க்கையான், அப்பிடியொடுபுணர்ந்தும் போர்வேட்டுத் திரியவென்றவாறு.

**௧௪உ.** **பதிற்றுப் பத்து.**

எ. மாய் படை உறுப்பவென்றது இன்னபொழுது போர்நிகழுமென்று அறியாமையின், குதிரைகள் கலனைகட்டி நிற்கவென்றவாறு.

மாவைப் படையுறுப்பவெனவிரித்தலுமாம்.

அ. தேர் கொடி நுடங்கவென்றது தேர் போர்குறித்துப் பண்ணி நின்று கொடிநுடங்கவென்றவாறு.

தோல் புடை ஆர்ப்பவென்றது தோல்களும் முன்சொன்னவற்றின் புடைகளிலே போர்குறித்த நாளிடத்து ஆர்ப்பவென்றவாறு.

(சு) இயல (எ) மறல உறுப்ப (அ) நுடங்க ஆர்ப்பவென்னும் ஐந்தினையும் (கo) பன்னாளாகவென்னும் வினையொடுமுடிக்க.

கூ. காடு கைகாய்த்தியவென்றது பாசறையிருக்கின்றநாள் குளிர் நாளாகையால், விறகெல்லாமுறித்துத் தீக்காய்ந்தவென்றவாறு.

காட்டையென இரண்டாவதனைவிரித்து அதனைக் காய்த்தியவென் பதனுட் போந்த பொருண்மையொடு முடிக்க.

கூ-கo. நீடுநாளிருக்கையையுடைய இன்னவைகலென இரண்டாவது விரிக்க.

கo. இன்னவைகலென்றது இப்பெற்றியையுடைய பாசறையிருக் கின்ற நாட்களென்றவாறு.

கக-கஉ. செற்றோர் கொலக் கொலக் குறையாத் தானையென்றது பகைவர் போருட் கொல்லக்கொல்லக் குறைபடாத தானையென்று அதன் பெருமைகூறியவாறு.

கஙு. புகன்று புகழ்ந்தென்பதனைப் புகன்றுபுகழவெனத் திரிக்க. அசையாநல்லிசை - கெடாநல்லிசை.

புகழ்க்காரணமாகிய (கஎ) வண்மைமுதலியகுணங்களைச் (க

௯ ) சான்றோர் (௧௱) புகன்றுபுகழ்கையாலே கெடாதுநின்ற நல்லபுகழெனக் கொள்க.

(௧௩) நெடியோய், (௧௧) பெரும, (௨) கட்டேரிடத்தே (௯) நீடுநாளிருக்கை (௧௦) இன்னவைகல்தான் பன்னாளானபடியானே (௧௩) நின்னைப் (௧௧) பாடிக் காண்குவந்தேனெனக்கூட்டி வினைமுடிவுசெய்க.

இதனாற்சொல்லியது, அவன்வென்றிச்சிறப்புக் கூறியவாறாயிற்று.

(பி - ம்.) ௯. முன்பிற்செல்வர்.

(௨) (அரு.) கார்மழை முன்பிற் கைபரிந் தெழுதரும்

வான்பறைக் குருகி னெடுவரி பொற்பக்
கொல்களிறு மிடைந்த பஃறோற் றொழுதியொடு
நெடுந்தேர் நுடங்குகொடி யவிர்வரப் பொலிந்து
செலவுபெரி தினிதுநிற் காணு
மோர்க்கே

ஒன்பதாம் பத்து. ௧௪௯

மின்னு தம்மவது நூனே பன்மா
நாடுகெட வெருக்கி நன்கலந் தரூஉநின்
போரருங் கடுஞ்சின மெதிர்ந்து
மாறுகொள் வேந்தர் பாசறை யோர்க்கே.

துறை - தும்பையரவம்.

வண்ணம் - ஒழுகுவண்ணம்.

தூக்கு - செந்தூக்கு.

பெயர் - (௩) பஃறேந்றேழகி.

௧. கைபரிதல் - ஒழுங்குகுலேதல்.

மழைக்கு ஒப்பாகியயானைகளோடு (௩) தோல்களையும் ஒப்பித்துப் பெரியவாகக் கூறியசிறப்பான், இதற்கு 'பஃறேந்றேழகி' என்று பெய ராயிற்று.

௬. பன்மாவென்றது பலபடியென்றவாறு.

௭. எருக்கல் - அழித்தல்.

(௫) நின்னைக்காண்பார்க்கு நின்படைசெல்கின்றசெலவு (௧) மழைக் குழாத்தின்முன்பே ஓரொருகால் ஒழுங்குகுலேந்துசெல்லும் கொக்கொழு ங்குபோலக் (௩) களிறுமிடைந்த பஃறேற்கிடுகின் தொகுதியொடு (௪) தேர் களின் நுடங்குகொடி விளங்காநிற்பப் பொலிவுபெற்றுப் (௫) பெருக இனிது; அவ்வாறு அன்புறுவாரையொழிய (௯) அதுதான் இன்னாது, யார்க் கெனின், (௮) மாறுகொள்வேந்தர் பாசறையோர்க்கென வினைமுடிவுசெய்க.

இதனாற்சொல்லியது, அவன்படைச்சிறப்புக் கூறியவாறாயிற்று.

(பி - ம்.) ௨. போர்ப்ப. ௬-௭. பன்மா, ஹடு.

௯. அம்மதானே. (௩)

(௨௪.) எடுத்தே றேய கடிப்புடை யதிரும் ௪௭ டுந்

போர்ப்புறு முரசங் கண்ணதிர்ந் தாங்குக்

கார்மழை முழக்கினும் வெளில்பிணி நீவி
நுதலணந் தெழுதருந் தொழினவில் யானைப்
பார்வற் பாசறைத் தரூஉம் பல்வேற்
பூழியர் கோவே பொலந்தேர்ப் பொறைய
மன்பதை சவட்டுங் கூற்ற முன்ப
கொடிநுடங் காரெயி லெண்ணுவரம் பறியா
பன்மா பரந்தபுல மொன்றென் றெண்ணாது
வலியை யாதனற் கறிந்தன ராயினும்



வார்முகின் முழக்கின் மழகளிறு மிகீஇத்தன்
கான்முளை மூங்கிற் கவர்கிளை போல
வுய்தல்யா வதுநின் னுடற்றி யோரே
வணங்க லறியா ருடன்றெழுந் துளைஇப்
பெயர்ந்து
கடு போர்ப்புறு தண்ணுமை யார்ப்பெழுந் துவல
நோய்த்தொழின் மலைந்த வேலீண் டுழுவத்து பா
படில் போர்க்களம் முனைபுகல் புகல்வின் மாறா மைந்தரொ
விருப்பம்

டுருமெறி வரையிற் களிறுகிலஞ் சேரக்
காஞ்சி சான்ற செருப்பல செய்துநின்
உ0 குவவுக்குரை யிருக்கை யினிதுகண் டிகுமே
காலை மாரி பெய்துதொழி லாற்றி
விண்டு முன்னிய புயனெடுங் காலைக் மழை
கல்சேர்பு மாமழை தலைஇப் பெய்ய
பல்குரற் புள்ளி னொலியெழுந் தாங்கே.

துறை - வாகை.
வண்ணமும் தூக்கும் அது.
பெயர் - (ச) தொழினவில்யானை.

(க) எடுத்தேறு ஏவிய (உ) முரசமென முடிக்க.
(க) கடிப்பென்பது கடியெனக் கடைக்குறைந்தது.
புடையானென
உருபுவிரிக்க.
ங. முழக்கினுமென்ற உம்மை முரசினது கண்ணின்
அதிர்ச்சி
யிலேயன்றி அதனொடொத்த மழைமுழக்கினுமென * எச்சவும்மை.
ச. தொழில் நவில் யானையென்றது
போர்க்குரியயானையென்று
எல்லாராலும் சொல்லப்படுகின்ற யானையென்றவாறு.
இச்சிறப்பானும், முன்னின்ற அடைச்சிறப்பானும் இதற்கு

'தோழி' னவில்யானை' என்று பெயராயிற்று.

ரு. பார்வற்பாசறை (ச) யானை (ரு) தரூஉமென மாறிக்கூட்டி.

மாற்றாரதுகாவற்பாசறையிற் புக்கு அவ் யானைகளைக் கொண்டுபோது மென்றவாறு.

எ. சவட்டுதல் - உருவழித்தல்.

கூ. பரந்தனவென்பது பரந்தவெனநின்றது.

கஉ. கவர்தல் - அகப்படுத்தல்.

---

* சிறப்புமுமையென்றும் பிரதிபேதமுண்டு.

## ஒன்பதாம் பத்து.

**கசறு**

(கஉ) முளை மூங்கிற் (கக) களிறு (கஉ) கால் கவர் கிளைபோல (கங) நின்உடற்றியோர்உய்தல்யாவதென மாறிக்கூட்டி, முளையானமூங்கி லிற் களிறு காலால் அகப்படுத்தப்பட்டகிளை உய்யாதன்றே ; அஃது அழிந் தாற்போல நின்னை உடற்றியோர் உய்தல் கூடாதெனவுரைக்க.

கறு. நுவலவென்றது படையையுற்றுப் போர்செய்கவென்று சொல்லவென்றவாறு.

கரு. நோய்த் தொழில் மலைந்தவென்றது நோய்த்தொழிலாகிய போரை ஏறட்டுக்கொண்டவென்றவாறு.

வேலீண்டழுவமென்றது, மாற்முர்படைப்பரப்பினை.

கசு. காஞ்சிசான்றவென்றது

நிலையாமையமைந்தவென்றவாறு.

உ௦. குவவு - படைக்குழாம். குரைத்தல் - ஆரவாரித்தல்.

(கசு) செருப்பலசெய்து (உ௦) குரைத்தவெனமுடிக்க.

(உக) காலைமாரியென்றது மாரியிற்பெய்யும் பெயவினை.

தொழிலாற்றியென்றது உழவுத்தொழின்முதலாய தொழில்களைச் செய்வித்தென்றவாறு.

(உரு) கல் சேர்பு மாமழை தலைஇயென்றது (உக) பண்டு ஒருகாலம் பெய்து ஆற்றி (உஉ) வரைக்கட்போயினபுயல் நெடுங்காலம்பெய்யாத நிலைமைக்கண்ணே பின்பு பெய்வதாகக் கல்லைச்சேர்ந்து மழைபெய்யவென்ற வாறு.

தலைஇயென்பதனைத் தலையவெனத்திரிக்க.

(ரு) பூழியர்கோவே, பொறைய, (எ) முன்ப, (அ) பகைப்புலத்து

(அ) ஆரெயில்கள் எண்ணுவரம்பறியா ; (கூ) பன்மா பரந்தன ; ஆகையால்,

பகைப்புலம் நமக்கு வெலற்குஅரியதொன்றென்று எண்ணாது (க௦) நீஆண்டு

வல்லுநையானபடியை முன்பு அறியாது (கரு) நின்னைஉடற்றியோர் இன்று

போர்செய்துஅதனை (க௦) அறிந்தாராயினும் அவர் நின்னொடு (கச) உட

ன்று எழுந்து உழாஇ அதனையே பின்னும் அறிவதல்லது நின்னை வணங்கல் அறிகின்றிலர்; இனி அவர் (கஉ) முனைமுங்கிலிற் கால்கவர்கினைபோல அழிவ

தல்லது (கரு) உய்யவுங்கருதுவது யாவது? (உஉ) நெடுங்காலம்பெய்யாத (உரு) மழை பெய்தவழிப் (உச) பலகுரலையுடைய புள்ளின் ஒலியெழுந்தாற்

போல, நெடுங்காலம் போர்செய்யாதுநின்று (கரு) அவ்வுடற்றியோர் (கசு)

வேலீண்டு அழுவத்துச் (கரு) சான்ற செருப்பலசெய்து நின் (உ0) பல

படைக்குழாம் ஆரவாரிக்கின்றஇருப்பினை யாம் இனி துகண்டே மென மாறிக்கூட்டிவினைமுடிவுசெய்க.

(கச) 'உடன்றெழுந் துழாஇ வணங்கலறியார்' என்பது (க0)

'அறிந்தனராயினும்' என்பதன்பின் நிற்கவேண்டுதலின், மாறாயிற்று.

கசு

## கசுஅ பதிற்றுப் பத்து.

இதனாற்சொல்லியது, அவன்வென்றிச்சிறப்புக் கூறியவாறாயிற்று.

(பி - ம்.) சு. புலமென்றெண்ணாது.

(ச)

(அரு.) நன்மரந் துவன்றிய நாடுபல தரீஇப்
பொன்னவிர் புனைசெய லிலங்கும் பெரும்பூ
ணொன்னாப் பூட்கைச் சென்னியர் பெருமா
னிட்ட வெள்வேன் முத்தைத் தம்மென

பதிற்-14இ | முன்றினை முதல்வர் போல நின்று

தீஞ்சுவை திலைஇய திருமா மருங்கிற்
கோடுபல விரிந்த நாடுகா ணெடுவரைச்
சூடா நறவி னுண்மகி ழிருக்கை
யரசவை பணிய வறம்புரிந்து வயங்கிய
க0 மறம்புரி கொள்கை வயங்குசெந் நாவி
னுவலை கூராக் கவலையி னெஞ்சி
னனவிற் பாடிய நல்லிசைக்

கபிலன் பெற்ற வூரினும் பலவே.

துறை - செந்துறைப்பாடாண்பாட்டு.

வண்ணமும் தூக்கும் அது.

பெயர் - (எ) நாடுகாணெடுவரை.

௩. ஒன்னாப் பூட்கை - பிறர்க்கு அப்படிச்செய்யப் பொருந்தாத மேற்கோள். சென்னியர்பெருமானையென்பதனுள், இரண்டாவது விகாரத்தாற் றொக்கது.

௪. முத்தைத் தம்மென - முன்னே தம்மினென ; முந்தை -

முத்தை
யென வலித்தது.

(ரு) முதல்வர்போல (சு) அறம்புரிந்துவயங்கியவென
முடிக்க.

சு - க0. அறம்புரிந்துவயங்கிய கொள்கையென்றது ம
றம்புரி
யென்றது, அறத்திற்கு இடையீடுபடவருவழி அதனைக்காத்தற்கு
அவ்வறக்
கொள்கை மறத்தொடுபொருந்துமென்றற்கு.

எ. நாடுகாண் நெடுவரையென்றது தன்மேலேறி
நாட்டைக்கண்டு
இன்புறுதற்கு ஏதுவாகிய ஒக்கமுடைய மலையென்றவாறு.

இச்சிறப்பானே, இதற்கு 'நாடுகாணெடுவரை'
என்று பெயராயிற்று.

அ. சூடாநறவு - மதுவிற்கு வெளிப்படை.

க0. கொள்கையைப் (கஉ) பாடியவென இரண்டாவது
விரித்து
முடிக்க.

(கஉ) நனவிற்பாடியவென்றது (க0) வயங்கிய செங்நாவினானும் (க க) உவலைகூராக் கவலையில்நெஞ்சினானும் மெய்ம்மையாற்பாடிய வென்ற வாறு.

க ரு. கபிலனென்ற தொடைக்கேற்ப நவிலப்பாடியவென்பதூஉம் பாடம்,

இளஞ்சேரவிரும்பொறை (ரு) சென்னியர்பெருமானுடைய (க) நாடுகள்பலவற்றையும் எமக்குக் கொண்டுதந்து (ரு) அச்சென்னியர்பெருமானை (ச) எம்முன்னே பிடித்துக்கொண்டுவந்துதம்மினெனத் தம்படைத்தலைவரை ஏவச் சென்னியர்பெருமான்படையாளர் பொருது தோற்றுப் (ச)போகட்ட வெள்வேல் செல்வக்கடுங்கோவாழியாதனென்பவன் (எ) நாடுகாணெடு வரையின் (அ) நாண் மகிழிருக்கைக்கண்ணே (ரு) தன்முன் இணைமுதல்வரைப் போல (கூ) அரசவைபணிய அறம்புரிந்துவயங்கிய (க 0) மறம்புரிகொள்கை யைப் (கஉ) பாடின (க ரு ) கபிலன்பெற்றவூரினும் பலவென மாறிக்கூட்டி வினைமுடிவுசெய்க.

சென்னியர்பெருமானைத் தம்மென மாறவேண்டுதலின், மாறுயிற்று.

இனிப் பிறவாறு மாறிப் பொருளுரைப்பாருமுளர்.

இதனாற்சொல்லியது, அவன் முன்னோருடைய கொடைச் சிறப் பொடுபடுத்து அவன் வென்றிச்சிறப்புக் கூறியவாறுயிற்று. (ௐ)

(அகூ.) உறலுறு குருதிச் செருக்களம் புலவக்

கொன்றமர்க் கடந்த வெந்திறற் றடக்கை
வென்வேற் பொறைய னென்றலின் வெருவர
வெப்புடை யாடூஉச் செத்தனென் மன்யா
னல்லிசை நிலைஇய நனந்தலை யுலகத்
தில்லோர் புன்கண் டீர நல்கு
நாடல் சான்ற நயனுடை நெஞ்சிற்
பாடுநர் புரவல னாடுநடை யண்ணல்
கழைநிலை பெறாஅக் குட்டத் தாயினும்
புனல்பாய் மகளி ராட வொழிந்த
பொன்செய் பூங்குழை மீமிசைத் தோன்றுஞ்
சாந்துவரு வானி நீரினுந்
தீந்தண் சாயலன் மன்ற தானே.

இதுவும்அது.

பெயர் - (௨) வெந்திறற்றடக்கை

## ௭௮. பதிற்றுப் பத்து.

௧. உறலுறுகுருதியென்றது நிலத்திலே உறுதன் மிக்க குருதி யென்றவாறு.

(௧) 'உறலுறு' என்பதுமுதலாக முன்னின்ற அடைச்சிறப்பான் இதற்கு (௨) 'வெந்திறற்றடக்கை' என்று பெயராயிற்று.

௫. நிலைஇயவென்றது ஈண்டு வினையெச்சம்.

கஉ. வருவானியென்றது வினைத்தொகை. வானியென்பது ஓர் யாறு.

இளஞ்சேரலிரும்பொறையை எல்லாரும் (௯) வெருவரச் (க) செருக்களம்புலவக் (உ) கொன்றமர்க்கடந்த தடக்கைப் (௩) பொறைய னென்று சொல்லுகையாலே, (௪) யான் அவனை வெப்பமுடையா னொருமகனென்று முன்புகருதினேன்; அஃது இப்பொழுது கழிந்தது; அப்பொறையனாகிய (அ) பாடுநர்புரவலன், ஆடுநடையண்ணல் யான் தன்னொடு கலந்திருந்தவழித் தன்னாட்டு (கஉ) வானியென்னும் யாற்றுநீரினும் (க௩) சாயலனாயிருந்தானென்றுனெனக்கூட்டி வினைமுடிவுசெய்க.

இதனாற்சொல்லியது, அவன் வன்மைமென்மைச்சிறப்புக் கூறியவாறாயிற்று.

(பி - ம்.) உ. அமர்கடந்த.

(௬) (அஎ.) சேன்மோ பாடினி நன்கலம் பெறுகுவை

சாந்தம் பூழிலொடு பொங்குநுரை சுமந்து
தெண்கடன் முன்னிய வெண்டலைச் செம்புன
லொய்யு நீர்வழிக் கரும்பினும்
பல்வேற் பொறையன் வல்லனு லளியே.

துறை - விறலியாற்றுப்படை.

வண்ணமும் தூக்கும் அது.

பெயர் - (௩) வெண்டலைச்செம்புனல்.

உ. பூழில் - அகில்.

௩. முன்னியவென்றது ஈண்டுப் பெயரெச்சம்.

௩. வெண்டலைச் செம்புனலென முரண்படக்கூறியவாற்றானும், முன்னின்ற அடைச்சிறப்பானும் இதற்கு 'வெண்டலைச்செம்புனல்' என்று பெயராயிற்று.

செம்புனலென்றது செம்புனலையுடைய யாற்றினை.

ச. நீர்வழிஒய்யும் கரும்பெனக்கூட்டி நீரிடத்துச்செலுத்துங் கரும் பென்க.

கரும்பென்றது, கருப்பந்தெப்பத்தினை.



(ரு) பல்வேற்பொறையன் (௩) வெண்டலைச்செம்புனலையுடைய யாற்றிற் (ச) செலுத்தும் கருப்பம்புணையினும் (ரு) அளித்தல்வல்லன்; ஆதலால், அவன்பாலே (க) பாடினி, செல்; செல்லின், நன்கலம் பெறுகுவை யெனக்கூட்டி வினைமுடிவுசெய்க.

இதனாற் சொல்லியது, அவன் அருட்சிறப்புக் கூறியவாறாயிற்று.

(அடி.) வையக மலர்ந்த தொழின்முறை யொழியாது
கடவுட் பெயரிய கானமொடு கல்லுயர்ந்து
தெண்கடல் வளைஇய மலர்தலை யுலகத்துத்

தம்பெயர் போகிய வொன்னார் தேயத்
துளங்கிருங் குட்டந் தொலைய வேலிட்
டணங்குடைக் கடம்பின் முழுமுத றடிந்து
பொருமுர ணெய்திய கழுவுள் புறம்பெற்று
நாம மன்னர் துணிய நூறிக்
கால்வல் புரவி யண்ட ரோட்டிச்
சுடர்வீ வாகை நன்னற் றேய்த்துக்
குருதி விதிர்த்த குவவுச்சோற்றுக் குன்றோ
டுருகெழு மரபி னயிரை பரைஇ
வேந்தரும் வேளிரும் பின்வந்து பணியக்
கொற்ற மெய்திய பெரியோர் மருக
வியலுளை யரிமான் மறங்கெழு குருசில்
விரவுப்பணை முழங்கு நிரைதோல் வரைப்பி
னுரவுக்களிற்று வெல்கொடி நுடங்கும் பாசறை
யாரெயி லலைத்த கல்கால் கவணை
நாரரி நறவிற் கொங்கர் கோவே
யுடலுநர்த் தபுத்த பொலந்தேர்க் குருசில்
வளைகடன் முழவிற் றொண்டியோர் பொருந
நீநீடு வாழிய பெரும நின்வயிற்
றுவைத்த தும்பை நனவுற்று வினவு
மாற்றருந் தெய்வத்துக் கூட்ட முன்னிய

புனன்மலி பேரியா றிழிதந் தாங்கு
வருநர் வரையாச் செழும்பஃ றூரங்
கொளக்கொளக் குறையாது தலைத்தலைச் சிறப்ப

## கஞ0 பதிற்றுப் பத்து.

வோவத் தன்ன வுருகெழு நெடுநகர்ப்
பாவை யன்ன மகளிர் நாப்பட்
புகன்ற மாண்பொறிப் பொலிந்த சாந்தமொடு
தண்கமழ் கோதை சூடிப் பூண்சுமந்து
திருவிற் குலைஇத் திருமணி புரையு முருகெழு
முருகெழு கருவிய பெருமழை சேர்ந்து
வேங்கை விரிந்து விசும்புறு சேட்சிமை
யருவி யருவரை யன்ன மார்பிற்
சேணுறு நல்லிசைச் சேயிழை கணவ
மாகஞ் சுடர மாவிசும் புகக்கு
ஞாயிறு போல விளங்குதி பன்னா
ளீங்குக் காண்கு வந்தனென் யானே
யுறுகா லெடுத்த வோங்குவரற் புணரி
துண்மண லடைகரை யுடைதருந்
தண்கடற் படப்பை நாடுகிழ வோயே. பக்கம்

துறை - செந்துறைப்பாடாண்பாட்டு.
வண்ணமும் தூக்கும் அது.
பெயர் - (கஅ) கல்கால்கவணை.

க. வையகம் மலர்ந்த தொழிலென்றது வையகத்திற்பரந்த அரசர் தொழிலென்றவாறு.

(க) தொழின்முறைஒழியாது (கச) கொற்றமெய்தியவென முடிக்க.

உ. கடவுட் பெயரிய கானமென்றது, விந்தாடவியை. கடவுளென்றது, ஆண்டு உறையும் கொற்றவையினை. கடவுளினென விரிக்க. கல் ஆயரவெனத் திரிக்க.

கஉ. அயிரையென்றது, அயிரைமலையுறையும் கொற்றவையினை.

கஅ. கல்கால்கவணையென்றது கற்களைக் கான்றாற்போல இடையறாமல்விடும் கவணென்றவாறு.

இச்சிறப்பானே, இதற்கு 'கல்கால்கவணை' என்று பெயராயிற்று.

உக. துவைத்ததும்பையென்றது எல்லாராலும் புகழ்ந்துசொல்லப்பட்ட தும்பைப்போரென்றவாறு.

(உக) நனவுற்றுவினவும் (உச) தெய்வமென்றது அத்தும்பைப் போரை நினக்கு
யென்றவாறு.

வென்றிதருதற்கு மெய்ம்மையுற்றுவினவும் கொற்றவை

(உச) தெய்வத்துக் கூட்டமுன்னிய (உரு) யாறென்றது அத்தெய்வம் கூடியுறைதலையுடைய அயிராமலையைத் தலையாகக்கொண்டு ஒழுகப் பட்ட யாறென்றவாறு.

தெய்வம் கூடியுறைதலையுடைய அயிரா தெய்வத்துக் கூட்டமெனப் பட்டது.

உரு. இழிதந்தாங்கென்றது அவ்வியாறு மலையினின்று இழிந்தாற் போலவென்றவாறு.

(உஎ) சிறப்ப (கூஅ) விளங்குதியெனமுடிக்க.

க ௦. பொறியென்றது உத்தம இலக்கணங்களை. பொறியொடு சாந்தமொடுவென ஒடுவை இரண்டற்கும் கூட்டியுரைக்க. ஒடு - வேறுவினை யொடு.

(கூக) கோதையென்றது, முத்தாரத்தினை.

(கூ க) சூடிச் சுமந்தென்னும் வினையெச்சங்களை (கூரு) வரையன்ன வென்பதனுள், அன்னவென்பதனொடு முடிக்க.

(கூஉ) விற்குலைஇ (கூச) வேங்கை விரிந்தென்னும்வினையெச்சங் களைத் திரித்து வில்குலவ வேங்கைவிரியத் (கூஉ) திருமணிபுரையும் (கூ கூ) உருகெழுகருவிய பெருமழைசேர்ந்து (கூச) விசும்புறு சேட்சிமை (கூரு) அருவியருவரையென மாறிக்கூட்டி, இதனைக் குறைவுநிலையுவமை யில் வழு வமைதியாக்கிப் பொறிக்கு வேங்கைப்பூ உவமமாகவும் கோதைக்குத் திருவில் உவமமாகவும் பூணிற்கு அருவி

உவமமாகவும் சாந்திற்கு உவமமில்லையாகவு முரைக்க. இவ்வாறு இடர்ப்படாது வாளா துமலையையுரைப்பினும் அமையும்.

௩அ. விளங்குதியென்பது ஈண்டு முன்னிலையேவல்.

௪௦. உறுகால் எடுத்த புணரியெனக்கூட்டுக.

(க௪) பெரியோர் மருக, (கரு) மறங்கெழுகுருசில், (க௯) கொங்கர் கோவே, (உ௦) பொலந்தேர்க்குருசில், (உக) தொண்டியோர்பொருந, (உஉ) பெரும, (௩௬) ம் சயிழைகணவ, (௪உ) நாடுகிழவோய், (௩௯) ஈங்கு நிற்காண்கு வந்தேன் ; (உஉ) நீ நீடுவாழ்வாயாக, (உ௬) பலதாரம் (உ௭) கொளக் கொளக்குறையாமல் சிறப்ப (உ௯) மகளிர்நாப்பட் (௩அ) பன்னாள் ஞாயிறு போல விளங்குவாயெனமாறிக்கூட்டி வினைமுடிவுசெய்க.

இதனாற் சொல்லியது, அவன் கொடைச்சிறப்பும் காமவின்பச்சிறப் பும் உடன்கூறி வாழ்த்தியவாறாயிற்று.

(பி - ம்.) உ௭. சிறந்து.

(அ) (அ௯.) வானம் பொழுதொடு சுரப்பக் கானந்

தோடுறு மடமா னேறுபுணர்ந் தியலப் நொகுதி

புள்ளு மிஞிறு மாச்சினை யார்ப்பப்

௩௧௫. பதிற்றுப் பத்து.

பழனுங் கிழங்கு மிசையற வறியாது
பல்லா னன்னிரை புல்லருந் துகளப்
பயங்கடை யறியா வளங்கெழு சிறப்பிற்
பெரும்பல் யாணர்க் கூலங் கெழும
நன்பல் லூழி நடுவுநின் றொழுகப்
பல்வே றுரும்பொரை நின்கோல் செம்மையி
னளி னளி னடுதொழு தேத்த
வுயர்நிலை யுலகத் துயர்ந்தோர் பரவ
வரசியல் பிழையாது செருமேந் தோன்றி
நோயிலை யாகியர் நீயே நின்மாட்
டடங்கிய நெஞ்சம் புகர்படு பறியாது
கனவினும் பிரியா வுறையுளொடு தண்ணெனத்
தகர நீவிய துவராக் கூந்தல்
வதுவை மகளிர் நோக்கினர் பெயர்ந்து
வாழ்நா ளறியும் வயங்குசுடர் நோக்கத்து
நீரொடு புரையுங் கற்பின்
வாணுத லரிவையொடு காண்வரப் பொலிந்தே.

துறை - காவன்முல்லை.

வண்ணமும் தூக்கும் அது.

பெயர் - (கரு) துவராக்கூந்தல்.

ச. மிசை அறவு அறியாமலெனத் திரிக்க.

அ. நடுவென்றது, நடுவுநிலைமையை.

கஉ. பிழையாமலெனத் திரிக்க.

கங. துவராக்கூந்தலென்றது எப்பொழுதும் தகரமுதலியன நீவு கையால் ஈரம் புலராத கூந்தலென்றவாறு.

இச்சிறப்பானே, இதற்கு 'துவராக்கூந்தல்' என்று பெயராயிற்று.

(கரு) உறையுளொடு (கச) நெஞ்சம் புகர்படுபு அறியாதென மாறிக் கூட்டி அறியாதென்பதனை அறியாமலெனத்திரித்து அதனைப் (கக) புரையு மென்றதனொடு முடிக்க.

உறையுளொடு மீனொடுவென்ன நின்ற ஒடுக்கள் வேறுவினையொடு.

(கூ) பல்வேலிரும்பொறை, நின்கோல் செம்மையாலே, (க) வானம் சுரப்பக் கானம் (உ) ஏறு புணர்ந்து இயலச் (கூ) சினையிற் புள்ளும் மிஞிறும் ஆர்ப்ப (ச) பழனும் கிழங்கும் மிசையறவறியாதொழிய (ரு) ஆனிரா புல்



லருந்துகளக் (எ) கூலம் கெழூம (அ) ஊழி நடுவுநின்று ஒழுக (கo) நாடு தொழூதேத்த (கக) உயர்நிலையுலகத்து உயர்ந்தோர் பரவ (கஉ) அரசியல் பிழையாதொழியச் செருவில் மேம்பட்டுத் தோன்றி (கங) நீ (உo) நின் அரிவையொடுபொலிந்து (கங) நோயிலையாகியரெனக்கூட்டி வினைமுடிவு செய்க.

இதனாற் சொல்லியது, அவன் நாடுகாவற்சிறப்புக்கூறி வாழ்த்திய வாறாயிற்று.

அவ்வாறு நாடுகாவல்கூறினமையால், துறை காவன்முல்லையாயிற்று.

(பி - ம்:) கூ. இரும்பொறைகோஒல். கஅ. வாழுநாள்.

(கூ)

(கூ0.) மீன்வயி னிற்ப வானம் வாய்ப்ப
வச்சற் றேம மாகி யிருடீர்ந்
தின்பம் பெருகத் தோன்றித் தந்துணைத்
துறையி னெஞ்சாமை நிறையக் கற்றுக்
ரு கழிந்தோ ருடற்றுங் கடுந்தூ வஞ்சா
வொளிறுவாள் வயவேந்தர்
களிறொடு கலந்தந்து
தொன்றுமொழிந்து தொழில்கேட்ப
வகல்வையத்துப் பகலாற்றி
க0 மாயாப் பல்புகழ் வியல்விசும் பூர்தர
வாள்வலி யுறுத்துச் செம்மை பூஉண்
டறன்வாழ்த்த நற்காண்ட
விறன்மாந்தரன் விறன்மருக
வீர முடைமையி னீரோ ரணையை

யளப்பரு மையி னிருவிசும் பனைய
கொளக்குறை படாமையின் முந்நீ ரனைய
பன்மீ னாப்பட் டிங்கள் போலப்
பூத்த சுற்றமொடு பொலிந்து தோன்றலை
யுருகெழு மரபி னயிரை பரவியுங்
கடலிகுப்ப வேலிட்டு
முடவுநர் மிடல்சாய்த்து
மலையவு நிலத்தவு மருப்பம் வௌவிப்





பெற்ற பெரும்பெயர் பலர்கை யிரீஇய
கொற்றத் திருவி னுரவோ ரும்பல்
கட்டிப் புழுக்கிற் கொங்கர் கோவே
மட்டப் புகர்விற் குட்டுவ ரேறே
யெழாஅத் துணைத்தோட் பூழியர்
மெய்ம்மறை
யிலங்குநீர்ப் பரப்பின் மாந்தையோர் பொருந

வெண்பூ வேளையொடு சுரைதலை மயக்கிய
விரவுமொழிக் கட்டூர் வயவர் வேந்தே
யுரவுக்கட லன்ன தாங்கருந் தானையொடு
மாண்வினைச் சாப மார்புற வாங்கி
ஞாண்பொர விளங்கிய வலிகெழு தடக்கை
வார்ந்துபுனைந் தன்ன வேந்துகுவவு மொய்ம்பின்
மீன்பூத் தன்ன விளங்குமணிப் பாண்டி
லாய்மயிர்க் கவரிப் பாய்மா மேல்கொண்டு
காழெஃகம் பிடித்தெறிந்து
விழுமத்திற் புகலும் பெயரா வாண்மைக்
காஞ்சி சான்ற வயவர் பெரும
வீங்குபெருஞ் சிறப்பி னோங்குபுக ழோயே
கழனி யுழவர் தண்ணுமை யிசைப்பிற்
பழன மஞ்ஞை மழைசெத் தாலுந்
தண்புன லாடுந ரார்ப்பொடு மயங்கி
வெம்போர் மள்ளர் தெண்கிணை கறங்கக்
கூழுடை நல்லி லேறுமாறு சிலைப்பச்
செழும்பல விருந்த கொழும்பஃ றண்பணைக்
காவிரிப் படப்பை நன்னா டன்ன
வளங்கெழு குடைச்சூ லடங்கிய கொள்கை
யாறிய கற்பிற் றேறிய நல்லிசை
வண்டார் கூந்த லொண்டொடி கணவ

நின்னுள், திங்க ளனைய வாக திங்கள்
யாண்டோ ரனைய வாக யாண்டே
யூழி யனைய வாக வூழி
வெள்ள வரம்பின வாகென வுள்ளிக் ஒன்பதாம்
பத்து. கறு

நிறு காண்கு வந்திசின் யானே செருமிக்
குருமென முழங்கு முரசிற்
பெருநல் யானை யிறைகிழ வோயே.

துறை - காட்சி வாழ்த்து.
வண்ணம் - ஒழுகுவண்ணமும் சொற்சீர்வண்ணமும்.
தூக்கு - செந்தூக்கும் வஞ்சித்தூக்கும்.
பெயர் - (௩௩) வலிகெழுதடக்கை.

உ. அச்சமென்பது கடைக்குறைந்தது. இருள் - துன்பம்.
௩. தோன்றி இன்பம்பெருகவெனக்கூட்டுக.
௩ - ச. தந்துணைத் துறையென்றது பார்ப்பார்முதலாயினோர் தத்தமக்கு அளவான துறைநூல்களை.
ச. கற்றென்றதனைக் கற்கவெனத்திரிக்க.
ரு. கழிந்தோர் - வலியின்மிக்கோர்.
எ. தந்தென்றது இடவழுவமைதி.
கூ. வையத்துப்பகலாற்றியென்றது வையத்தார்கண்ணே நடுவுநிலைமையைச்செய்தென்றவாறு.
கக. செம்மைபூண்டென்றது செவ்வையைத்

தான்பூண்டென்ற வாறு.

கஉ. அறனென்றது அறக்கடவுளை. நன்காண்டவென்றது வலித்தது.

உ0. கடலிருப்பவென்றது கடலைத் தாழ்க்கவேண்டியென்றவாறு.

(உஉ) அருப்பம்வெளவி (உக)மிடல்சாய்த்தெனக்கூட்டுக.

உரு. பெயரென்றது, பொருளை.

உ௫. கட்டிப்புழுக்கு-கட்டியொடுகூட்டின அவரைப்பரல்முதலான புழுக்கு.

உ௬. மட்டப்புகர்வு - மதுவாகிய உணவு.

உஎ. எழாத்துணைத்தோள் - போரில் முதுகிட்டார்மேற்செல்லாத இணைமொய்ம்பு.

௩௩. ஞாண்பொர - நாண் உரிஞுதலால்.

இவ்வடைச்சிறப்பானே இதற்கு, 'வலிகெழுதடக்கை' என்றுபெய ராயிற்று.

(௩௪) மொய்ம்பினையுடைய (௩௩) தடக்கையென மாறிக்கூட்டுக.

௩௫. பாண்டிலென்றது பாண்டிலையுடைய பக்கரையை.

௩எ. காழெஃகம் பிடித்தெறிந்து (௩அ) விழுமத்திற் புகலுமென்ற தற்குப் பகைவரென்னும் பெயரை வருவித்து, காம்பையுடைய வேலைப்பிடித் தெறிந்து அப்பகைவர்க்கு இடும்பைசெய்கையிலேயே விரும்புமென்றவாறு.

(சஉ) ஆலும் (சஎ) நாடெனமுடிக்க.

சரு. ஏறு மாறு சிலைப்பவென்றது ஏறுகள் ஒன்றற்கொன்று மாறாக முழங்கவென்றவாறு.

(சஃ) நன்றுடன்ன (ருo) ஒண்டொடியென முடிக்க.

(கூ) மருக, (உச) உம்பல், (உரு) கொங்கர்கோவே, (உகூ) குட்டுவ ரேறே, (உஎ) பூழியர் மெய்ம்மறை, (உஅ) மாந்தையோர் பொருந, (ஙo) வயவர்வேந்தே, (ஙக) வயவர்பெரும, (சo) ஓங்குபுகழோய், (ருo) ஒண்டொடி கணவ, (ருஎ) இறைகிழவோய், (கச) ஈரம்உடைமையின் நீரோரனையை, (கரு) அளப்பருமையின் விசும்பனையை; (கசு) கொள்ளக் குறைபடாமையின் முந்நீரனையை; (கஅ) பூத்தசுற்றமொடு பொலிந்துதோன்றுதலையுடையை; ஆதலால், (ருக) நினக்கு அடைத்தநாட்கள் உலகத்தில் திங்களனையவாகவென்றும் நின்னுடையதிங்கள் (ருஉ) யாண்டனையவாக வென்றும் நின்னுடையயாண்டு (ருங) ஊழியனையவாகவென்றும் நின்யாண்டிற்கு ஒப்பாகிய அப் பல்லூழி தம்அளவிற்பட்ட பலவாய்நில்லாது (ருச) வெள்ளவரம் பினவாகவென்றும் நினைத்து (ருரு) நின்னைக் காண்பேன்வந்தேனெனக் கூட்டி வினைமுடிவுசெய்க.

இதனாற்சொல்லியது, அவன்தண்ணளியும் பெருமையும் கொடையும் சுற்றந்தழாலும் உடன்கூறி வாழ்த்தியவாறாயிற்று.

(கூ) 'ஒளிறு' என்பதுமுதலாக நான்கடியும் (கஉ)

'அறன்வாழ்த்த' என்பதுமுதலாக இரண்டடியும் (உ௦) 'கடவிகுப்ப' என்பதுமுதலாக இரண் டடியும் (௩எ) 'காழெஃகம்பிடித்தெறிந்து' என ஓரடியும் வஞ்சியடியாகவந் தமையான், வஞ்சித்தூக்குமாயிற்று.

(ருக) 'நின்னுள்' என்பது கூன்.

(பி - ம்.) உஎ. திணிதோள். ௩ச. வான்றுபுனைந்தன்ன.

உகூ. மயங்கிய. ௩எ. காழ்மூழ்கப். (க௦)

இதன்பதிகத்து விச்சியென்பான் ஒருகுறுநிலமன்னன். வஞ்சி மூதூர்த்தந்தென்றது அவர்களைவென்றுகொண்ட பொருள்களை; பசுவும் எருமையும் ஆடுமென்பாருமுளர்.

அமைச்சியல் மையூர்கிழானைப் புரோசுமயக்கியென்றது தன்மந்திரி யாகியமையூர்கிழானைப் புரோகிதனிலும் அறநெறி அறிவானாகப் பண்ணி

யென்றவாறு.

(பதிகம்.)

குட்டுவ னிரும்பொறைக்கு *மையூர் கிழாஅன்
வேண்மா ளந்துவஞ் செள்ளை யீன்றமகன்
வெருவரு தானையொடு வெய்துறச் செய்துசென்

## ஒன்பதாம் பத்து. கஙஎ

றிருபெரு வேந்தரும் விச்சியும் வீழ

வருமிலைக் கல்லகத் தைந்தெயி லெறிந்து
பொத்தி யாண்ட பெருஞ்சோ ழனையும்
வித்தை யாண்டவிளம் பழையன் மாறனையும்

வைத்த வஞ்சினம் வாய்ப்ப வென்று
வஞ்சி மூதூர்த் தந்துபிறர்க் குதவி
மந்திர மரபிற் றெய்வம் பேணி
மெய்யூ ரமைச்சியன் மையூர் கிழானைப்
புரையறு கேள்விப் புரோசு மயக்கி
யருந்திறன் மரபிற் பெருஞ்சதுக் கமர்ந்த
வெந்திறற் பூதரைத் தந்திவ ணிரீஇ
யாய்ந்த மரபிற் சாந்தி வேட்டு
மன்னுயிர் காத்த மறுவில் செங்கோ
லின்னிசை முரசி னிளஞ்சேர லிரும்பொறையைப்
பெருங்குன்றூர்கிழார் பாடினர் பத்துப்பாட்டு.

(பி - ம்.) * வம்மையூர் கிழான்; மேயூர் கிழான்.

அவைதாம்: நிழல்விடுகட்டி, வினைநவில்யானை, பஃறோற்றொழுதி, தொழினவில்யானை, நாடுகாணெடுவரை, வெந்திறற்றடக்கை, வெண்டலைச் செம்புனல், கல்கால்கவணை, துவராக்கூந்தல், வலிகெழு தடக்கை; இவை பாட்டின்பதிகம்.

பாடிப்பெற்றபரிசில்: மருளில்லார்க்கு மருளக்

கொடுக்கவென்று உவகையின் முப்பத்திராயிரங்காணம் கொடுத்து அவர் அறியாமை ஊரும் மனையும் வளமிகப்படைத்து ஏரும் இன்பமும் இயல்வரப்பரப்பி எண்ணற்கு ஆகா அருங்கலவெறுக்கையொடு பன்னூறாயிரம் பாற்படவகுத்துக் காப்பு மறம் தான்விட்டான் அக்கோ.

குடக்கோ இளஞ்சேரலிரும்பொறை பதினாறாண்டு வீற்றிருந்தான்.

ஒன்பதாம்பத்து முற்றிற்று.

# பதிற்றுப்பத்துச் செய்யுளகராதி.

| செய்யுள். | பக்கம். | செய்யுள். | பக்கம். |
| --- | --- | --- | --- |

---

# பிரயோகவிளக்கம்.



| | பதிற்றுப்பத்துச் செய்யுளின் எண். | பாட்டின்பகுதி. | நூற்பெயர். | நூலின்பகுதி. | சூத்திர முதலியவற்றின் எண். | இன்னுரையெனப்பது. | அச்சுப்புத்தகத்தின் பக்கவெண். |
|---|---|---|---|---|---|---|---|
| ௧ | ௨ | ௩ | ௪ | ௫ | ௬ | ௭ | ௮ |
| | ௧௧ | ௨௩ | தொல். | சொல். | ௩௩௨ | ௩. | ௨௦௮ |
| | | | இ-வி. | | ௨௯௦ | | ௨௫௭ |
| | ,, | ,, | தொல். | சொல், | ௨௩௬ | ,, | ௧௬௨ |
| | ௧௨ | ௨௧ | இ-வி. | | ௨௪௩ | | ௨௧௭ |
| | ,, | ,, | தொல். | பொரு. | ௭௫ | ,, | ௧௬௩ |
| * | ௧௩ | மு. | சீவ. | காந்த. | ௧௬௧ | ,, | ௧௭௯ |
| | ,, | ௭ | தொல். | சொல். | ௩௭௨ | ,, | ௨௨௦ |
| * | ,, | ௧௨ | ,, | ,, | ௩௧௭ | ,, | ௨௦௪ |
| * | ,, | ௧௪ | ,, | ,, | ௩௮௯ | ,, | ௨௨௪ |
| * | ,, | ,, | சீவ. | இலக். | ௨௦௧ | ,, | ௭௦௫ |
| * | ,, | ௨௦,௨௧ | தொல். | பொரு. | ௮௨ | ,, | ௧௯௪ |
| * | ௧௪. | மு. | ,, | சொல். | ௨௯௩ | ,, | ௧௯௪ |
| * | ,, | ௧,௨ | இ-வி. | | ௭௫௭ | | ௭௮௧ |
| * | ,, | மு. | தொல். | பொரு. | ௬௩ | ,, | ௧௨௭ |
| * | ௧௫ | ௧-௧௮ | சீவ. | நாம. | ௪௦ | ,, | ௨௩ |
| | ,, | ௧௦ | தொல். | பொரு. | ௭௫ | ,, | ௧௬௨ |
| * | ௨௧ | ௧-௮ | பத். | திருமு. | | ,, | ௩௬ |
| | ,, | ௧ | தொல். | பொரு. | ௮௬ | ,, | ௧௯௮ |
| * | ,, | ௨௩-௨௯ | திருக். | | ௪௩௨ | பரி. | |
| | ௨௨ | ௬-௫ | தொல், | ,, | ௭௫ | ௩. | ௧௬௦ |
| * | ௨௪ | ௬-௮ | ,, | சொல். | ௩௩௬ | ,, | ௨௦௯ |
| * | ,, | ௨௪ | சீவ. | கனக. | ௨௮௭ | ,, | ௫௦௩ |
| | ,, | ௧௮ | தொல். | பொரு. | ௮௯ | ,, | ௨௦௨ |
| * | ௨௫ | மு. | புறத். | நாடு. | ௧௮ | | |
| | ௨௮ | ,, | | | | | ௧௯௦ |

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| | | | | | ௮௦ | „ | |
| * | ௨௯ | „ | தொல். | பொரு. | ௬௩ | „ | ௧௩௦ |
| * | ௩௦ | „ | „ | „ | ௬௨ | „ | ௪௫௧ |
| * | ௩௦ | ௨௮ ௨௯ | சீவ. | கனக. | ௬௩ | „ | ௧௨௬ |
| * | ௩௩ | மூ. | தொல். | பொரு. | | „ | |

* இது, தனக்குநேரே யுள்ள பதிற்றுப்பத்துச் செய்யுளுக்குக்குறிப்பிட்ட நூல்களின் பழையவுரையில் விசேடவுரையிருத்தலைப் புலப்படுத்துவது.



## பிரயோகவிளக்கம்.

| | பதிற்றுப்பத்துச் செய்யுளின் எண். | பாட்டின்பகுதி. | நூற்பெயர். | நூலின்பகுதி. | சூத்திர முதலியவற்றின் எண். | இன்னுரை யென்பது. | அச்சுப்புத்தகத்தின் பக்கவெண். |
|---|---|---|---|---|---|---|---|
| ௧ | ௨ | ௩ | ௪ | ௫ | ௬ | ௭ | ௮ |
| * | ௪௪ | ௯-௧௦ | பத். | பெரும்பா. | | ந. | ௧௨௫ |
| | ௫௦பதி | மு. | சிலப். | பதி. | | அடி. | ௧௧ |
| * | ௫௨ | ௨௧ | சீவ. | நாம. | ௧௦௫ | ந. | ௪௦ |
| * | ,, | ,, | ,, | குணமா. | ௧௬௪ | ,, | ௨௮௧ |
| * | ௫௬ | மு. | தொல். | பொரு. | ௭௬ | ,, | ௧௭௧ |
| * | ௬௩ | ,, | ,, | ,, | ௮௦ | ,, | ௧௯௦ |
| * | ௬௩ | ௪,௫ | பத். | சிறுபா. | | ,, | ௯௧ |
| * | ௬௫ | ௧௨ | தொல். | சொல். | ௨௩௩ | ,, | ௧௫௯ |
| * | ௬௯ | மு. | ,, | பொரு. | ௯௦ | ,, | ௨௦௪ |
| * | ௭௧ | ,, | தொல். | ,, | ௬௩ | ,, | ௧௩௧ |
| * | ,, | ௨௩-௨௪ | சீவ. | சுர. | ௧௬ | ,, | ௫௪௯ |
| | ௭௩ | ௧ | பத். | சிறுபா. | | ,, | ௮௭ |
| * | ௭௪ | மு. | தொல். | பொரு. | ௭௫ | ,, | ௧௬௨ |
| * | ,, | ,, | ,, | ,, | ௭௬ | ,, | ௧௭௬ |
| * | ௭௪ | ௧௨ | சீவ. | மண். | ௧௦௨ | ,, | ௬௦௨ |
| * | ,, | ௨௧-௨௨ | ,, | ,, | ௪௦ | ,, | ௫௮௬ |
| * | ௭௭ | மு. | தொல். | பொரு. | ௭௬ | ,, | ௧௭௩ |
| * | ௮௦ | ,, | ,, | ,, | ௬௩ | ,, | ௧௩௧ |
| | ௯௦ | ௨௩ | பத். | திருமு. | | ,, | ௩௬ |

# அரும்பத அகராதிமுதலியன.

[எண்களுள் 'பக்' என்பதன்பின்னுள்ளவைகள் பக்கத்தையும் மற்றவைகள் பாடல்கள் அல்லது அப்பாடல்களின் உரைகளையும் குறிப்பன.]

உக

கசுஉ அரும்பதவகராதிமுதலியன.

# அரும்பதவகராதிமுதலியன.

௩௩௪ அரும்பதவகராதிமுதலியன.

எருவை - தலைவெளுத்து உடல்சிவந்திருக்கும்பருந்து ; கழுகுமாம், ௩௯, ௯௭.
எருவைச்சேவலும் எழாலும், ௩௯.
எழாத்தோள் - முதுகிட்டார்மேற் செல்லாத தோள், ௯௦.
எழால் - புல்லூறென்னும் பறவை, ௧௯. [இணைமொ. ௫௦ - ௧௯.]
எழுமுடிமார்பு - ஏழரசரைவென்று அவர்களுடைய ஏழுமுடியாலும் செய்தஹோராரத்தையணிந்த மார்பு, ௧௪, ௧௯, ௪௦, ௪௫. [சிலப். உஅ - ம் காதை, ௧௯௯.]
எழூஉ=எழு - கணையமரம், ௫௩.
எறியர் - எறிதற்கு, ௫௨.
எறும்பு, ௩௦.
எஃகம் - வாள், வேல்.
எஃகினபஞ்சு - பறித்தபஞ்சு, ௫௫.
எஃகுபடையறுத்த கொய்சுவற்புரவி, ௯௨, ௯௪.
ஏஎய் - ஏவி, ௬௧.
ஏணி - எல்லை.
ஏவல்வியன்பணை - சேனையைப் போருக்கு ஏவுதலையுடைய பெருமை பொருந்திய முரசு, ௩௯.
ஏறட்டுக்கொள்ளுதல், [பக். ௧௧௫, ௧௪௫.]
ஏறுவேணி - கோக்காலி.
ஐந்தெயிலெறிந்தது, ௯௦ - பதி.
ஐயவி-கதவிற்குக் காவலாகப் புறவாயிலிலே தூக்கப்படும் துலாமரம்; அப்புக்கட்டுமாம், ௧௯, ௨௨.
ஒகந்தூர், ௭௦ - பதி.
ஒய்யும்-செலுத்தும், ௭௩, ௮௭.
ஒராஅ=ஒருவி - நீங்கி.
ஒன்றுமொழிக்கடங்கிய கொள்கை, ௩௫.
ஒன்றுமொழிமறவர், ௪௧.
ஒன்னு - பொருந்தாத, ௮௫.
ஓச்சம் - உயர்வு, ௪௧.
ஓத்திரநெல், ௭௦-பதி.
ஓபாதி - ஒப்ப, ௪௪, இச்சொல் வைஷ்ணவஸம்பிரதாய உரைகளில் மிகக் காணப்படுகின்றது.
ஓம்பன்மாறு - பாதுகாத்தலால், ௩௪, ௩௫.
ஓய்தகை - ஓய்ந்ததன்மை, ௯௦.
ஓலக்கம் - அரசிருக்கை, ௯௧.
ஓவத்தன்ன [illegible], ௯௧, ௮௮.
ஓவச்சித்திரம், ௮௮.
ஓவு - சித்திரம், ௯௮.
கங்கை, ௫௦-பதி.
[illegible]கடைவீதி, ௩௦, ௯௮, ௭௫.
கட்கொடி நுடங்குமாவணம், ௯௮.
கட்டணம், ௯௪.
கட்டளை - தரம், ௮௧.
கட்டி - பொன், ௮௧.
கட்டிப்புழுக்கு - வெல்லத் தோடு கூட்டின அவரைப்பரல் முதலியவற்றின் புழுக்கு, ௯௦.
கட்டில் - சிங்காதனம்,
கட்டேர் - பாசறை, ௯௮, ௮௨, ௯௦.
கடகு - கேடகம்,
கடம்பின்பெருவாயில் - நன்னனூர், ௪௦ - பதி.
கடல்சேர்ந்தியமரம் - மரக்கலம், ௭௯.
கடல்பிறக்கோட்டியசெங்குட்டுவன், ௫௦-பதி.
கடலிற் கடம்பறுத்தியற்றிய வலம்படுவியன்பணை. ௧௧. ௧௭.

## அரும்பதவகராதிமுதலியன.

கடாவுறீஇ - செலுத்தி.
கடாவேர்பாதி - கடாவைஒப்ப, சச.
கடி—கடிப்பு - குறுந்தடி, அஅ.
கடிமரம் - காவன்மரம், ௩௩.
கடுக்கை - கொன்றை.
கடுந்தேறுறுகிளை - கடிதாகத்தெறுதல் மிக்க குளவியினம், எக.
கடும்பு - சுற்றம்.
கடைஇ - செலுத்தி, ௩க.
கடைஇய - செலுத்திய, எ0.
கடைவீதி, சுஅ.
கண்டி, சரு.
கண்டிகும் - கண்டேம், கக, உச, சரு, சுரு, அச.
கண்ணிகண்ணுதல் - தாங்கள்சூடிய போர்க்கண்ணிக்கேற்ப வினைசெய்யக்கருதுதல், ருஅ.
கணிச்சி - கற்களையுடைக்கும் குந்தாலியென்னும்கருவி, உஉ.
கதவங்காக்கும் கணையெழு, சரு.
கதுவாய் - வடுப்பட்டவாய், சரு.
கந்துகொளீயாது - கட்டுத்தறியில் அடங்காமல், எஎ.
கபிலர் - எ0 - பதி, அசீ.
கபிலை-குடநாட்டதோரூர், சு0-பதி.
கம - நிறைவு.
கரணம், ரு0-பதி.
கரந்தைக்கொடி - கொட்டைக் கரந்தை, ச0.
கரம்பை நிலம், உஅ, எரு.
கருப்பந்தெப்பம், அஎ, [அகநா, சு.]
கருப்பம்பாத்தி, கரு.
கலப்பை - வாத்தியமுட்டுக்களையுடை
கழங்கால் அளவிடுதல், கரு, ௩உ.
கழங்கு - கழற்சிக்காய்.
கழலில் போர்த்தொழிலைப் பொறித்தல், ௩ச.
கழறி - இடித்து, அக.
கழனி - வயல்.
கழனிவாயில், உரு.
கழிப்பி - கழித்து, எசு.
கழுது - பேய்.
கழுதையாலுழுதல், உரு.
கழுவுள் - இடையர்களுக்குத் தலைவனைசிற்றரசன், எக, அஅ.
களைநிலைபெருக்குட்டம் - பற்றுக்கோலுக்கும்நிலையாதபள்ளம், அசு. [அகநா. சு.]
கள்விலை, எரு.
களங்காய்க்கண்ணிநார்முடிச்சேரல், ௩அ, ச0 - பதி.
களிறு - ஆண்பன்றி, உசு.
கற்ப-கல்வியையுடையாய், சரு, அ0.
கற்பு - கல்வி, சரு, ருசு, அ0.
கறையடி - குருதிக்கறைதோய்ந்த அடி, உஅ.
கன்றுடையாயம், எக.
கனவும் - கனவுகாணும், கக.
கா - துலாம், தோட்சுமை, சக, சு0 - பதி.
காக்கை, ௩0.
காக்கைபாடினியார்நச்செள்ளையார், ச0 - பதி.
காஞ்சி - நிலையாமை, சுரு, அச, கூ0.
காஞ்சிசான்றசெரு - நிலையாமையமைந்தசெரு.
காஞ்சிசான்றவயவர் - நிலையாமை

யபை, கடு, உ௯, ௪க.
கலிமகிழ்வு - விநோதமகிழ்ச்சி, கஉ, ௬க.
கவணை - கவண், அஅ.
கவர்கால் - செலவை விரும்பின கால், கக.
கவர்காற்கூளியர், கக.
கவரி, ௪௯.
கவலைகவற்றல் - வருத்தத்தைச் செய் தல், ௪௪, ௬எ.
கவிர் - முள்ளுமுருங்கைமரம்.
குழவமரம் - இளைத்தமரம், எ௪.

யை எப்பொழுதும் உள்ளத்திற் கொண்டிருத்தலமைந்தவீரர்.
காஞ்சிமரம், உ௯, ௬உ.
காஞ்சியாற்றுத்துறைகெழுமணலினும்வாழ்க, ௪அ.
காடு, க௯.
காடுகைகாய்த்தியநீகோளிருகை, அஉ.
காண்குவந்திசின் - காண்பேன்வந் தேன்.
காணம் - பொற்காசு, ௬0 - பதி.
காணியாளர் - மேற்குடிகள், க௯.
காணிலியர் - காணுதொழிக, ௪௪,



## அரும்பதவகராதிமுதலியன.

காணுமோர் - காண்பவர், அ௯,
காதீதற்சிறப்பு, கடு.
காந்தள் தெய்வத்துக்குரிய பூவென் பது, ௬எ.

காந்தளங்கண்ணி - காந்தட்பூமாலை, ௯0, அக.
காப்பியாற்றுக் காப்பியனார், ௪0-பதி.

குடைச்சூல் - சிலம்பு, ௫எ, ௬அ. *[சிலப். ௬கக - ம் காதை, க்கஅ; அகநா. ௬கஎ] குடச்சூலெனவும்வழங்கும்.

குதிரை, உடு, ௬உ, ௬௪, ௬டு, அஉ.
குந்தாலிக்கருவியாற் கிணறுதோண்டுதல், உஉ.

## அரும்பதவகராதிமுதலியன.

கோடாக்கொள்கை, ஙஎ.
கோடியர் - கூத்தர், ருகூ.
கோடு - கொடுமை.
கோடு கூடுமதியம் - முனைகூடியசந்திரன், ஙக.
சங்கிலிருந்து முத்தெடுத்தல், ஙo.
சவட்டுதல் - உருவழித்தல், அஎ.
சாகாட்டாளர் - பண்டியையுடையோர், உஎ.
சாடு - வண்டி, சச.
சாதிங்குலிகம் - சாதிலிங்கம், கக; பெருங்கதையில் இச்சொல்லைப் பரக்கக் காணலாம்.
சாந்தம் பூழில் - சந்தனமும் அகிலும், அஎ.
சாந்தி - பூசை, கூo - பதி.
சாயினம் - மென்மையையுடைய மகளிர்கூட்டம், கூo.
சூரன்முதலியோர் தமக்கு அரணைக் காவன்மரம்வளர்த்தது, கக. [திருமு. பக். கசு.]
சூரியன், ருகூ, சுச, அஅ.
செங்குட்டுவன் வேலெறிந்து கடல்பிறக்கோட்டியது, சரு, சசு, ருo-பதி, அஅ, கூo.
செங்கோல், உஉ, சுகூ.
செத்தனென் - அறிந்தேன், அசு.
செத்து - ஒத்து.
செந்நெல், எக.
செம்மால் - செம்மலே, ஙஎ.
செம்மீன் - அருந்ததி, ஙக.
செருக்கி - மயங்கி, சகூ.
செருப்பு - ஒருமலை, உக.
செல்கு - செல்வேன், எசு.
செல்லாமோதில்பாண்மகள், சுo.
செல்வக்கடுங்கோ, அo-பதி.

ககஅ அரும்பதவகராதிமுதலியன.

செல்வக்கடுங்கோவாழியாதன், எo - பதி, அரு.
செல்வக்கோமான், சுஎ.
றை, அo - பதி.
தகைத்தல்-கட்டுதல், உஉ, டங, சக.
தகைப்பு-மாளிகைக்கட்டணம், சுச.

# அரும்பதவகராதிமுதலியன.

கின்கூ

நனவு - மெய்ம்மை, அரு, அஅ.
நனைமகிழ் - மதுவாலுண்டாகிய மகி ழ்ச்சி, கூரு.
நாட்டம் - சோதிடநூல், உக.
நாட்வேளம், கந, உந, உச.
நாட்டை அடிப்படுத்தல், அக.
நாட்பு=ஞாட்பு - போர்க்களம், சரு.
நாகோண் கெடுவரை, அரு.
நாகோத்தற்சிறப்பு, கந, கரு, உஅ.
நாகோவலாகிய அறம், ருகூ.
நார் - பன்னாடை, கக, அஅ.
நார்முடிச்சேரல் - ஒருசேரன், நகூ, ச0.
நாரை, உந, உகூ, நஉ, ருக, எந.
நாள் திங்களனையவாக, கூ0.
நாளிருக்கை=நாளோலக்கம் - காலை ஓலக்க இருப்பு, கூரு.
நிகழ்தல் - விளங்குதல், சகூ.
நியமம் - வீதி.
நிரையவெள்ளம், கரு.
நிலந்தருதிருவினெடியோய், அ...
நிலைஇய - நிலைப்ப, அகூ.
நிலைச்செரு - காபோரும் செய்... போர், ச0 - பு...; ரு0 - ப...
நிழல்வாழ்...கஎ.
நிறை...சால், க...
நின்புகழ் அயிரை...லையைப்போலவே நிலைக்க, எகூ.
நின்மலைப்பிறந்து நின்கடன் மண்டும் புனல், சஅ.
...ல்கெழுகுட்டுவனுடைய புரோகி தர், ந0 - பதி.
நெடுமென்ஞிஞ்சி, கூஅ.
நெடுமிடல் - அஞ்சியின்இயற்பெயர், நஉ.
நெடுவெள்ளூசி - கெட்டையென்ப தோர் கருவி, சஉ.
நெய்தற்பூ, உஎ, ந0, எக.
நெய்யைத் தலையிற் பெய்து கையைப் பிணிக்கும்தண்டம், உ0 - பதி.
நெருஞ்சி, கந, உகூ.
நெல்லரிசிச்சோறு, எரு.
நேரி - ஒருமலை, ச0, கூஎ.
நேரிப்பொருநன், ச0, கூஎ.
நேரிவாயில் - உறையூரின்தெற்கு வா யிற் கண்ணதோரூர், ரு0 - பதி.
நொசிவு - ...வள்வு, சரு.
நொ...வில், கூஅ.
நோ...லை - நோக்குதலையுடையாய், ருக.
பகல் - நடுவுநிலைமை, கூ0.
ப...ற் வேட்டல், ந0 - பதி.
பகன்றை - இலுகிலுப்பைச்செடி, சி வேதைக்கொடி.
பகன்றைமாலை, எகூ, [ஐங். அஎ, கூஎ.]
பகைப்புலத்தை எரித்தல், கரு, உரு, எக.
பகைமேற் சென்றோர் பல வருட முறைதல், கரு, [புறநா. உஉரு.]
பகையரசனுக்குப்பயந்தோர் பெரிய

பாம்பட்டு அருசா அயலா, உக.
பருதி=பரிதி - தேருருள், வட்டம், சசு, எச.
பருந்தின் சிறகுபோலுங்கந்தை, கஉ.
பருந்தூறளப்ப - பருந்து உறுதற்கு அளப்ப, ருக, எச.
பல்யானைச் செல்கெழு குட்டுவன், ௩௦ - பதி.
பல்வேலிரும்பொறை- இளஞ்சேரலிரும்பொறை யென்னுமரசன், அகூ.
பலதிறத்து மது, சுரு.
புலூர்புகழ் செல்வும், கக.

பாசகா - மடையா, சுஎ.
பாசம் - பேய், எக.
பாசறை - கசு, உச, சுஎ.
பாடிமிழ்பு - ஒலித்து, சுஉ.
பாடினி - பாடுதலையுடையாள், சுக.
பாண்டில் - குதிரைப்பக்கரை, தேர்பூணும்எருதுகள், வட்டத்தோல், சுச, எச, கூ௦.
பாண்டில்விளக்கு - கால்விளக்கு, சஎ, ருஉ, [நெடுநல். கஎரு].
பாணர்க்குப் பொற்றாமரைசூட்டல், ச௦, சஅ.



பாணர்க்கும்விறலிகளுக்கும் கொடுத்தல், ச௦.
பாணர்நாளவை, (அரசன்) ௬அ.
பாணர்புரவல, சுரு.
பாயல் - உறக்கம், ககூ.
பார்வல் - பார்த்தல்.
பார்வற்கொக்கு, உக.
பார்வற்பாசறை - காவற்பாசறை, அச. [மது. உ௩க].
பார்வைப்பிடி, ச௩.
பாரி - ஒருவள்ளல், சுக.

புரை - தேவாலயம், கரு.
புரைஇ=புரந்து - பாதுகாத்து, ரு௦.
புரைபு - ஒத்து, சுரு.
புரைவயின் நல்கி - தேவாலயங்கள் தோறும்கொடுத்து, கரு.
புரோசு - புரோகிதன், எ௦ - பதி, கூ௦ - பதி.
புல்லுடைவியன்புலம்பல்லா பரப்பி, சுஉ.
புலம்பு - வருத்தம், அக.
புலவு - புலால்நாற்றம் நாற, அசு.

பொறுக்கழுநகால், ௩௪.
பொறிமார்பு, சஅ.
பொறுமை, கஎ, ௩௨.
பொறையன் - சேரன், எரு, அச, அகூ.
பொறையன்பெருந்தேவி - செல்வக்கடுங்கோவாழியாதனுடைய தாய், எ௦ - பதி.
பொன்படுவாகை, ச௦ - பதி.
பொன்புனையுழிஞை, உஉ.
பொன்னணிகளுக்கு வேங்கைப்பூ உவமை, ச௦.
பொன்னுடைநியமம், கரு.
போந்தைத்தோடு - பனந்தோடு, ருக.
போந்தைப்பொழில் - பனம்பொழில், ருக.
போர்க்களத்திலாடும் துணங்கைக்கூத்து, சரு, எஎ.
மருக - [illegible], ௬௩.
மருதஞ்சான்ற, எ௩.
மருதநிலம். ௩௦, எஅ.
மருதமரம், உ௩, உஎ.
மருள் - உவமவுருபு, கக.
மலிர்நிறை - நீர்வெள்ளம், உகூ, உஅ, ரு௦.
மழவர்-ஒருவகைவீரர், உக, ருரு, கூ௦-பதி.
மழவர்மெய்ம்மறை, உ௦.
மழவரினுணவு, ருரு.
மழுகிய - மழுங்கிய, உச.
மழைக்குடலான -மழைக்குக்காரணமான, கூகூ.
மழையில்லாமைக்கு உற்பாதமாகிய தூமத்தோற்றம், கூகூ.
மள்ளர் கொள்ளையிடுதல், ச௩.



மறப்புகழ் பலபுகழ்களினும்சிறந்ததென்பது, கஉ.
மறவர் மதிலிலிருத்தல், ச௦.
மறுக்குளம்பு, கூரு.
மறுகுசிறை - வீதியின்இருபுறத்துமுள்ளவீட்டுவரிசை, உ௩, உகூ, ச௩.
மன் - அரசர்கள், கக.
மன்பதை - மக்கட்பன்மை, எஉ.
மன்பதைநிரப்பி, ச௦.
முண்டை=முட்டை, கூ௦.
முண்டைவிளைபழம், கூ௦.
முனைிய - வெறுத்த, கூச.
முத்தை=(முந்தை) - முன்பு, அரு.
முதலை, ரு௩.
முதியபசுக்கள்ஆம்பற்பூக்களைத் தின்னுதல், க௩.
முதிரா - அவரைதுவரைமுதலியன, ருரு.

மார் - அசை, ருகூ, சூ0.
மார்பு, அ0.
மாள - அசைநிலை, அக.
மாற்றருஞ் சிற்றத்துக்கூற்றம், ருக.
மாறு - ஆனுருபின் பொருள்படவ தோரிடைச்சொல், ஙச, ஙரு, ஙஅ, ருச, அ0.
மிகூஇ - மிக்கு, அச.
மிகூஇயர் - மிகுக்கவேண்டி, உஅ.
மிதியற்செருப்பு, உக.
மிளகெற்றியுலக்கை, சக.
மீகை - மேலேயெடுத்தகை, ச0.
மீபிணம் - பிணமீ, எஎ.
மீன்கொத்துக்குருவியின்வாய், சஉ.
முகவை - முகத்தல், உஉ.
முச்சி - கொண்டைமுடி, சங.
முடக்கொல் - முடமானநெல், உகூ, ருஉ.
கச, எஉ, அரு.
மூனை - போர், உரு.
மூங்கிற்குழாய்த்தேன், அக.
மூதா - முதியபசு, கங.
மூய, சஉ.
மூயின - நிரம்பின, உஉ.
மூரி - எருது, சூஎ.
மூழ்த்து - முதிர்ந்து, ஙங.
மூன்றுநதியின்கூடல், ரு0.
மெய்புதையரணம் - கவசம், ருஉ.
மெய்ம்மறை - மெய்புகுகருவி=கவசம், கச, உக, ருரு, ருஅ, ருகூ, சூரு, எங, கூ0.
மென்பால் - மருதம், எரு.
மென்மைக்கு நீர் உவமை, அசு, கூ0.
மேற்தோன்றி, அகூ.
மேவலர் - விரும்புதலையுடையார்.
மேவலை-விரும்புதலையுடையாய், கஅ.

## அரும்பதவகராதிமுற்றியது.

 அரும்பதவகராதிமுதலியன.

---